கழக வெளியீடு : ௮௪௯

மாதவச் சிவஞான முனிவர்

அருளிச்செய்த

# காஞ்சிப் புராணம்

[முதற் காண்டம்]

க. திருநாட்டுப்படலம்

உ. திருநகரப்படலம்

கழகப்புலவர், செல்லூர்க்கிழார்,

திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை

எழுதிய

உரையுடன்

திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி — சென்னை-1

First Edition : Sept., 1956
Reprint : Sept , 1959

# KANJIP-PURAANAM

I. Thirunattuppadalam
II. Thirunagarappadalam



Published by

DIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY. TINNEVELLY, LTD.,
1/140 BROADWAY, MADRAS-1.

Head Office :
98, EAST CAR STREET, TIRUNELVELI.

PAARI ACHAKAM, 127, BROADWAY, MADRAS-1.

# பதிப்புரை

திருவேகம்பத் திறைவர் புகழ்கூறும் இக் காஞ்சிப்புராணம், சொன்னலம் பொருள்நலம் மிக்கது; இறைவன்பாற் பத்தியை வளர்ப்பது; இத்தகைய நூல், இரண்டு காண்டங்களையும் எழுபத்துமூன்று படலங்களையும் கொண்டது. இவற்றுள் முதற்காண்டத்தை அருளிச் செய்தவர், வடமொழி, தென் மொழி நூற்கடலைக் கரைகண்டுணர்ந்த மாதவச் சிவஞான முனிவரராவர். இரண்டாங்காண்டத்தை அருளிச் செய்தவர் அவர்தம் மாணவர் திருவாவடுதுறைக் கச்சியப்ப முனிவரராவர்.

இவ்விருவர் அருளிய இரு காண்டங்களும் பாலொடு தேன் கலந்தாலொத்த இனிய சீர்மைத்தாய இறைவன் திருவிளை யாடல்கள் அத்தனையும் முற்றமுடிய எடுத்து விளக்கும் பெருமை யுடையன; இப்புராணத்தைக் கற்போர், வேறெப் புராணத்தை யும் கற்கவேண்டுவதில்லை. ஏனையவற்றிலுள்ள இறைவனைக் குறித்த வரலா[illegible] [illegible]லப் பெற்றுள்ளன; [illegible]ளன. ஆகலான், சிறந் [illegible]மாகும்.

இந் நூலின் அரிய சிறப்புநோக்கி முதற்காண்டத்து நாட்டுப படலம், நகரப்படலம் இரண்டையும் சென்னைப் பல்கலைக் கழகத்தார் தமிழ்வித்துவான் பாடத்திட்டத்தில் சேர்த்துள்ளா ர்; ஆகவே, தமிழ்வித்துவான் தேர்வுக்குப் பயிலும் மாணவர் கட்கு வாய்ப்பாக நம் கழகப்புலவர், செல்லூர்க்கிழார் திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை யவர்களைக்கொண்டு இரண்டு படலங்கட்கும் பொழிப்புரை, விளக்கம், இன்றியமையாத இலக்கணக்குறிப்பு முதலியன அமைய எழுதுவித்து, அழகிய முறையில் அச்சிட்டு வெளியிட்டுள்ளோம்.

மாணவருலகமும், ஆசிரியவுலகமும், ஆய்வாளர்களும், சைவ நன்மக்களும் இதனை வாங்கிக் கற்று நற்பேறும், இறைவன் பொருள்சேர் புகழ்ச்செல்வத்தை அறிந்து மகிழும் திருவும் பெற்று இலகுவதுடன், எம்மையும் இன்னனபோன்ற நற்பணி யில் ஈடுபாடுறச் செய்விப்பார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# முன்னுரை

## தோற்றுவாய்

உலகம்பல; உலக உயிர்களும் பலவாம்; அவ்வுயிர்த் தொகுதிகள், ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர்கள் வரையுள்ளன. ஆறறிவு படைத்தோர் மக்கள் எனப்படுவர்; ஒன்று முதல் ஐயறிவுடைய உயிர்கள் மாக்களெனப் படுவனவாம். இவ் வியல்பை,

> [1] 'அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
> அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
> ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
> நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன'

எனவரும் திருவாசகத் திருவண்டப் பகுதி அடிகளானும் அறிய லாம்.

இத்தகைய ஆறறிவுபடைத்த மக்கள் ஆய்ந்து முடிவு கண் டதே கடவுள் நெறியாகும். எஃதால் ஆறறிவுடைய மக்கள் கண்டனரெனின் வினவின்? இம் மண்ணுலகில் இயற்கையாக வுள்ள கடலும் மலையும் யாறும் கணக்கற்ற உயிர்ப்பொருள் களும், அவற்றின் பண்பு நலங்களும், வானமும், வானத்தின்கண் கண்ணுக் கெட்டாத் தொலையில் நின்று காட்சியளிக்கும் ஞாயிற்றுமண்டிலம் திங்கள் மண்டிலங்களும், வான்மீன் கூட் டங்களும், பிறவும் கொண்டேயாம். இவைகள், நாள்தோறும் உலவுகின்றன. இம் மண்ணுலகத்தை இவ்வளவு வியப்புறப் படைத்துக் கொடுத்த ஆண்டவன் பேராற்றலையும் அவனது பேரிரக்கப் பண்புகளையும் என்னென்பேம்! என்னென்பேம்!

உலகாயதர் நாற்பூதக் கூட்டுறவால் ஒன்றோடு ஒன்றுகலந்து உலகம் உண்டாகின்றது தெனக் கழறித் தங்கோள் நிறுவுவர்.

1. திருவாசகம், திருவண்டப்பகுதி: க - ச.

நாற்பூதங்கள் தாமே கூடுவதாயின் அவைகட்கோர் வரம்பின்றிக்
கண்டகண்ட வாறன்றோ மாறுற்றுத் திரிதரும்? வானத்தின்கண்
தோன்றும் ஞாயிற்று மண்டிலம் முதலியன காலவரையறை
மாறாது கணக்குத் தவறாது தோன்றலும், மறைதலும், திங்கள்
மண்டிலம் தேய்தலும், மறைதலும், இவைகளால் இரவு பகலும்
ஆகிய சிறுபொழுதும், கார் கூதிர் முதலிய பெரும்பொழுதும்,
மாறி மாறி வருதலும் காண்டுமன்றே! இன்றோர் உயிர் கருவுற
லும் உலகில் அது குழவியாகத் தோன்றலும் வளர்தலும் இளம்
பருவம் பெறலும் மூத்தலும் இறத்தலும் இயற்கையாக நிகழ்
தலையும் காண்டுமன்றே! நாற்பூதச் சேர்க்கையாலோ தன்னிச்சை
யாலோ நிகழ்வதாயின் தம்தம் விருப்பப்படியன்றோ யாவும்
நிகழவேண்டும்? ஓர் மகன் இளைஞனாக - கட்டழகு வாய்ந்த
காளையாக - இன்று காட்சி யளிக்கின்றான்; நாளை அவனே
சொற்றளர்ந்து கோலூன்றிச் சோர்ந்த நடையினனாய்ப் பற்
கழன்றும் நரையும் திரையும் நுரையொத்த ஈளையுடன் இருமிக்
கொண்டு கிழவனாய்ப் பழிக்க இடனாய்த் திரிதருகின்றான். ஏன்
தான் விரும்பாத இக்கிழப்பருவம் போதருகின்றது? இயற்கையா
னன்றோ! எனவே, தன் இயற்கையைக் கடந்து ஆட்டுவிக்கும்
கட்டற்ற ஒன்று ஏதோ இருக்கின்றதென உணர்தல் வேண்டும்.
இவ்வாறுணர்ந்துணர்ந்தே கடவுட் கொள்கையைக் கண்டனர்.

கண்ட சமயங்கள் பல. ஒரு சமயத்தார் கூறுவன மற்றொரு
சமயத்தார்க்கு உதவாதன, ஒவ்வாதனவாய் நிலவுவதைக் காண்
கின்றோம். இதனால் மணிமொழிப் பெருமான் 'உவலைச் சமயங்
கள் ஒவ்வாத சாத்திரமாம்' என்றும், அருணந்தியார், 'ஓதுசம
யங்கள் பொருள் உணரு நூல்கள் ஒன்றோடொன்றொவ்வாமல்
உளபலவும்' என்றும் அருள்வாராயினர்.

இவ்வாறு கருத்து வேறுபாடுற்றுப் பரந்துபட்ட சமயங்
களுள் தொன்று தொட்டதும் உலக இயலுக்கொப்பச் சித்தி
ரித்த இயற்கைச் செப்பமுடையதும் சிறப்பு முறையால் ஒரு
சமயத்தைச் சுட்டுவதாகக் காணக்கிடப்பினும் நுணுகி ஆய்
வார்க்குப் பொதுவான சமயக் கருத்துக்களையும் அறங்களையும்
உலகியல் ஒழுக்கங்களையும் கடவுள் உயிர் உலகம் என்னும் முப்
பொருளுண்மையையும் நன்கெடுத்து விளக்குவதும் எம் சைவ
சமயம் ஒன்றே என்பது ஒருதலையாகும். இதன் அருமை பெருமை
களை நன்கு தெளிவுறவுணர்ந்த மெய்ஞ்ஞானச் செல்வராகிய
தாயுமான அடிகளார், 'சைவ சமயமே சமயம்' என்று தெளிவு
படுத்திக் கூறுவாராயினர். இவ்வாறான இதன் சிறப்புக்குக்
காரணம் கடவுட்கொள்கை ஒன்றுமட்டும் இன்று. இச் சமயத்
தின் உள்ளுறை பொருளாய்,

> [1] 'ஒரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
> ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
> சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
> தேனமுதாய்'

இலகுறும் நுண்பொருளெனக் கொள்க.

## கடவுளின் அருள் உருவம்:

இன்னனவான இயற்கைக்கொத்த சைவசமயத்துக்கு முழு முதற்கடவுளே சிவபெருமானுவர். இவர் அவ்வப்போது உலக வுயிர்கட்கு நலஞ்செய்தற் பொருட்டும் கறவை நினைந்த கன்றெனத் தம்பால் அன்புகொள்ளும் அடியவர் பொருட்டும் அருளுருவத்திருமேனி கொண்டருளுவர். இவற்றையே அருவம், உருவம், அருவுருவம் எனச் சைவசித்தாந்த நூல்கள் கூறும். சிவம், சத்தி, நாதம், விந்து என்னும் நான்கும் அருவுருவத் திருமேனிகள்; மகேசுரன், உருத்திரன், திருமால், பிரமன் என்னும் நான்கும் உருவத் திருமேனிகள்; சதாசிவம் என்னும் திருமேனியே அருவுருவத் திருமேனியாகும். இறைவன் இவற்றைக் கொண்டே ஆக்கல் அளித்தல் அழித்தல் மறைத்தல் அருளலாகிய ஐவகைத் தொழில்களையும் செய்தருளுவன்.

இறைவன் எல்லாப் பொருள்களிலும் கலந்து நீக்கமற நிற்பவனுவன். அவன் உருக் கலவாத இடன் அணுத்துணையும் இன்றாகும். எனவே, அவன் அன்பர் நினைந்த வடிவோடு விரைந்து சென்று அருள்சுரந்தருளுவன். இக் கொள்கையினுலே ஆண்டவனுக்கு-குணங்குறிகடந்து நின்ற இறைவனுக்கு, அவன் றன் நினைவுக்குறியாக - அடையாளமாக – இலிங்கம் போன்ற திருவுருவங்கள் அமைத்து வழிபடலாயினர். 'கல்லிலும் செம்பிலுமோ இருப்பான் எங்கள் கண்ணுதலே' என்னும் ஆன்றோர் வாக்கு, கல், செம்பில் மட்டும் இருப்போனல்லன்; எங்குமே நிறைந்திருப்போன் என்பதைச் சுட்டுவதாகும். இதனை நன்குணர மெய்ஞ்ஞானச் செல்வர் தாயுமான அடிகள்,

> [2] 'பண்ணேன் உனக்கான பூசையொரு வடிவிலே
> பாவித் திறைஞ்ச ஆங்கே
> பார்க்கின்ற மலரூடும் நீயே யிருத்தியப்
> பனிமலர் எடுக்க மனமும்

1. பண்டார மும்மணிக்கோவை, கக : ௩உ-ரு.
2. தாயுமானவர் பாடல்.

நண்ணேன் அலாமலிரு கைதான் குவிக்களனின்
நாணும் என்உள நிற்றிநீ
நான்கும் பிடும்போ தரைக்கும்பி டாதலால்
நான்பூசை செய்யல் முறையோ'

என, அருள்வதும் ஈண்டு அறியத்தக்கதாகும்.

எனவே, ஆண்டவன் இத்தகைய குறிகளில் பாலிற்படு நெய்போல் மறைந்து நின்று வேண்டுங்கால் அன்பர்கட்கு வெளிப்பட்டருளுவன். இதற்குச் சான்றாக.

அன்பே உருவா யமைந்த கண்ணப்பநாயனர் வேட்டமாடித் திருக்காளத்தி மலையை யடைந்தபோது மலையுச்சியில் இறைவன் குறியாகிய இலிங்க உருவைக் கண்டார். உருவம் கல்லானியன்றது; பண்பட்ட அவர்தம் மனம், அதனைக் கல்லெனக் கருதிற்றில்லை; இறையென்றே கருதிற்று' நெக்கு நெக்குருகிற்று; "ஆ! எம் இறைவன் தனியே இருக்கின்றாரே!" என அஞ்சிற்று; உலகுயிர்களை யெல்லாம் காக்கும் ஒருவனைக் காத்து நிற்க எண்ணிற்று; அதனால் அங்கேயே தங்கினார்; தம்முடன் வந்த காடன், நாணன் என்னும் நண்பர் இருவரும் ஊர் செல்ல அழைத்தும் சென்றாரில்லை; அவ்விருவரும் 'வங்கினைப் பற்றி நின்ற வல்லுடும்பென்ன நின்றான்' எனக்கருதி வருந்திச் சென்றனர். பின்னர் இறைவன்பால் நின்றும் நீங்கா இயல்பினராய் ஒழுக, அருள் வடிவான ஆண்டவன் அக் கல்லுருவில் நின்றே காட்சியளித்து,

[1] 'நில்லுகண் ணப்ப! நில்லுகண் ணப்ப! என்
அன்புடைத் தோன்றல் நில்லுகண் ணப்ப!' என்று
இன்னுரை அதனொடும் எழிற்சிவ லிங்கம்
தன்னிடைப் பிறந்த தடமலர்க் கையால்
அன்னவன் றன்கை அம்பொடும் அகப்படப் பிடித்து
அருளினன்'

கண்ணப்பர் கருதியவாறே இறைவன் திருவுரு இறைவனே ஆயிற்று. ஆகவே, கல்லுருவாகவே கருதியார்க்குக் கல்லுருவேயாய், இறையுருவாகவே கருதியார்க்கு இறையுருவேயாய் இலகுதலை உரையளவையாற் காண்டுமன்றோ?

இக் காட்சியளவையானே கருதலளவையுங் கொண்டு இறைவன் திருவடையாளங்களை இறைவன் என்றே கோடலையும்,

1. திருக்கண்ணப்ப தேவர் திருமறம்.

திருக்கோயில்களையும் அவன் அருள் செறிந்த உறையுளா கக் கோடலையும் சைவசமய நெறிக்கண் தலைநிற்பார் கடப் பாடாகக் கொள்ளுதல் வேண்டும். இக் கொள்கைக்கண் உறைத்து நிற்றற்கறியார்மேல் கழிவிரக்கங் கொண்டு பாவுக் கொருவராம் நாவுக்கரசர்,

[1] 'குறிக ளும்அடை யாளமும் கோயிலும்
நெறிக ளும்அவர் நின்றதோர் நேர்மையும்
அறிய ஆயிரம் ஆரணம் ஓதிலும்
பொறியி லீர்மனம் என்கொல் புகாததே'

என்றருளினர். அருணந்தி சிவாச்சாரியாரும், 'கோயிலேது குள மேது? கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்பார்க்கு அறிவுறுத்துவான் வேண்டி, 'நயனமிருண்டு போகாமுன் நடனப் பெருமான்தனைக் காண்மின், நும் நடக்கும் பதங்கள் தளரா முன் நடவுங்கள் திருக்கோயில்கட்கு'என அறைகூவிக் கூறு கின்ற,

[2] 'திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச்
சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவன் அங்கே
உருக்கோலி மந்திரத்தால் எனநினையும் அவர்க்கும்
உளன்எங்கும் இலன்இங்கும் உளன்என் பார்க்கும்
விருப்பாய வடிவாகி இந்தனத்தின் எரிபோல்
மந்திரத்தில் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கும்
உருக்காண ஒண்ணாத பால் முலைப்பால் விம்மி
ஒழுகுவது போல்வெளிப்பட் டருளுவன்அன் பர்க்கே'

என்னும் அறிவுரை காண்மின்.

இவ்வாறாய குறிகளினும் கோயில்களினும் நின்று அன்பர் கட்கு அருள்சுரந்தருளும் ஆண்டவன் ஆங்காங்கே பல ஊர் களிலும் பல குறிகளிலும் நின்று, அருட்கொடை வழங்கினன்; அவ்வாறு வெளிப்பட்ட இடங்கள் பல்லனவாகும். அத்திரு வூர்களுள் ஒன்றே, 'கலைசேர் காஞ்சி', 'தமிழ்சேர் காஞ்சி' என ஆன்றோர்களால் புகழப்பட்ட பெருமை வாய்ந்த காஞ்சிபுர மாகும். இத் திருத்தலம் அம்மையாரால் முப்பானிரண்டறமும் செய்தருளிய பெருமையுடையது; இங்கே இறைவன் தம்

1. அப்பர் தேவாரம், திருமுறை. ௫. பொது, ௯0 : ௬.
2. சிவஞான சித்தியார், பன்னிரண்டாஞ் சூத் : ௩.

அடியவர் பொருட்டு அருளுருவத் திருமேனி தாங்கி அருள் திருவிளையாடல் புரிந்த அற்புதங்களும் பலவாம். அவற்றை விரித்து அரிய செந்தமிழ்ப் பாடலாக மாதவச் சிவஞான முனிவரால் அருளிச்செய்த முதற்காண்டமும், திருவாவடுதுறைக் கச்சியப்ப முனிவரால் அருளிச்செய்த இரண்டாங் காண்டமும் கொண்டு இலகுவது இக் காஞ்சிப் புராணம். இதில் முதற்கண் நின்ற முதற்காண்டத்துத் திருநாட்டுப் படலம், திருநகரப் படலம் இரண்டுக்கும் ஈண்டு எளியேனால் உரை வகுக்கப் பெறுகின்றது. இந் நூலுரைவழி நூலைக் கற்றற்கும், இன் புறற்கும் வாய்ப்பாக ஆங்காங்கே இவ் விருபடலங்களினும் செறிந்திருக்கும் உவமநயம், கருத்துச்செறிவு, கலைக்காட்சி, அரிய சொல்லாட்சி முதலிய நயங்களை அறிந்தவரை வரைவது கடப்பாடாகும். அதனை அன்பர் அறிந்தின்புறுமின்!

## (க) திருநாட்டுப் படலம்

நாடென்பது மக்களும் பல்வகை உயிர்களும் இன்பத்தோடு வாழ்தற்கு இடனாக அமைவது; இன்பமாக வாழ ஆங்கே திங்கள் மும்மாரி பெய்தல் வேண்டும்; பளிக்குருக்கென ஒளி விடும் நீர் பாட்டெனப் பரந்து விரிந்து தெளிந்து ஆழ்ந்து கிடத்தல் வேண்டும்; ஆங்கே நெல்லும் கரும்பும் நீள்குலைத் தெங்கும் வாழையும் கமுகும் வற்று வளங்கொழிப்ப, மஞ்சளும் இஞ்சியும் விஞ்ச மாண்பு தந்து, மக்களும் பிற வேறுயிர்களும் பசியும் பிணியும் பகையுமின்றி வாழ இடனாக இருப்பது நாடாகும். இதனை நன்கு ஆய்ந்துணர்ந்த வள்ளுவர் திருமகன் தம் அறத்தில்,

[1] "நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரும் நாடு."

என்றும்,

[2] "பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து."

என்றும் அருள்வாராயினர்.

இவ்வாறமைந்த சிறப்புமிக்க நாட்டில் இன்பமன்றித் துன்பமேது? நீல ஆடைபோற் பரந்துகிடக்கும் நீர்நிலைகளும், பச்சைப்பசேலெனக் காட்சிதரும் நெல்லும் புல்லும் மரஞ் செடி கொடிகளும் கண்களுக்கு விருந்தூட்டுவனவன்றோ? வண்டின்

1, 2. திருக்குறள் : எ௩௧, எ௩அ.

இன்னொலியும் பறவைகளின் பாட்டிசையும் தவளைகளின் தழங்கு குரலும் காதுக்கு இன்பமூட்டுவனவன்றோ? இச் சிறப்பு மிக்க நாடு, தவஞ்செய்வார்க்குமலைநிடம், பொருள்செய்வார்க்கு மலைநிடம், அருள் செய்வார்க்கு மலைநிடனுகவன்றோ திகழும். செவ்விமிக்க நாடாக இக் காஞ்சியைப் படைத்துக் காட்டு கின்றார் நம் மாதவச்சிவஞான வள்ளலார். இவர் கண்ணுதற் பெருமான் திருவருள் கைவரப்பெற்றோராகலான், நாட்டிற் காணப்பெறும் பயிர்பச்சைகட்கிடையேயும் இறைசிவபெருமான் திருவடிவத்தையும் அவன்றன் அருட்டிருவிளையாடல்களையுமே காண்கின்றார். என்னே பெரியார்தம் மாண்பு! அவர் காண்பன எல்லாம் இறைவன் காட்சி! கேட்பனவெல்லாம் இறைவன் திருப்புகழ்! அவர் செய்வன யாவும் இறைவன் திருத்தொண்டு! இச் செல்வம் பெற்றார்க்கு மனம் பொன்போல் ஒளிவிடுமன்றோ! இவரே யாவும் பெற்ற நிறைமிகு குறைவிலாச் செல்வராவர்! இவர், 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என எண்ணி, நம்மையும் அவ் விறை இன்பப்பேற்றில் திளைக்கச்செய்கின்றார்! இஃதன்றோ பெரியோர் இயல்புமாகும்! இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும் இனிதெனத் தமியராக உண்ணு இயல்பன்றோ அவர்தம் பண்பு! பண்பில் தலைப்பிரியாதனவே அவர்தம் பாடல்கள்! காண்பாம்!

உவமம் :

ஒரு பொருளின் தன்மையை மற்றொரு பொருட்கண் காண்பது உவமமாகும். அதனை ஆசிரியர் தாம் காணும் கூறும் பொருள்களில் விளங்கவுரைத்துச் செல்வர். காஞ்சி நகரத்தைத் தன்பாற் கொண்ட தண்டக நாட்டில் மழைபொழிந்தது; வெள்ளம் பெருக்கெடுத்தோடிற்று; அவை யாவும் பாலியாற்றிற் போய்ச்சேர்ந்து ஒன்றுகலந்தது. இதைக் கூறுங்கால்,

'விலகிவீழ் அருவித் தாரை வேறுவே றாக வோடிக்
குலநதிப் பாலி வைப்பின் ஏகமாய்க் கூடும் தோற்றம்
அலகில்பல் வழியும் மூதூர் அணிமையின் ஒன்றும் ஆறும்
பலபல மதமும் ஈற்றின் ஒருவழிப் படலும் போலும்
(திருநாட்டு : கள.)'

இதில், ஓர் ஊருக்குச் செல்லும் வழிகள் பலவும் முடிவில் ஒரே இடமாகிய ஊருக்குச் செல்வது போன்றும், பற்பல சமயங்கள் கருத்துவேறுபாட்டினுல் பலபலவாருகத் தம் சமயமுடிபை அறி விப்பன ஆனுலும் இறுதியில் அவை இறைவன் உண்டு என்னும் கொள்கையை அறிவுறுத்துவன போன்றும் என்றும் உவமை

கூறுவது இறும்பூது பயப்பதறிக. மீண்டும் இந்நூலகத்து நீலநிறம் பொருந்திய காயாம்பூவைப் பொன்னிறம் பொருந்திய கொன்றைமலர்க்கொம்புகள் தடவுவது மோகினி உருக்கொண்ட திருமாலைச் சிவபிரான் தழுவுவதுபோல் தோன்றுவதாகக் (கூஅ) குறித்திருப்பதும், பாலியாறு ஒன்றிலிருந்தே பல வாய்க்காலாகப் பிரிந்து வயல்களில் நீரைப் பெருக்கிப் பயிர்களை வளர்க்குந் தன்மைக்குச் சிவபெருமான் ஒருவரே உலகுயிர்களை இயக்குதற் பொருட்டு ஒன்பது திருவுருக் கொண்டிருப்பதாகக் குறித்திருப்பதும் (சுகூ) இவர்தம் இறைவன்பாற் கொண்ட, பத்திமைத் திறத்தை விளக்குதலோடு அரிய உவமமாதலையும் காண்க.

இன்னும் நல்லவழியில் ஈட்டிய பொருள், நல்லவற்றிற்கே பயன்படுதல்போலப் பாலியாற்றின் நீர் வீணாகச் செல்லாமல் வாய்க்கால் வழிச் சென்று வயல்களிற் பாய்ந்து வயலை நிரப்பும் (எ0) என்னும் உவமமும், பகைவர்க்குச் சார்பாக இருந்தவர் களை முன்பு பிரித்துப் பின்பு சேர்த்துக்கொள்ளும் தன்மை வாய்ந்த அமைச்சர்களைப் போல, முன்பு வெவ்வேறாக உழுது தொளியாக்கிய சேற்றையெல்லாம் ஒன்றாகக் குழப்பிப் பின்னர் விதை விதைப்பார்கள் (எச) என்னும் உவமமும், பின்னர் அவ் விதைகள் முளைத்துப் பயிர்கள் உண்டாக அவற்றின் செவ்வி யறிந்து நீர்பாய்ச்சுந் தன்மைக்கு இளஞ்சிறாரின் பசியின் இயல் பறிந்து தம் கொங்கையின் பாலை ஊட்டுகின்ற தாயரின் அன்புக் கொப்பாக உளதென்று (எசு) குறித்த உவமமும், பின் முளைத் துப் பயிர் தோன்றுங்காலை முன் வெண்ணிறமாகிப் பின் பசுமை நிறங் கொண்டுவருகின்ற நிலைக்குப் பெற்ற தாய் தந்தையரின் குணம், தம் மக்களுக்கும் உண்டாகும் தன்மையைப் பொருத்திக் காட்டியிருக்கும் உவமமும் (கூச) பயிர்கள் வளர்ந்து முற்றிப் பொதிகொண்டு, கதிர்வாங்கி விளைந்து மடிந்து நின்ற நிலைக்குப் பெண்கள் சிறு பேதைப்பருவத்தில் ஆண்களுக்கு முன் தலை வணக்கமின்றி நேரில் இருந்து, பின் பெதும்பைப் பருவத்தில் சிறிது தலைவணங்கி, மங்கைப்பருவம் வந்தபின் தலைவணங்கி நாணங்கொள்ளுகின்ற தன்மையைப் பொருத்தமுறக் காட்டி யிருக்கும் (கூசு) உவமமும் பிற உவமங்களும் இன்புறற்பாலன வாக அமைந்துள்ளன.

திணைமயக்கம் முதலியன :

பின்னர்த் திணைமயக்கம் கூறும் பகுதிகளிலும் நாட்டுவளங் களைப் பலபடப் புனைந்துகூறும் பகுதிகளிலும் அரிய கருத்து நயங்களையும் ஐவகை நிலக் கருப்பொருள்களும் ஒன்று கலந்து வருகின்ற நிலைகளைக் கூறும் பகுதிகளிலும் கற்பார்தம் மனம் நிலைக்கொண்டு அருங் கருத்து நயங் கண்டின்புறுமாறு அமைந்

துள்ளன. காட்டாக, நெய்தல்நிலத்துக்கும் குறிஞ்சிநிலத்துக்கும் மயக்கம் (கூட்டம்) கூறப் போந்தவிடத்து குறிஞ்சிநிலத்திலுள்ள வேங்கைமரம் தம் மலர்த்தேனினை நெய்தல் நிலத்திலுள்ள குவளை மலர்களின் உள்ளே விழும்படி ஊற்றிப் பெருகி ஓடு தற்குக் கயவர்தம் தன்மையை ஒப்புரைத்துள்ளனர். வேங்கைப் பூவிலுள்ள தேனை வண்டுகள் உண்பதில்லை; குவளைமலர்த் தேனை விரும்பியுண்ணும். அதையும் உண்ணுவாறு வேங்கை தன் மலர்த்தேனைக் கொட்டிவிட்டது; இக் காட்சி, கயவரோ யாருக்கும் பயன்படாதவர்; பயன்படும் நல்லோர்களையும் பிறர்க் குப் பயன்படச் செய்யாமல் கெடுக்கும் தன்மையர்; ஆகவே, அவர் தன்மையை ஒத்திருந்ததெனக் குறிப்பிடுவது (கருரு) அழகிய கலையின்பந் தருதலை அறிக. இத் தன்மைத்தான வேங்கைமரத்தின் உச்சிவரை கடலில் தோன்றிய பவளக் கொடிகள் படர்ந்து சென்றிருக்குமாம். அதனால் கடலானது இவ்வேங்கையின் செயலைக்கண்டு சினந்தெழுந்து தன் கைக ளாகிய பவளக்கொடியினால் அதன் குடுமியைப் பிடித் திழுப்பதை ஒக்கும் என்று குறித்து, உலக இயல்பையும், குற் றஞ் செய்தாரைத் தண்டிக்கும் அரச முறையையும் கூறி, நமக்கு அறிவுறுத்துகின்றார். பின்னும் இந்நாட்டுப்படலத்து ஆங் காங்கே வருமிடந்தோறும் இயற்கைப் பொருள்களோடு சிவ பெருமான் திருவிளையாடல்களைப் பொருந்தக் காட்டியிருப்பது வும், பிறவும் இன்புறத்தக்கதாக அமைந்துள்ளன. அவைகளை மிக நுணுக்கமாக கண்டு மகிழ்க.

## (உ) திருநகரப் படலம்

நாட்டுப் படலத்தின் நுண்மைக் கருத்துக்கள் ஒருசில வற்றைக் கண்டோம். இனி, நகரப்படலத்தின் இயற்கைக் காட்சிகளில் சிலவற்றைக் காண்பாம்.

நாட்டு வளங்களை, நாட்டில் விளையும் பொருள்களைத் தொகுத்துக்கொணர்ந்து இன்பத்தோடு அவைகளைப் பயன் படுத்தி வாழுமிடம் நகராகும். சிறந்த நகரென்பது, செல்வ மிக்கதாய், நோய் கொடியின்றி மக்கள் வாழ்தற்கேற்றதாய், மாடமாளிகைகள் மிக்கதாய்ப் பல்வகைப் பொருளும் வாங்கல் கொடுத்தற்கு வளமிக்கதா யமைதல்வேண்டும். அம் முறையில் இக் காஞ்சிநகரை மிகச்சிறந்த நகராக வியப்புச் சுவையுற ஆசிரியர் கட்டுரைத்துள்ளனர்.

### காஞ்சிநகர் ஏற்றம்:

ஒரு பொருளின் ஏற்றத்தாழ்வை அறிதற்கு அளவு கருவி யாக இருப்பது துலாக்கோல்; அக் கோலின் இருதட்டுக்களினும்

இருவேறுபட்ட பொருள்களை வைத்து நிறுவைசெய்து அவற்றின் நிறைமிகுதியாக இருப்புதை மிக்கதென்று கொள்வது, அன்றும் இன்றும் வணிகமக்கள் செய்துகாட்டும் உண்மை; நாமும் அவற்றைக் கண்கூடாகக் கண்டு வருகின்றோம்; இம்முறையில் காஞ்சிநகரத்தையும் நிறுத்துக்காட்டி நமக்கு அதன் உயர்வு முறையை விளக்குகின்றார். ஒருகாலத்தில் படைப்புக் கடவுளாகிய நான்முகன் வானுலகத்தையும் இந் நகரத்தையும் தனித்தனித் துலாக்கோல் தட்டில் வைத்து நிறுத்தார்; நிறுத்த போது இந்நகர் மிக்க கனமுடையதாக இருந்ததால் இம் மண்ணுலக நோக்கிக் கீழே இறங்கிற்று; வானுலகம் கனமின்றி நொய்தாக இருந்தமையால் மேலேயே சென்றது. எனவே, வானுலகத்தினும் வன்மைமிக்க இக் காஞ்சிநகரத்திற்கு வேறு நகரத்தை ஒப்புரைப்பது கூடுமோ? கூடாதென (நகரப். க) நமக்கு முதற்கண் நகரத்தின் ஏற்றத்துக்குக் காரணங் கற்பித்துக் காட்டுகின்றார். இவ்வாறு நிறுவை செய்ததாகக் கூறுதலை, தற்குறிப் பேற்றமாகவும், இல் பொருள் அணியாகவும் கொள்க.

இந்நகரில் புறநகர், புடைநகர், அகநகர்ச் சிறப்பெல்லாம் பலபட வருணித்துக் கூறுகின்றனர். அவற்றுள், புறநகர் வெளிப்புறமுள்ள இடமாதலால் ஆங்கே யானை, குதிரைகளின் சிறப்பு, அவற்றின் ஆற்றல் வேகம் அழகு முதலியன சித்திரித்துக் காட்டப்பட்டுள்ளன. இடை நகர் அகநகரில் பெண்கள பந்தாடுங் காட்சி, உலக்கையோச்சிச் சுண்ணச் சாந்து இடிக்குங் காட்சி, மைந்தரும் மகளிரும் மாடத்தில் மகிழ்வோடுலவுங் காட்சி, நகரைச் சூழ்ந்துள்ள அகழிச் சிறப்பு முதலியன கற்போர் நெஞ்சங் காமுறுமாறு கற்பனைத் திறனோடு கவின்பெறச் சொல்லோவியமாகத் தரப்பட்டுள்ளன. அவையிற்றில் ஒரு சில கட்டுரைப்பாம்.

## கற்பனையிலும் நாவுக்கரசர் தோற்றம் :

புறநகரைச் சூழ்ந்த சோலையை வருணிக்குங்கால் கல்லைப் பூட்டிக் கடலில் சமணர்கள் திருநாவுக்கரசரை விட்டகாலை, அவர் அதையே தெப்பமாகக் கொண்டு ஐந்தெழுத்தின் துணையால் கரையேறிய அரிய வரலாற்றை நமக்கு அறிவுறுத்தித் தம் கற்பனைத் திறத்தால் காட்டுகின்றார். அஃது இன்பச்சுவை விஞ்சுவதாக இருத்தலோடு நம்மையும் பத்தியின் பாலராக ஒழுகி இறை சிவபெருமானிடத்து இடையறாத் தொண்டு பூண்டொழுக நமக்குத் தூண்டுகோல் போன்றும் ஊன்றுகோல் போன்றும் இருத்தலை யறிந்து இன்புறுக. அஃதாவது, மகரந்தப் பொடி நிறைந்த சோலைகளில் செழித்த அரும்புகள் உடைந்து குளிர்ந்த தேனைச் சொரிதலினால், அத் தேன் பெருக்கினால் அமிழ்ந்த

தாமரை மலராகிய தம் படுக்கையின்மேல் அன்னங்கள் மூழ்கி மெல்ல மெல்ல மேலேறிவந்து எழுதல், மிகக் கொடிய பாவச் செயலையுடைய கரிய முருடராகிய சமணரால் கடலில் பிணித்து விட்ட கல் தூணோடு ஆழ்ந்த எங்கள் திருநாவுக்கரசர் திருவைந் தெழுத்தின் அருளால் எழுந்து மேலே தோன்றுதலை ஒக்கும் (க0) என்பதாம். என்னே! பெரியோரியல்பு! கண்ணிற் காண்பன கழறுவன யாவும் இறைவன் திருக்காட்சி! அவன் அடியார் அருட்காட்சியாகவன்றோ தோன்றுகின்றது!

மாடச் சிறப்பு :

இச்சிறந்த நகரில் வீடுகளின் சிறப்பைக் கூறுங்கால் வானளவு உயர்ந்த மாடங்கள், சூரிய சந்திரகாந்தக் கற்களால் ஆக்கப்பட்டுள்ளன; அவை ஞாயிறு வருங்கால் நெருப்பைக் கக்கியும், திங்கள் வருங்கால் நீரினைச் சுரந்தும் இருத்தலால், இக் காட்சி கூட்டுறவு கொண்ட நட்பாளர் இருவரின் குணம் அவரவர்க்கும் சாருதலைக் காட்டும் (எச) எனக்கூறி, நட்புத் தன்மையை நமக்கு விளக்கிக் காட்டுகின்றார்.

இல்லற மாண்பு :

நகரில் இல்லறக் கிழமைபூண்டு வாழும் ஆடவர், மகளிர் கட்கு இல்லறக் கடப்பாடுகளுள் தலைசிறந்தது விருந்தினரைப் பேணுதல்; இதனை வள்ளுவர் தம் வான்மறையில், **விருந் தோம்பல்** என்னும் தனிப் பகுதியமைத்து அதன் சிறப்பை,

[1] 'இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.'

என்று கட்டுரைத் தருள்வதொன்றே சான்றாகும்.

இம் முறையில், ஆசிரியர், இக் காஞ்சிநகரில் விருந்தினரை நாள்தோறும் வரவேற்று மகிழுஞ் சிறப்பினாலும் இளம்புதல்வர் கள் தம்மை அணுகச் சூழ்ந்து, குறுகுறு நடந்து சிறுகை நீட்டி, இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும், நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும், தம் அறிவு அவற்றில் மயங்க இன்புறுத லானும், எம் மருந்தினும் தீராத கணவன், மனைவியர்பால் தோன் றும் ஊடல் சிற்றளவு பொழுதன்றி நீடா (அகூ) தெனக் கூறுவது, மிக்க சுவை பயத்தலோடு இல்லறமக்கள் இல்லறத் தில் கடமையோடு நடந்து கொள்ளும் முறையையும், இல்லறத் துக்கு இன்றியமையாதது மக்கட் பேறெய்துதலே என்பதை

1. திருக்குறள் : அக.

யும் குறிப்பால் உணர்த்தி, இல்லறக் கடமை பூண்டீர் நீவிர் குடும்பத்தில் கலாம் விளைக்காது இன்பத்தோடு வாழுமின்' என, நம்போன்ற இல்லறக் கிழமை பூண்டார்க்கு அறிவுறுத்துகின்றார். என்னே! பெரியார் மாண்பு!

கணிகை மகளிர் இயல்பு:

இன்னும் உள்நகர்ச் சிறப்புக் கூறுமிடத்து அப் பகுதி இன்பமிக்கது; அழகுமிக்க ஆடவரும் பெண்டிரும் அணியணியாக வாழுந்தகையது; ஆங்கே தக்கார் தகவிலாரென ஆயாது பொருள் கொடுப்பவர் யாவர்க்கும் தம் போகத்தை விற்றுண்ணும் கணிகையர் உள்ளனர் என முதற்கண் அவர்தம் இருக்கையையே புனைந்துரைக்கின்றார் ஏனெனின், 'எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது, தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்' என்பது தொல்காப்பியர் நுனித்தறிந்து கண்டவுண்மை. ஆகவே, ஐம்புலனும் ஆரத்துய்க்கும் இன்பத்தை ஆடவர், பெண்டிர் இருவரும் விரும்புவது இயல்பாயிற்று. இவ்வின்பத்தைத் துய்க்க முனைப்பாக முன்னிற்பவர் ஆடவர்; ஆதலால் கழிகாமசராயினர்; அவர்தம் ஆரா அயராக் காமத்துக்கு மெல்லியராகிய பெண்டிர் இலக்காயினர்; பெண்மை இயற்கையான நாணம், நிறை, இவைகள் இல்லாத மனநிலையுடைய பெண்டிரே கணிகையராயினர்; இவரை இருமனப் பெண்டிரென ஏகுவர், வள்ளுவர் பெருமான் தாம் அருளிய அறநூலில்.

இன்ன இயல்பினராகிய கணிகையரியல்பை வியப்புச் சுவை விஞ்ச ஆசிரியர் சித்திரித்துக் கூறுவது, கற்போர்க்கு அறிவு விருந்தாக அமைவதாகும். இவர் ஆடவர்க்குக் கொடுக்கும் இன்பத்துக்கு நிகரில்லையென்னும்படி இன்பந்தந்து, ஆடவர் தமக்குத் தரும் இன்பத்தையும் அதற்குச் சமமாகக் கொண்டும், தம் போகத்துக்கு விலையாகப் பொருளைப் பறித்தல் வியப்பாகும் என்றும் அவ்வாடவர்க்கு மலையையொத்த தம் தனநீந்து, மலையையொத்த அளவினதான தனமும் கொள்வார் (௫௪) என்று கூறுவதும், பிரமன் திருமால் உருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளும் இந்நகர்க் கணிகையர் கண்வலைப்பட்டன்றோ இன்றளவுங்கூட, அவர்கள் முறையே அலரோன் மாலோன் பித்தன் என்னும் பெயர் பெற்றார்கள்; சிவசிவ! யாவர்தாம் அவர்திறத்து அகப்படாதோர் (௫௫) என்று கூறுவதும் இவர் தம் வன்மைமிக்க கற்பனைத் திறனைக் காட்டுவதாகும். அலரோன் - தாமரை மலரிலிருப்போன் என்றும்' உலக மக்களால் பழிச் சொல்லுக்கு இடனானோன் என்றும், மாலோன் திருமால் என்றும், (காம) மயக்கங் கொண்டோன் என்றும், பித்தன் - உருத்திரன் என்றும், (காமப்) பித்துக் கொண்டோன்

என்றும் இருபொருள் கொள்ளுமாறு அமைத்த நயம் கண்டு மகிழ்க.

அந்தணர் முதலியோர் இருக்கை :

மீண்டும் அந்தணர் வாழும் தெருக்கள், அரசர் வாழும் தெருக்கள், வணிகர் வாழும் தெருக்கள். வேளாளர் வாழும் தெருக்கள், அனுலோமர் (கலப்புச் சாதியோர்) வாழும் தெருக்கள்யாவும் அவ்வவர்தம் இயற்கை பிறழாது நன்கெடுத்து நுவலப்பட்டுள்ளன. அவைகளையெல்லாம் மாற்றி எடுத்து வரையின் அஃதொரு தனி நூலாக ஆகுமென விரிவஞ்சி இஃதோடு நிறுத்துகின்றோம்; அவைகளை நூலினுள் பாட்டினும் உரையினும் கண்டுமகிழ்க. .

முற்றுரை :

செம்பொருளாகிய சிவபெருமான் அருட்டிருவிளையாடலை விரித்துக் கூறும் இப்புராணத்தில் முற்பகுதியாக இருக்கும் திருநாட்டுப்படலம், திருநகரப்படலம் இரண்டுக்கும் சைவசித்தாந்த நூற்பதிப்புக கழகத்தின் ஆட்சியாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளையவர்கள் உரையெழுதுமாறு கட்டளையிட்டருளினர்கள். அவர்கள் கட்டளையை முதன்மையாகக் கொண்டும், அது தலைக்கீடாக இறைவன் திருவிளையாடல்களை யெடுத்துக் கூறும் ஏனைய புராணங்கள், காப்பியங்கள், சைவசித்தாந்த நூற்களைப் பயிலலாமென்னும் பெருவிருப்பாலும், இறைவன் திருப்பெயரையும், அவன்றன் அருட் பெருக்கத்தையும் உணர்வுகண்ணுக்கொண்டு அறியலாம் என்னும் பேரவாவினாலும் இதற்கு உரையெழுதத் துணிந்தேன்.

நினைப்பவர் மனங் கோயிலாகக் கொண்ட இறைவன் திருவருளினாலும் ஆட்சியாளரவர்கள் ஊக்குவித்த சிறப்பினாலும் இதற்கு ஒல்லும் வகை உரையெழுதியுள்ளேன். அன்பர்கள் வாங்கிக் கற்று எளியேனை இன்னன போன்ற அரிய பணிக்கு ஆளாக்கி ஊக்குவிக்குமாறு பெரிதும் வேண்டுகின்றேன்.

சைவசமய நன்மக்கள் இறைவன் திருப்புகழ்கூறும் இப்புராணத்தை நன்குகற்று, நாடு, நகரவருணனை கூறும் பகுதிகளிற்கூட பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு இப் பரந்த உலகத்தையும் இதன்கண் இன்புடன் வாழ்தற்கேற்ற இயற்கைப் பொருள்களையும் படைத்துக் கொடுத்துதவி, நமக்கு அரிய மக்கட் பிறவியையும் தந்தருளிய சிவபெருமானுடைய திருவருளை ஓவாது நினைந்து நினைந்து மன மொழி மெய்களால் வழிபடுதல் கடப்பாடாகும் என்னும் கருத்தை நம்போன்றோர் உணர ஆங்காங்கே இறைவன்

திருவருளையும், திருவடிவத்தையும் எடுத்து விளக்கியருளும் இந் நூலாசிரியரான மாதவச் சிவஞான யோகியாரின் அருட்பாடு போற்றற்குரியதாகும். அவர்கள் உரையை 'எனதுரை தன துரையாக' என்னும் அருண்மொழிக்கேற்ப இறைவன் உரை யாகக் கொண்டு போற்றுதல் உயர்வுகொள்ளும் வழியாகும்.

நம் சைவசமயம் ஏனைய எல்லாச் சமயங்களினும் சீர்த்தது; சாதி சமய வேறுபாடு கருதாத தகைமையைத் தன்னிடத்துக் கொண்டது. ஆகவே, சைவசமயத்து வரும் பேறுபெற்றதற்கு நாம் மகிழ்வுகூர்தல் வேண்டும். இச் சிறப்பானே அருணந்தி சிவாச்சாரியார் நாம் எல்லாம் கடப்பாடு தவறுதலாகாது என் னும் அரிய கருத்தானே தாம் அருளிய சித்தியாரில்,

[1] 'வாழ்வென்னும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்
தாழ்வென்னும் தன்மையோடும் சைவமாம் சமயம் சாரும்
ஊழ்பெறல் அரிது.'

என்று அருளியதோ டமையாது பின்னரும்,

[2] 'சால உயர்சிவ ஞானத்தாலே
போழ்இள மதியி னானைப் போற்றுவார் அருள்பெற்றோரே.'

எனக் கூறிச் சைவசமயத்தைச் சார்ந்திருந்தாலும் அவ்வழி ஒழுகாவிடின் பயனில்லை என்றுணர்த்துவாராய்ப் படர்க்கை மூக மாக அருளியதறிக.

[3] 'வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங் காலமே.'

என, நாவுக்கரசர் அருளிய தனித் திருக்குறுந்தொகையைக் கொண்டு ஆண்டவன் அருளில் தோய நாம் ஆட்பட வேண்டும் எனக் கூறிக்கொண்டு, இம்முன்னுரையை முன்னுரையாக இன் னுரையுடன் கூறி நன்முறையாக முற்றுவிக்கின்றோம்.

செல்லூர்க்கிழான்
செ. ரெ. இராமசாமி
உரையாசிரியன்

1, 2. சிவஞான சித்தியார், இரண்டாம் சூத்திரம்: கக.
3. அப்பர் தேவாரம், தனித்திருக் குறுந்தொகை கO : எ.

# சிவஞானமுனிவர் வரலாறு

நாடுகளில் சிறந்த பெருமையுடைய நாடு, நம் இந்திய நாடு. அவற்றுள்ளும் சிறந்தது, நம் தென்றமிழ் நாடு. அந்நாட்டில் சிறந்த மேன்மை பெற்றது, சான்றோர் பலரும் தோன்றிய வான்றோய் செல்வத் திருநெல்வேலித் திருநகர்.

இந்நகருக்கு அணித்தாக அணிசெய்து கொண்டிருக்கும் மலை, பொதியிலாகும்; வெண்துகிலென நுடங்கி இழிதரும் பாலருவி, அம் மலையில் தோன்றிச் செந்நெலும் கன்னலும் தெங்கும் கமுகும் செம்மையுற வளர்த்துப் பயன்தரும் சிறப்பு மிக்கது, பாவநாசத்திருப்பதி; அதையடுத்து விளங்கும் சிற்றூர் விக்கிரமசிங்கபுரம்.

இவ்வூரிடத்தே ஏறக்குறைய இருநூறாண்டுகட்கு முன்னர், அவ்வூரில் ஏழுதலைமுறை வரையும். அருட்புலமை கால்கொள அகத்திய முனிவர்பால் அருள் வரம்பெற்ற சைவ வேளாளர் மரபு ஒன்றுண்டு; அம் மரபிலே, சிவபெருமானிடத்தும் அவர் தம் அடியாரிடத்தும் வற்ரு அன்பும் வான்பெருங் கல்வியும் மிக்குடைய ஆனந்தக் கூத்தரென்பார் ஒருவர் இருந்தனர்; அவர் மனைத்தக்க மாண்புடை இல்லறக்கிழத்தியார், மயிலம்மையார் என்னும் பெயரினர்; இவர் விருந்துபுறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையர்; தம் கணவர் குறிப்பறிந்தொழுகும் நெறியினர். இத்தகைய இல்லறக்கிழமைபூண்ட இவ் விருவர் செய்த தவப் பயனால், அலகில் பல கலைத்துறை தழைப்ப அருஞ்சைவ நெறி உயர ஒரு நற்புதல்வர் தோன்றினர்.

நன் மகனாராகத் தோன்றிய இவரைக் கண்டு பெற்றோர் பெருமகிழ் பூத்தனர்; சிவாகம முறைப்படி பிறப்புக்குறிப்பு எழுதுதல் முதலிய சடங்குகளைச் செய்தனர். இவர்க்கு முக்களாலிங்கர் எனப் பெயர் சூட்டினர்; இன்புற்றனர்; அன்புடன் பேணி வளர்த்து வந்தனர்; இத்தகைய நன்மகனார்க்கு ஐந்தாம் அகவை நிரம்பிற்று; மனம் முகிழ்த்த சுருள்நீக்கி மலர்விக்கும் கல்வி கற்கப் பள்ளிக்கு வைத்தனர். முக்களாலிங்கர் நாள்

தோறும் பள்ளிக்குத் தவருது சென்று கல்வி பயின்று வந்தார்; ஒருநாள் பள்ளிக்குச்சென்று கல்வி பயின்றபின் வீட்டுக்குத் திரும்பி வந்தார்; அப்போது காவியுடையணிந்த திருவாவடு துறை மடத்துத் தம்பிரான்களில் சிலரைக் கண்டார்; பெருமகிழ் கொண்டார்; அவர்கள்பால் சென்ருர்; வணங்கினுர்; அவர்களை நோக்கி, 'அடிகளே! எங்கள் இல்லத்துக்கு எழுந்தருளுதல் வேண்டும்; எங்கள் இல்லில் திருவமுது செய்தருளவேண்டும்,' என இரந்து வேண்டிக் கொண்டார்.

தம்பிரான்கள் இவர் வேண்டுகோட்கு இசைந்தனர்; இவர் வழிகாட்டி முன்செல்லப் பின்தொடர்ந்தனர்; வீடு வந்து சேர்ந் தனர்; அப்போது இவர் தந்தையார் ஆனந்தக்கூத்தர் வெளிச் சென்றிருந்தனர்; உடனே முக்களாலிங்கர் தம் அரும்பெறற் ருயரிடம் சென்ருர்; தாம் தம்பிரான்களை அழைத்துவந்ததைக் கூறி அவர்கட்கு உணவளிக்க வேண்டுமெனக் கூறினுர்; தம் புதல்வரின் நற்பண்பை வியந்தார்; அவர் வேண்டியவாறே தம்பிரான்களிடம் போந்து, தம் இல்லத்தில் அமுதுண்ண வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார்; உணவமைத்தார்; கடிதில் அமுதுபடைத்தார்; அவர்களும் திருவமுதுண்டனர்; பின்னர் முக்களாலிங்கரிடமும் அம்மையாரிடமும் விடைபெற்று அவ் வூர்க் கண்ணுள்ள திருமடமொன்றில் தங்கியிருந்தனர்.

அதன்பின்னர் ஆனந்தக் கூத்தர்வந்து இச் செய்தி தெரிந்து மகிழ்ந்தார்; தம் புதல்வரை மார்புறத் தழுவி முத்தமிட்டார். அப்பால் தம் புதல்வரோடு தம்பிரான்கள தங்கியிருக்கும் திரு மடத்துக்குச் சென்று அவர்களை வணங்கினுர்.

அப்பொழுது முக்களாலிங்கர், தம்பிரான்களுடன் மடத்தில் தங்கி அங்கு மெய்யறிவு நூல்களைக் கற்றுத் துறவறநிலை பெற வேண்டுமென்னும் கருத்தைத் தம் தந்தையார்க்குக் கூறினுர். அவர் தம் புதல்வரைப் பிரிய முதற்கண் தயங்கினுராயினும் தாம் நற்செயலுக்கு உடன்படுதலே நன்றெனக் கருதினுர்; தம் புதல் வரைத் தம்பிரான்களிடம் ஒப்படைத்தார்; தம் இல்லத்திற்குச் சென்ருர்; தம் மனைவியாரிடம் கூறினுர்; அவர் அது கேட்டு முதலில் வருந்தினுரேனும் பின்னர்த் தம் கணவனுர் கருத்துக் கிசைந்து மனந்தெளிவுற்ருர்.

தம்பிரான்கள் அதன் பின்னர், முக்களாலிங்கரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு சுசீந்திரத்திலிருக்கும் ஈசானமடத்தைச் சேர்ந்தனர் ; அம் மடம் திருவாவடுதுறையைச் சேர்ந்தது. அம் மடத்தில் சின்னப்பட்டத்து எழுந்தருளியிருந்த வேலப்ப தேசிகரைக் கண்டு வணங்கினார்கள். தம்பிரான்கள் முக்களாலிங்கரை அவர்க்கு அறிமுகப் படுத்தி, நிகழ்ந்தவற்றையும் விளக்கிக் கூறினார்கள்.

வேலப்பதேசிகர், முக்களாலிங்கரின் முதிர்ந்த அறிவை வியந்தார் ; பாராட்டினார் ; அவருக்குச் சமயதீக்கை, சிறப்புத் தீக்கைகளைச் செய்தார் ; காவியுடை உதவினார் ; துறவு நெறியையடைவித்தார் ; மெய்யறிவு நூல்களை இவர்க்கு ஐயம்திரிபற உணர்த்தினார். அப்பால் முக்களாலிங்கர் வடமொழி, தென்மொழிச் சைவசித்தாந்த நூல்களைக் கற்றறிந்தார் ; மெய்யுணர்வு பெற்றார் ; துறவறநெறி திறம்பாத நன்னெறியில் ஒழுகினார்.

இவர் தம் சிறப்பைக் கண்ட வேலப்ப தேசிகர் இவருக்கு திருவாணை தீக்கை முதலியன செய்து ' சிவஞானம் ' என்னும் தீக்கைப்பெயர் வழங்கினார் ; மெய்கண்ட நூல்களையும், பண்டார நூல்களையும் அறிவுறுத்தினார் ; வீட்டு நெறிபெற வழிகாட்டியருளினார். அதுமுதல் இவருக்குச் சிறப்புப் பெயராகச் சிவஞானமுனிவர் என்னும் பெயர் வழங்கிவர லாயிற்று.

அதன் பின்னர்ச் சிவஞான முனிவர், திருவாவடுதுறைத் திருமடத்தில் தங்கி யிருந்துவந்தார். அக்காலத்தே ' பஞ்சாக்கர தேசிகர்மாலை ' என்னும் சமய நூலைப் பாடியருளினார். நண்பர்கள் சிலரும், மாணாக்கர்களும் வேண்டிக் கொண்டதற்கிணங்கி நெல்லைச் சங்கரநமச்சிவாயப் புலவர் இயற்றிய நன்னூலுரையை ஆராய்ந்து பார்த்து, அதில் தமக்குப் பிழையெனத் தோன்றியவற்றைத் திருத்திச் செப்பஞ்செய்து உதவினார். வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்கம் என்னும் இலக்கண நூலை ஆராய்ந்தார் ; அதிற்கண்ட பிழைகளைக் குறிப்பிட்டு, ' இலக்கண விளக்கச் சூறாவளி ' என்னும் ஓர் இலக்கண நூல் செய்தருளினார்.

இவர், சைவசித்தாந்த நுண்கலைகளில் வல்லுநரன்றி இலக்கண இலக்கிய நுண்ணிய கலைகளினும் மிக வல்லுநர்.

இவர் இலக்கண நூலில் தேர்ந்த புலமையுடையவரென்பதற்கு இவர் நன்னூல் சங்கரநமச்சிவாய ருரையை நன்கு திருத்தியும் புதுக்கியும் அமைத்த சிறப்பாடே சான்றாக அமையும். அதன் கண் தாமே இன்றியமையாத இடங்களில் விளக்கஞ்செய்தெழுதி யிருப்பதுடன், சங்கரநமச்சிவாயர் உரையிடையேயும் ஒன்றுசேர இடையிடையே கலந்தெழுதி யிருப்பதும், இவர்தம் இலக்கணப் புலமைக்கு அளவுகோலாகும். இஃதன்றி 'தொல்காப்பியச் சூத்திரவிருத்தி 'யென்னும் நூலை ஆக்கியிருப்பதும், இலக்கண விளக்கச் சூறாவளியெனப் பெயரிய நூல் எழுதியிருப்பதும் இவர் தம் இலக்கணப் புலமைத்திறத்தைக் குன்றிடையிட்ட விளக்கெனத் தெற்றெனவிளக்குவதாகும்.

மெய்கண்டதேவர் அருளிச்செய்த 'சிவஞானபோதம், என்னும் அரிய சைவசித்தாந்த நூலுக்குப் பாடியமாக அரிய உரை வகுத்திருப்பதும், அதில் சில்வகை எழுத்தைக்கொண்ட சிறிய சொற்றொடரைத் தனித் தனி அதிகரணமாக்கி அவற் றுக்கு இவர் விளக்கங்கூறிச் செல்வதும் இலக்கண வரம்பி னின்று காட்டும் எடுத்துக் காட்டுக்களும் இவர் தம் இலக்கண இலக்கிய நூற்பயிற்சிக்குக் கலங்கரை விளக்கங்களாயமை வனவாம்.

சிவஞானபோதத்து, 'அவனவள் அது வெனும்' என்று தொடங்கும் முதல் நூற்பாவில் கழகப்பதிப்பு எ0-ஆம் பக்கத் தில் இலக்கணக் குறிப்புரைக்குங்கால்,

> 'எனும் என்பது இடைச்சொல்லடியாகப்பிறந்த பெய ரெச்சமாய், இவ்வாறு என்னும் பொருள் குறித்து நின்றது. வடமொழிச் சூத்திரத்தில் ஆதி என்றதும் அப்பொருட்டு. அவை என்பது தொகுதி. அஃறிணைப் பன்மைச் சுட்டுப் பெயரெனக் கொள்ளின், உள எனப் பிரித்துப் பயனிலை யாக்கித் தாம் என்பது அசையாகக் கொள்க. வினைமை - வினையுடைமை, உடைமை - உடைத்தாம் தன்மை.
>
> அவ்வக் காலத்தன்றி மூவினையும் ஒரு காலத்துப் படுதல் கண்டிலம் என்பாரை நோக்கித்தன்மையில் வைத்து

என்பதாம்.

தொல்காப்பிய முதற் சூத்திரவிருத்திக்கண் நூன்மரபு என்பதை விளக்குமிடத்து,

'மலை, கடல், யாறு, குளம் என்றற் றொடக்கத்து உலக மரபுபற்றிய பெயர்போலாது ஈண்டுக் கூறப்படும் எழுத்து, குறில், நெடில், உயிர், மெய் என்றற் றொடக்கத்துப் பெயர்கள், நூலின்கண் ஆளுதற்பொருட்டு முதனூல் ஆசிரியனால் செய்துகொள்ளப் பட்டமையின், இவை நூன் மரபுபற்றிய பெயராயினவென்று அறிக. ஏனை ஒத்துக் களின் விதிக்கப்படும் பெயர்களும் நூன்மரபு பற்றிவரும் பெயராதல் உய்த்துணர்ந்து கோடற்கு இது முன் வைக்கப் பட்டது'

என்பனவும், இவைபோல்வனவாக வருவன பிறவும் சிவஞான முனிவர்தம் செந்தமிழ் இலக்கணப் புலமையைத் தெளிவுபடுத் துதல் காண்க.

இவ்வாறு உரைவன்மையிற் சிறந்தவராதலன்றிச் செய்யுள் ஆக்கும் திறனில் சிறந்திருந்தாரென்பதற்கு இக் **காஞ்சிப் புராணம் முதற்காண்டம், சோமேசர் முதுமொழி வெண்பா, குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி** போன்ற நூல்களும் பிறவும் சான்றாவனவாம்.

சிவஞான முனிவர்பால் மாணாக்கராக அமர்ந்து பல நூல் களைக் கற்றுத்தேறிய புலவர் பெருமக்களும் பலராவர்.

இம் முனிவரர், இக் காஞ்சிப்புராணம் முதற்காண்டத்தை ஆக்கித் தந்து, அதில் சைவசமய நுண்கருத்துக்களை யெல்லாம் திரட்டிக் கொடுத்தருளினர். கைம்மாறு வேண்டா இக் கடப்பாட் டிற்குத் தமிழ்கூறு நல்லுலகமும் சைவசமயக் கொள்கை யினரும் என்றும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையராவார்.

**சிவஞானமுனிவர் வணக்கம்**

பூவடு வண்துறைப் பொழில்சுலாம் பொன்னிநாட்டு
ஆவடு துறைச்சிவ ஞான அடிகள்
சேவடி பரவுதூஉம் சித்திபெறற் பொருட்டே.

# காஞ்சிப் புராணம்

## சிறப்புப்பாயிரம்

*காப்பு*

கலிநிலைத்துறை

இருக வுள்தொளை வாக்குகார்க்
    கடங்கள்இங் குலிகக்
குருநி றத்திழி தோற்றமுன்
    குலாய்த்தவழ்ந் தேறிப்
பரிதி மார்பினில் சமனொடு
    காளிந்தி பயிலும்
திருநி கர்த்தசீர் ஐங்கரக்
    களிற்றினைச் சேர்வாம்.

**(பொழிப்புரை)** *இரண்டு காதுத் தொளைகளும் வார்க்கின்ற கரிய மதநீர், சாதிலிங்கம் போன்ற செந்நிறம் பொருந்திய திருமார்பில் இறங்கியோடும் தோற்றம், ஞாயிற்றினது மார்பினிடத்தே எமனும் காளிந்தியும் முன்னே விளையாடி மேலே தவழ்ந்தேறி விளையாடுகின்ற அழகையொத்த சிறப்புப் பொருந்திய ஐந்து திருக்கைகளை யுடைய யானைமுகக் கடவுளை யாம் சென்று வணங்குவோம்.*

**(விளக்கவுரை)** *ஞாயிற்றுக்கு இயமனும் காளிந்தியும் மக்களாவர் ; மக்கள் தந்தையின் மடிமீதும் மார்பின்மீதும் ஏறி விளையாடுதல் வழக்கம். அம்முறையில் பிள்ளையார்ப் பெருமானின் காதுத் தொளைகளிலிருந்து கீழிறங்கி மார்பின் வழியாக வோடும்*

மதநீரை ஞாயிற்றின் மார்பில் தவழ்ந்து விளையாடும் மக்களாகக் குறித்தார். பிள்ளையார்ப் பெருமான் ஓங்கார வடிவினரானதால் ஒற்றைக் கையையுடைய யானையன்றெனத் தெரித்தற்குச் 'சீர் ஐங்கரக் களிறு' என்றார்.

இறைவன், நினைப்பவர் மனம் கோயிலாக் கொள்பவன்; அவனை நினைவார்க்கு வேண்டுவ வேண்டியாங்கு அருளி, இறுதியில் வீடுபேற்றின்பமும் அருளுவன். ஆகவே, அவைகளையெல்லாம் யாம் பெற்று இன்புற, 'சேர்வாம்' என்றார். சேர்தல் - இடைவிடாது நினைத்தல்.

இங்குப் பொதுவாகப் பிள்ளையார் வணக்கங் கூறினார். இனி இத்தலத்துக்குரிய சிறப்புப்பெற்ற விகட சக்கரனென்னும் திருப்பெயரையுடைய பிள்ளையார்க்கு வணக்கங் கூறுவர். (க)

விநாயகர் காப்பு

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

விகட சக்கர வாரணந் தொடர்வரும்
 வித்தக முகில்வீற
விகட சக்கர விந்தமன் னவன்றனக்
 கருளுமெய்த் தலைவாகு
விகட சக்கர வாகமென் முலையுமை
 கான்முளை யென்றுச்சே
விகட சக்கரர் எந்திர மெனச்சுழல்
 வெம்பவக் கடல்நெஞ்சே.

**(பொ - ரை.)** மனமே! குயவர்களின் திரிகையைப் போலச் சுழலும் கொடுமையாகிய பிறவிக் கடலைவிட்டு நீ கடத்தற்கு, விகடசக்கர னென்னும் திருப்பெயரையுடையவனே! வேதங்கள் தொடர்ந்து தீண்டுதற்கரிய அறிவே திருவுருவாக உடையவனே! மேகத்தின் பெருமையைக் கெடுத்த மதநீர்ப் பெருக்கையுடையவனே! செந்தாமரை மலரையொத்த கண்களையுடைய திருமாலுக்கு (சுதரிசன மென்னும் பெயருடைய சக்கரப்படையை) அருளிய உண்மைத் தலைவனே! குவிந்த குடத்தையும் சக்கரவாகப்

பறவையையும் ஒத்த கொங்கைகளையுடைய உமையம்மை யின் திருப் புதல்வனே! (விநாயகப் பெருமானே) என்று வாழ்த்தி வணங்குவாயாக.

(வி - ரை.) விகட சக்கரன், என்பது இத் தல விநாயக ரின் திருப்பெயர் இதற்குப் புராணங்கூறும் வரலாறு: தக்கன் வேள்வி செய்தபோது திருமால் வீரபத்திரரோடு போர்புரிந்து தம் சக்கரப் படையை இழந்து வைகுந்தத்துக்குச் சென்றபோது அவரின் படைத் தலைவர், அதையறிந்து சிவபெருமான் திருவரு ளால் காஞ்சிபுரத்தை யடைந்து வீரபத்திரக் கடவுளை நோக்கித் தவஞ் செய்தார்; அவர் காட்சிகொடுத்து, 'உன் வேண்டுகோள் என்னை?' என்று வினவியருள, 'சக்கரத்தைத் தந்தருள வேண்டும்' என்று கூறிக் குறையிரந்து வேண்டினர். 'அதனை என் தலைமாலையிடத்துப் பெற்றுக் கொள்க' என்றருளினர். உடனே அதைப்பெற விரைந்து படைத்தலைவர், கேலிக்கூத் தாட அதுகண்ட தலைமாலை நகைத்தது; அப்போது அது வாயிற் கௌவியிருந்த சக்கரம் கீழ் வீழ்ந்தது; அதை மூத்த பிள்ளை யார் எடுத்து மறைத்துக்கொண்டார்; படை வீரர் பிள்ளை யாரைக் கேட்டு வேண்ட அவர், மீண்டுங் கூத்தாடச் செய்து, நகைத்துச் சக்கரத்தைக் கொடுத்தருளினார். அதனால் கேலிக் கூத்தைக் கண்டு நகைத்துச் சக்கரத்தை வழங்கியதால் 'விகட சக்கர விநாயகர்' என வழங்கும் திருப்பெயர் பெற்றார். விகடம் - கேலி. சக்கரம்-சக்கரப்படை; உருளைப்படை. இது இத்தல வரலாறு.

ஆரணம் - மறை; வேதம். வேதங்கள் இறைவன் முழு முதல் தன்மையை எடுத்து எடுத்துக்கூறி இவ்வளவென வரை யறை கூற வியலாது தடுமாறுவனவாதலால் 'ஆரணம் தொடர் வரும் வித்தக' என்றார். வேதங்கள் எய்த்துப் போவதனை,

[1]'பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல உள்ளமதியின்
பேதங்களல்ல இவையன்றி நின்ற பிறிதல்ல என்றுபெருநூல்
வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளி'

எனவும்,

[2]'எய்யாமல் வேதம் முழுதும் புகழும் முதல்வன்'

எனவும் வரும் ஆன்றோர் திருமொழிகளான் அறிக.

முகில் - சூல்கொண்ட மேகம். வீறு அவி - பெருமையைக் கெடுத்த: முக்கால வினைத்தொகை. கடம் - மதநீர். கட -

1. திருவிளை, கூடற்காண்டம்: க.
2. திருவெங்கையுலா: உஅச.

மதத்தையுடையவனே. விளி ஆனதால் ஈற்றுமெய் கெட்டது. சக்கு - சட்சு - கண் : வடசொல். அரவிந்தம் - செந்தாமரை மலர் : முதலாகு பெயராக மலரைக் குறித்தது. அன்னவன் : குறிப்பு வினையாலணையும் பெயர். குவி - குவிதல் : முதனிலைத் தொழிற் பெயர். காலமுளை - காலத்துக்கு முளைபோல்பவன் : ஈண்டுப் புதல்வன். என்று - என்று : செய்யா என்னும் வாய் பாட்டு இறந்தகால வினையெச்சம். சக்கரர் - சக்கரத்தையுடையவர், ஈண்டுக் குயவர்கள் ; குயவர்கள் பானை முதலிய மண்பாண்டங்கள் வனைதற்குச் சுழற்றுந் திரிகையுடையவராதலால் அவர், 'சக்கரர்' எனப்பட்டார்.

உலகுயிர்கள், பிறப்பு இறப்புக்களின் நின்று இடைவிடாது சுழல்வன. பிறவியற்றாலே உயிர்கள் இன்பம் எய்தும். அதை அடைதற்கு இறைவனை இடையறாது நினைத்தலும் தொழுதலும் வேண்டும். பிறவி துன்பமென்பதை உணர்ந்த முற்றத் துறந்த முனிவரராகிய பட்டினத்து அடிகளும்,

[1]'மாதா உடல்சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவும் கைசலித்து விட்டானே—நாதா
இருப்பையூர் வாழ்சிவனே இன்னமோர் அன்னைக்
கருப்பையூர் வாராமற் கா'

என்று வருந்துவராயின், நம்மனோர் தன்மையை யென்னென்பது? இதனை, 'நெஞ்சே! வெம்பவக் 'கடல் கட' என்றார். கட - கடப்பாயாக என்றலுமாம். கட - கடத்தற்கு என முதனிலைத் தொழிற்பெயராகக் கொண்டு நான்கனுருபு விரித்து ஈண்டுப் பொருள் கூறப்பட்டது.

ஒருதொழில் தொடங்குவார், அத்தொழில் முட்டின்றி முடிதற்பொருட்டு முன்னர். விக்கினேசுரனாகிய பிள்ளையார்ப் பெருமானை வணங்குதல் ஆன்றோர் மரபு. அம்முறையைப் பின் பற்றி இக்நூலாசிரியரும் இந்நூல் முட்டின்றி முடிதற் பொருட்டு அக்கடவுளைப் பொதுவுஞ் சிறப்புமாக இரண்டு செய்யுட்களால் வணக்கஞ் செய்தார்.

இச் செய்யுட்கள் இரண்டும் பாடாண்திணையென்னும் திணையுள் அறுவகையாகக் கூறப்பட்ட கடவுள் வாழ்த்துத் துறையுள் அடங்கும். இதனை,

[2]'அமரர்கண் முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினும்
ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப'

1. பட்டினத்தார் பாடல். 2. தொல். புறத்திணை : உசு.

என்னும் நூற்பாவில் ஒன்றன் பகுதி, என்பதற்கு [1]'உயர்ச்சி யில்லாத காமமாவது, மறுமைப்பயன்பெறும் கடவுள் வாழ்த்துப் போல் உயர்ச்சியின்றி இம்மையிற் பெறும்பயனுதலின், இழிந்த பொருள்களின்மேற் செல்லும் வேட்கைக் குறிப்பு: புல்லியவகை யாவது, அம்மனக்குறிப்புத் தேவர் கண்ணே பொருந்திய கூறுது, தன் பொருட்டானும் பிறன் பொருட்டானும் ஆக்கத்துமேல் ஒருவன் காமுற்றவழி, அவை, அவற்றுப் பயன் கொடுத்தலாம்' என ஆசிரியர் நச்சினார்க்கினியர் விளக்குமுகத்தான், இஃது தன் பொருட்டாற் கூறிய வாழ்த்தெனக் கொள்க. (உ)

## கடவுள் வாழ்த்து

*அம்பலவாணர்*

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளும்
மறைக்கோவும் தழல்கால் சூலம்
அங்கேந்தும் அம்மானும் தத்தமது
தொழிற்றலைநின் றுற்றச் செய்தோர்
பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப
இருமுனிவர் பணிந்து போற்றக்
கொங்கேந்து மணிமன்றுட் குனித்தருளும்
பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்.

(பொ - ரை.) பாஞ்சசன்னியம் என்னும் சங்கையேந் திய செந்தாமரை மலரை யொத்த உள்ளங்கையையுடைய திருமாலும், வேதங்களுக்குத் தலைவனுகிய நான்முகனும், நெருப்பைக் கக்குகின்ற சூலப்படையைத் தன் உள்ளங் கையில் ஏந்திய உருத்திரரும், தம் தமக்குரிய படைத்தல் காத்தல் அழித்தல்களாகிய முத்தொழில்களினும் நின்று செய்யுமாறு ஏவி, இடப்பாகத்தைத் தனக்குரிமையாகக் கொண்ட உமையம்மைப் பிராட்டியாரின் திருக்கண்கள் களிப்புக் கொள்ளவும், பதஞ்சலி வியாக்கிரபாதர் ஆகிய ிவர்களும் வணங்கி வாழ்த்தவும், பூந்துகள்கள்

1. தொல். புறத்திணை. நச். உரை.

நிறைந்த அழகிய பொன்னம்பலத்தில் இருவகைக் கூத்தும் இயற்றியருள்கின்ற அடியவர் தம் பெருவாழ்வாகிய அம்பல வாணரைக் கருதியே வாழ்வோமாக.

(வி - ரை.) இறைவன் திருக்கூத்தாடுதலைக் குறித்து வணக்கங் கூறியவாறும். மலர்க் குடங்கை – மலர்போன்ற உள் ளங்கை: உவமைத் தொகை ஏந்துதல் - கொள்ளுதல் என்னும் பொருட்டு. இருவர் என்னும் தொகைக் குறிப்பு, ஈண்டுப் பதஞ் சலி வியாக்கிரபாத முனிவர்களைக் குறித்தது. பதஞ்சலி-பாம்புக் கால் முனிவர்; வியாக்கிரபாதர்-புலிக்கால் முனிவர். இவ்விரு வர்க்கும் இறைவன் கூத்தாடுதலை, ஞானக்கூத்து எனவும் பிற ருக்கு ஆடுதலை ஊனக்கூத்தெனவும் கூறுவர். (௩)

திருவேகம்பநாதர்

தணந்தபெருந் துயர்க்கடல்மீக் கூர்தலினால்
மலைபயந்த தரள மூரல்
கணங்குழையாள் புரிபூசை முடிவளவுந்
தரியாமல் இடையே கம்பை
அணங்கினைத்தூ தெனவிடுத்து வலிந்திறுகத்
தழீஇக்கொள்ள அமையாக் காதல்
மணந்தருளிக் குறிபூண்ட ஒருமாவில்
பெருமானை வணக்கம் செய்வாம்.

(பொ - ரை.) (தம்மில் நின்றும் பிரியாது தாதான் மியமாக இருந்த இறைவி ஒரு காரணத்தால்) இடையே பிரிதலினால் நேர்ந்த பெரிய துன்பமாகிய கடல் மேலெழுத லால், இமயமலைச் செல்வியாகிய முத்துப் போன்ற பற்களை யுடைய அவ்விறைவி செய்தருளிய பூசையானது முடியும் வரையும் ஆற்றாமல், அப்பூசைக்கு இடையிலே கம்பாநதி யென்னும் பெண்ணைத் தூதாகவிட்டு, தானே வந்து இறுகும்படி தழுவ, வேறொருவர்க்கு அமையாத விருப்பத் தோடு கலந்து, திருக் கொங்கைச்சுவடும் வளைச்சுவடும் இவ்விரண்டும் பூண்டருளிய ஒரு மாமரத்தினடியில் எழுந் தருளியிருக்கின்ற இறைவரை வணங்குவாம்.

(வி - ரை.) தணந்த - பிரிந்த. மலைபயந்த - இமயமலைபெற்ற. கம்பை - கம்பாநதி. தழீஇ - தழுவி: சொல்லிசையளபெடை. (௪)

## காமாட்சியம்மை

ஊன்பிலிற்றும் மழுவாளி கலவிதனி
லொண்ணுதென் றோர்ந்து நஞ்சம்
தான்பிலிற்றும் பாப்பணியை நீப்பவுங்கார்
வண்டினங்கள் ததைந்து மூசத்
தேன்பிலிற்று நறுங்கடுக்கைத் தெரியலைப்பாம்
பெனமருண்டத் தெரியல் நாறும்
கான்பிலிற்றத் தெருண்டணையுங் காமக்கோட்
டத்துமையைக் கருத்துள் வைப்பாம்.

(பொ - ரை.) *பகைவரது உடலின் தசையைச் சிந்துகின்ற மழுப்படையை யேந்திய சிவபெருமானுடைய புணர்ச்சியில் கூடாதென்றுணர்ந்து, நஞ்சை உமிழுகின்ற பாம்பு அணியினை நீக்கவும், கரிய வண்டுக்கூட்டங்கள் நெருங்கி மொய்க்க, தேனொழுகுகின்ற நறுமணங்கமழுகின்ற மாலையைப் பாம்பென்று மயங்கி, அந்தக் கொன்றை மாலை கமழ்கின்ற மணத்தை வீசுதலால் அதனை மாலையென்று துணிந்து சேரும் காமக்கோட்டத்தில் எழுந்தருளியிருக்கின்ற உமையம்மையை மனத்தின்கண் இடைவிடாது வைப்பாம்.*

(வி - ரை.) ஊன் - தசை. கலவி - புணர்ச்சி; காமக்கூட்டம். பாப்பு - பாம்பு: மென்றொடர் வலித்தது. மூச - மொய்க்க. தெரியல் - மாலை. தெருண்டு - தெளிந்து. கருத்து - மனம். (௫)

## இதுவும் அது

கருக்காமக் கோட்டியிர வினையனைத்தும்
ஒருங்கெய்திக் கலகம் செய்யும்
தருக்காமக் கோட்டியெலா மறவெறிந்தாம்
இனியென்றும் தகைசா லன்பு

சுருக்காமக் கோட்டினைச்சே யரைகரங்கொண்
டார்க்குமுலைச் சுவடு நல்கும்
திருக்காமக் கோட்டியம்மை சேவடிப்போ
தெப்போதும் சிந்திப் பாமால்.

(பொ - ரை.) அக்குமணியைச் சிவந்த தம் அரையிலும், பிரமனது தலையோட்டைத் தம் திருக்கையிலும் கொண்டருளிய இறைவர்க்குத் தம்கொங்கைத் தழும்பினைக் கொடுத்தருளிய திருக்காமக்கோட்டி பீடத்தையுடைய இறைவியினது சிவந்த திருவடிமலரை எக்காலத்தும் கருதுவோமாக; பிறவிக்குக் காரணமாகிய அக் குற்றம் வாய்ந்த இருளாகிய இருவினை முழுதும் ஒருசேர அடைந்து, கெடுதியை உண்டாக்கும் செருக்காகிய அந்தக் கூட்டங்களை யெல்லாம் வேரோடொழியக் கெடுத்தாம்: இனி எக்காலத்தும் பெருமைமிக்க அன்பைப் பெருக்குவோமாக.

(வி - ரை ) கருக்கு: கருவுக்கு எனற்பாலது இடை உகரம் விகாரத்தால் தொக்கது. கரு-பிறப்பு. கோள்-குற்றம். திமிரம்-இருள்; ஈண்டு நல்வினை, தீவினை. 'இருள்சேர் இருவினை' என்னும் வள்ளுவர் மறை காண்க. தருக்கு - செருக்கு. (சு)

விகடசக்கர விநாயகக்கடவுள்

விழிமலர்ப்பூ சனையுஞற்றித் திருநெடுமால்
பெறுமாழி மீள வாங்கி
வழியொழுகாச் சலந்தரன்மெய்க் குருதிபடி
முடைநாற்றம் மாறு மாற்றல்
பொழிமதநீர் விரையேற்றி விகடநடப்
பூசைகொண்டு புதிதா நல்கிப்
பழிதபுதன் றாதையினும் புகழ்படைத்த
மதமாவைப் பணிதல் செய்வாம்.

(பொ - ரை.) நீரிலங் கடந்த நெடுமால் தம் கண்களாகிய தாமரை மலர்களால் வழிபாடு செய்து, பெரிய சுதரிசனமென்னும் தம் சக்கரப்படையை மீண்டும் பெற்று

அறவழியில் செல்லாத சலந்தராசுரனது உடம்பினின்றும் வழிந்த செந்நீரில் தோய்ந்த தீய நாற்றம் மாறும் வகையால் தமது காதுத்தொளையினின்றும் பொழிந்த மதநீரின் மணத்தையேற்றி, விடுவச்சேனர் செய்த விகடக்கூத்தாகிய பூசையை விரும்பிப் புதிதாகக் கொடுத்து, குற்றமற்ற தம் தந்தையாராகிய சிவபெருமானினும் புகழ்கொண்ட விகட சக்கர விநாயகப் பெருமானை வணங்குவோமாக.

(வி-ரை.) விழிமலர்-கண்ணாகிய மலர் : இருபெயரொட்டு. நெடுமால் - நீண்ட வடிவினனான திருமால். ஆழி - சக்கரப்படை. குருதி-செந்நீர்; இரத்தம். விகடநடம் – விகடக் கூத்து. பழி - குற்றம். மதமா - மதங்கொண்ட யானை. ஈண்டு அம்முகத்தை யுடைய பிள்ளையாருக்கு ஆகுபெயர். பணிதல் செய்வாம் - வணங்குவோம் : ஒரு சொன்னீர்மைப்பட்டு நின்றது. (எ)

## முருகக்கடவுள்

முருகோட்டந் தரப்பாயு மும்மதமும்
ஊற்றெடுப்ப முரிவிற் கோட்டும்
ஒருகோட்டு மழகளிற்றை இருகோட்டு
முதுகளிறு உலவக் காட்டிப்
பருகோட்ட நறைவேட்டுப் பைங்கோட்டுத்
தினைப்புனத்துப் பரண்மேற் கொண்டு
குருகோட்டும் பெடைமணந்த குமரகோட்
டத்தடிகள் குலத்தாள் போற்றி.

**(பொ - ரை.)** மணம் பரவப் பாய்கின்ற மூவகை மதங்களும் சுரக்க, வளையும் வில்லை வளைவிக்கும் ஒரு கொம்பினையுடைய இளமை வாய்ந்த யானையை, இரண்டு கொம்புகளையுடைய முதுமையுள்ள யானையாக உலவாநிற்கப் புலப்படுத்தி, திருவிதழில் பொருந்திய தேனைப் பருக விழைந்து, தினைப்புனத்திலுள்ள பசிய கொம்புகளால் ஆக்கப்பட்ட பரண்மேல் எழுந்தருளி (தினைக் கதிர்களை)க் கவர வருகின்ற பறவைகளை ஓட்டும் பெண்மயிலாகிய வள்ளிநாயகியாரை மணந்தருளிய, குமரகோட்டத்தில் எழுந்தருளி

யிருக்கின்ற முருகக்கடவுளின் நன்மையை யளிக்கின்ற திருவடிகட்கு வணக்கம்.

(வி - ரை.) முருகு - மணம். ஓட்டம் தர-ஓட; பரவ. முரி-வளைவு. கோட்டும் - வளைக்கும் கோடு - கொம்பு. உலவ - உலாவ; நடக்க. ஓட்டம்-இதழ்; உதடு. குருகு-பறவை. பெடை-பெட்டை; பெண். ஈண்டுச் சிறப்புப்பற்றி மயிலைக் குறித்து வள்ளிநாயகியாரைக் குறித்தலால் ஆகுபெயர். (அ)

## வயிரவக்கடவுள்

எளியரை வலியர் வாட்டின்
வலியரை இருநீர் வைப்பின்
அளியறத் தெய்வம் வாட்டும்
எனுமுரைக் கமைய வன்றே
தெளியுமா வலியைச் செற்றோற்
செகுத்துரிக் கவயம் போர்த்த
வளியுளர் கச்சி காவல்
வயிரவர்க் கன்பு செய்வாம்.

(பொ - ரை.) கடல் சூழ்ந்த நிலவுலகத்தில் வலிமையற்றவர்களை வலிமையுடையோர் வருத்தினால், அவ் வலிமையுடையாரை அருளுடைய அறக் கடவுள் வாட்டும் என்னும் பழமொழிக்குப் பொருத்தமாக, முற்காலத்தில் தெளிந்த மாவலி யென்பவனைக் கொன்ற குறுகிய வடிவங்கொண்ட திருமாலை வருத்தி, அவரின் தோலை மேற்போர்வையாகப் போர்த்தருளிய தென்றற் காற்றுலவும் கச்சித் திருநகர் காவல் கொண்ட வைரவக்கடவுளுக்கு அன்பு கொண்டு வழிபாடு செய்வாம்.

(வி - ரை.) எளியவர் – வலிமையற்றோர். இருநீர் - கடல். அளி – அருள். செற்றோன் - கொன்றவன். தெளியும்-தெளிவு படுகின்ற. மாவலி - மாவலி என்னும் அரசன். செகுத்து - வருத்தி ; ஈண்டுத் திருமால். காவல்-காத்தல் தொழில். கவயம் - போர்வை. வளி – காற்று ; ஈண்டுத் தென்றற் காற்று. கச்சி - காஞ்சிபுரம். (க)

*திருநந்திதேவர்*

**அங்கணன் கயிலை காக்கும்**
**அகம்படித் தொழின்மை பூண்டு**
**நங்குரு மரபிற் கெல்லா**
**முதற்குரு நாத னாகிப்**
**பங்கயந் துளவ நாறும்**
**வேத்திரப் படைபொ றுத்த**
**செங்கையெம் பெருமான் நந்தி**
**சீரடிக் கமலம் போற்றி.**

**(பொ - ரை.)** *சிவபெருமானது திருக்கைலைமலையைக் காவல் செய்கின்ற அகம்படித் திருத்தொழிலை மேற்கொண்டு நம் குருமரபிற்கெல்லாம் முதன்மை வாய்ந்த குருமூர்த்தத்துக்கு முதல்வனாகி, தாமரையும் துளசியுமாகிய இவைகளின் மணங்கமழுகின்ற பிரம்பாகிய படையைத் தாங்கிய சிவந்த திருக்கைகளையுடைய எம்பெருமானை திருநந்தி தேவருடைய அழகிய திருவடிகளாகிய தாமரை மலர்களை வணங்குவோமாக.*

*(வி – ரை.) அகம்படித் தொழில் – பக்கத்திலேயே இருந்து செய்கின்ற தொண்டு. குருமரபு – ஆசிரிய பரம்பரை. 'பங்கயம் துளவ நாறும் வேத்திரப்படை' என்பது, இறைவன் திருமுன்னர் வந்து வணங்குதற்குத் தேவர்களோடு நெருங்கிப் பிரமன் திருமால் நின்றபோது அவர்களை விலக்குதற்கு நந்திதேவர், முடிகள்மீது பிரம்பால் அடித்தலால் அவர்கள் அணிந்துள்ள தாமரை மலர் துளவ மாலைகளில் தோய்ந்து அந்த மணங்கமழ்தலால் அதைக் குறிப்பால் உணர்த்தியதெனக் கொள்க.*

*சீர் -சிறப்பு. கமலம் : மலருக்கு உவமவாகு பெயர். (கo).*

*அகத்திய முனிவர்*

**காசியில் நின்றும் போந்து**
**கம்பர்தாம் அருளப் பெற்று**
**மாசிலாக் கச்சி மூதூர்**
**மன்னிவீற் றிருந்து பூமேல்**

ஆசிலாத் தமிழ்ப ரப்பி
அருந்தமிழ்க் குரவு பூண்ட
தேசிஞன் மலய வெற்பின்
குறுமுனி திருத்தாள் போற்றி.

(பொ - ரை.) காசித் திருநகரினின்றும் எழுந்தருளித் திருவேகம்பர் அருள்செய்யப் பெற்று, குற்றமற்ற காஞ்சி புரமென்னும் பழமையான திருநகரில் நிகரற்று வாழ்ந் திருந்து, நிலவுலகத்திலே தூய்மையான தமிழ் மொழியைப் பரவுமாறு செய்து அரிய தமிழாசிரியத் தன்மையை மேற் கொண்ட அறிவொளி கொண்டவராகிய பொதியமலையி லெழுந்தருளியிருக்கின்ற அகத்திய முனிவருடைய திருவடி வோமாக.

|– ரை.) கம்பர் -- திருவேகம்பர் ஆகிய
கச்சி – காஞ்சிபுரம். குரவு - ஆசிரியத் தன்மை. தேசு - ஒளி ; ஈண்டு அறிவாகிய ஒளி. அறியாமையாகிய இருளை ஓட்டுகின் றவராதலால், 'தேசிஞன்' எனப்பட்டார். குறுமுனி - குறுகிய வடிவுடைய அகத்திய முனிவர். (கக)

திருஞானசம்பந்தர்

பரசமய கோளரியைப் பாலரு
வாயனைப்பூம் பழனஞ் சூழ்ந்த
சிரபுரத்துத் திருஞான சம்பந்தப்
பெருமானைத் தேயம் எல்லாம்
குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளும்
கவுணியர்தம் குலதீ பத்தை
விரவியெமை ஆளுடைய வென்றிமழ
இளங்களிற்றை விரும்பி வாழ்வாம்.

(பொ - ரை.) வேறு சமயங்களாகிய யானைகட்குச் சிங்கம் போன்றவரை, திருஞானப்பால் என்றுங் கமழு கின்ற திருவாயுடையவரை, பொலிவுபெற்ற வயல்கள் சூழ்ந்த சீகாழிநகரில் தோன்றியருளிய திருஞானசம்பந்த

ரென்னும் பெயருடைய பெருமையுடையவரை, எல்லா நாடுகளிலும் உள்ளோர்கள் யாவரும் மகிழ்ச்சிக் கூத்தாடத் தமிழ்த் தேவார மறையாகிய ஒளியை விரித்தருளிய அந்தணருள் கவுணியர் குலத்திற்கோர் விளக்குப் போல்பவரை, எம்மைக் கலந்து ஆட்கொண்டருளிய வெற்றியையுடைய இளமை பொருந்திய யானைக் கன்றை ஒத்தவரை, மகிழ்ச்சி மிகுந்து வழிபாடு செய்து வாழ்வோமாக.

(வி - ரை.) பரசமயம் - சைவ நெறிக்குப் புறம்பான சமயங்கள். கோள்அரி - கொல்கின்ற சிங்கம். சிரபுரம் - சீகாழி. குரவை - கைகோத்தாடும் ஒருவகைக் கூத்து. தமிழ் வேதம் - தேவாரத் திருமறை. இதனைத் திருஞான சம்பந்தப் பெருமான், 'திருநெறிய தமிழ்' என்று அருளியதும் காண்க. மழவிளங் களிறு: ஒருபொருட் பன்மொழி. இது இங்கே உவமவாகு பெயராகத் திருஞானசம்பந்தரைக் குறித்தது. (கஉ)

திருநாவுக்கரசர்

இடையறுப் பேரன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவா ரத்தின்
படையறுத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறுப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறுச் செவ்வாயும் சிவவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்

(பொ - ரை.) திருநாவுக்கரசு நாயனாரது இடையில் விடாத தொடர்ந்த அன்பும், இன்பக் கண்ணீர் உகுக்கும் இரண்டு திருக்கண்களும், வலிமையுடைய உழவாரப்படை நீங்காத திருக்கைகளும், சிவபெருமானுடைய திருவடிகளிடத்தே பதியவைத்த மனமும், நல்லொழுக்கத்தினின்றும் இழுக்காத பெரிய துறவு நிலையும், சிவஞானங் கனிந்த தமிழ்மறையாகிய தேவாரத் திருப்பாடல்களைத் தொடுத்தலில் நீங்காத சிவந்த திருவாயும், சைவக்கோலமாகிய திருநீறு, உருத்திராக்கப் பொலிவுடைய அழகும் ஆகிய இவை

களை (என்ஞான்றும் மனத்துட் கொண்டு) வணங்கி வாழ் வோமாக.

(வி - ரை.) இடையறாப் பேரன்பு - தலையன்பு. அஃது காணினும் கேட்பினும் கருதினும் இன்பந்தரும் கட்டற்ற அன்பு. மழை - நீர். உழவாரம் – இறைவன் திருக்கோயில் இடங்களைத் தூய்மை செய்யும் கருவி நடை - நல்லொழுக்கம்; 'நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே' எனப் புறத்தும் வருதல் காண்க. வாகீசர் - திருநாவுக்கரசர்; இச் சொற்கேற்ற சொல்; இஃது வாக்கிறைவர் என்பது பொருள். ஞானப் பாடல்- சிவஞானத்தைக் குறித்துப் பாடும் தேவாரத் திருப்பாடல். இதனைச் 'சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்' என, சேக்கிழார் அருளுவதும் காண்க. (கஅ)

சுந்தரர்

ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட்
டாட்கொண்ட உவனைக் கொண்டே
இருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட
வல்லாளன் எல்லாம் உய்யப்
பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரித்த
பேரருளின் பெருமா னென்றும்
திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமாள்
எமதுகுல தெய்வம் ஆமால்.

(பொ - ரை.) நடக்கின்ற ஒரு திருமணத்தை நிறுத்த வலிய வழக்காடித் தம்மை ஆட்கொண்ட சிவபெருமானைக் கொண்டே, இரண்டு திருமணங்களைச் செய்து அவரையும் ஏவல்கொண்ட வன்மையுடையவரும், எல்லா உலகங்களும் பிறவிப் பிணிப்பினின்று விடுதலை பெறச் சிறப்பு மிக்க சிவமணங்கமழும் திருத்தொண்டத் தொகையை விளக்கி அருளிச் செய்த பெரிய அருளையுடைய பெருமானும், எக் காலத்தும் திருமணக்கோலத்திருவுருவுடைய பெருமானும், தேவாரத் திருமறையை அருளிச் செய்த பெருமானுமான ஆளுடைய நம்பிகள் எம் குலத்திலுள்ளோர்களின் தெய்வ மாவார்.

(வி - ரை.) ஒருமணம், இருமணம் என்பன சொல்லின்பம் தோன்ற நின்றன. வல்வழக்கு - வலிய வழக்கு. அஃதாவது நீ அடிமை நான் ஆண்டானென இறைவன் தடுத்தாட் கொண்ட வழக்கு. பெருமணம் - பெரிய மணம். யாவற்றினும் சிறந்த மணம். அஃதாவது சிவமணம். இறைவன் அடியார் பெருமையையெடுத்து விளக்குவது திருத்தொண்டத்தொகை. எனவே, அதற்குப் 'பெருமணச்சீர்' என்னும் அடை புணர்த்துக் கூறினர். பெருமாள் - பெருமையுடையார். ஆல்: அசை. (கச)

மாணிக்கவாசகர்

பெருந்துறையிற் சிவபெருமான் அருளுதலும்
பெருங்கருணைப் பெற்றி நோக்கிக்
கரைந்துகரைந் திருகண்ணீர் மழைவாரத்
துரியநிலை கடந்து போந்து
திருந்துபெருஞ் சிவபோகக் கொழுந்தேறல்
வாய்மடுத்துத் தேக்கிச் செம்மாந்
திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூர்
அடிகளடி இணைகள் போற்றி.

(பொ - ரை.) திருப்பெருந்துறையில் குருந்த மரத்தின் கீழ்ச் சிவபெருமான் சிவஞான உபதேசம் செய்தருள, அவரின் அளவற்ற திருவருளின் தன்மையை அகக் கண்ணால் நோக்கி மனம் நெக்குநெக்குள்ளுருகி, புறத்துள்ள இரண்டு கண்களினின்றும் இன்பக் கண்ணீரானது மேகம் போலப் பொழிய நின்மல துரியாதீத நிலையிற் சென்று, சிறந்த பெரிய சிவபோகமாகிய கொழுவிய தேறலைப் பருகி ஏப்பமிட்டு, எக்களித்தங் கொண்டு இருந்தருளிய அளவற்ற புகழையுடைய திருவாதவூரில் பிறந்தருளிய மணிவாசகப் பெருமானுடைய இரு திருவடிகளையும் வணங்குவோமாக.

(வி - ரை.) துரியநிலை - மேலான மோனநிலை. தேறல் - தேன். வாய்மடுத்தல் - உட்கொள்ளல். தேக்கி - நிறைத்து. வாதவூர் அடிகள் - திருவாதவூரிற் பிறந்தருளிய மாணிக்கவாசகர். இணைகள் - இரண்டு. செம்மாந்து - செருக்குக்கொண்டு. கீர்த்தி - மிகுபுகழ். போற்றி - வணக்கம். (கரு)

அறுபத்துமூவர்

கலிவிருத்தம்

தத்து மூதெயில் மூன்றுந் தழலெழ
முத்து மூரல் முகிழ்த்த நிராமய
சித்து மூர்த்திதன் தாளிணை சேரறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம்.

**(பொ-ரை.)** சுழன்று செல்கின்ற பழமையான மூன்று கோட்டைகளும் நெருப்புப்பற்ற, முத்தினையொத்த புன்முறுவல் பூத்த தனக்கோர் கேடுமற்ற, அறிவுருவரான சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளையும் அடைந்த அறுபத்துமூன்று நாயன்மார்களுடைய திருவடிகளை நாம் வணக்கஞ் செய்வாம்.

**(வி-ரை.)** தத்துதல் - நகர்தல்; திரிதல். மூது - முதுமை; பழமை: முதனிலை நீண்டது. முத்துமூரல் - முத்துப் போன்ற பற்கள்; ஆகு பெயராகச் சிரிப்பைக் குறித்தது. நிராமயம் - தனக்கென ஓர் வடிவற்ற தன்மை. பதமலர் - பாதமாகிய மலர்; உருவகம். (கரு)

சேக்கிழார்

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கினாற் சொல்ல வல்லபி ரானெங்கள்
பாக்கி யப்பய னப்பதி குன்றைவாழ்
சேக்கி ழானடி சென்னி இருத்துவாம்.

**(பொ-ரை.)** அடியவர் சிறப்பை அளவுபடுத்திக் கூறிய திருத்தொண்டத் தொகையை விரித்துத் தமது திருவாக்கினால் சொல்லவல்ல பெருமானாரும், எங்களின் நற்பேற்றின் பயனாகத் திருக்குன்றத்தூரில் வாழ்ந்த சேக்கிழார் பெருமானென்னும் திருப்பெயரையுடையவருமாகிய நாயனாருடைய திருவடிகளை நம் தலைமீது சூடிக்கொள்ளுவோமாக.

**(வி-ரை.)** தூக்குசீர் - சீர்தூக்கு என மாற்றுக. சீர்தூக்குதல் - அளவு படுத்துதல்; அன்றி ஆராய்தலுமாம். சேக்கிழார்

பெருமான் திருத்தொண்டத் தொகையிலுள்ள நாயன்மார்கள் வரலாற்றை விரித்துப் பெரியபுராணம் பாடியருளினராகலான், 'திருத்தொண்டத் தொகை......விரி' என்றார். பாக்கியம் - நற்பேறு; 'வள்ளுவரும் 'பலரறியார் பாக்கியத்தால்' என்றதுமறிக. குன்றை - குன்றத்தூர்; மரூஉ மொழி. சென்னி - தலை. (கஎ)

திருக்கூட்டத்தார்

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

**பேயன்ன புறச்சமயப் பிணக்குநூல்**
**வழியனைத்தும் பிழையே யன்றி**
**வாயன்மை தெளிந்துசைவ சித்தாந்த**
**வழிதேறி அதீத வாழ்விற்**
**போயண்மி அஞ்செழுத்தும் திருநீறும்**
**கண்டிகையும் பொருளாக் கொண்ட**
**நாயன்மார் திருக்கூட்டம் பணிந்திறைஞ்சும்**
**பெரும்பேறு நான்பெற் றேனால்.**

**(பொ - ரை.)** பேய்கள் பிதற்றுவதுபோல, முன்பின் மாறுபடக் கூறுகின்ற, வேற்றுச் சமயங்களில் உள்ள, மாறுபாடான நூல்கள் முழுவதும், பொய்யேயன்றி மெய்யல்ல வென்பதைத் தெளிந்து, சைவசித்தாந்த நூல்களைத் தெளிவுற்று, துரியாதீத வாழ்க்கையிற்போய் ஒன்றுபட்டு, திருவைந்தெழுத்தையும் திருநீற்றையும் உருத்திராக்கத்தையும் உண்மைப்பொருளாகக் கைக்கொண்ட சிவனடியார்கள் திருக்கூட்டத்தினை வணங்கி வாழ்த்துகின்ற பெரும்பயனை யான் பெறலானேன். ஆல் - அசை.

**(வி - ரை.)** பேய் - பிசாசு. புறச் சமயம் - சைவநெறியல்லாத மற்றச் சமயங்கள் அச் சமயங்கள் கூறும் பொருள்கள், உலகியல்களுக்கும், அறிவியல் நெறிக்கும் ஒத்த தன்மையில்லாது வெற்றுரையாக இருத்தலால், 'பேயன்ன புறச்சமயப் பிணக்கு நூல்' என்றார். இவ் வியல்பை, 'உலகச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்' என்றருளினர் மணிமொழிப் பெருமானும். 'ஓது சமயங்கள் பொருள் உணரு நூல்கள் ஒன்றோடொன்றொவ்வாமல் உள பலவும்' எனவரும் சிவஞான சித்தியார்த் திருவிருத்தத்தானும் அறிக.

அதீதம் – கடந்தது; மேற்பட்டது என்னும் பொருளது. திருக் கூட்டத்தார்-சிவபெருமானுக்குத் தொண்டு செய்யும் அடியவர் குழாம். (கஅ)

பஞ்சாக்கர தேசிகர்

**கயிலாய பரம்பரையிற் சிவஞான**
**போதநெறி காட்டும் வெண்ணெய்**
**பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்**
**மெய்ஞ்ஞான பானு ஆகி**
**குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்**
**குருநமச்சி வாய தேவன்**
**சயிலாதி மரபுடையோன் திருமரபு**
**நீடூழி தழைக மாதோ.**

**(பொ - ரை.)** *திருக்கைலாய பரம்பரையிலிருந்து சிவஞான போதத்தின் உட்பொருளைப் பரிபக்குவமுடைய உயிர்களுக்குத் தெரிவித்தருளுமாறு திருவெண்ணெய் நல்லூரில் தோன்றியருளிய உண்மைவாய்ந்த மெய்கண்ட தேவருடைய வழியினர்களுக்கு ஒப்பற்ற உண்மையறிவுடைய ஞாயிறாகி, குயில்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருவாவடுதுறையில் எழுந்தருளிய நமச்சிவாய குருமூர்த்தியாகிய நந்திதேவர் பரம்பரையையுடையவரின், சிறந்த மரபானது எக்காலமும் வளர்ந்தோங்குவதாகுக.*

**(வி - ரை.)** *திருக் கைலாயத்தில் சிவபெருமான்பால் திருநந்தி தேவர் சிவஞான போதத்தைக் கேட்டு, தம் மாணாக்கர்களுக்குச் சொல்லியருளினார். அதனால் திருக் கைலாய பரம்பரையென வழங்கலாயிற்று. மெய்கண்ட தேவர் திருவெண்ணெய் நல்லூரில் தோன்றி உண்மைப் பொருளான சிவஞான போதத்தைப் பன்னிரண்டு நூற்பாக்களால் அருளி, உலகுய்யத் தம் மாணவரான அருணந்தி சிவாச்சாரியார்க்கருளினார். அதனால் அவர்கள் மெய்கண்டார் பரம்பரை யெனப்பட்டனரெனக் கொள்க.*

*பொழில் - சோலை. பானு - ஞாயிறு. சயிலம் - மலை. சிலாத முனிவர்க்குத் திருமகனாராக நந்திதேவர் தோன்றலால் சயிலாதி பரம்பரை யெனப்பட்டது.* (கக)

### பின்வேலப்ப தேசிகர்

**எவ்வெவர்கோட் படுபொருளும் அஞ்செழுத்தின்**
**அடக்கியவற் றியல்பு காட்டி**
**மெய்வகையஞ் சவத்தையினும் நிற்குமுறை**
**ஓதுமுறை விளங்கத் தேற்றி**
**எவ்வெழுத்தின் உள்ளீடும் அறிவித்துச்**
**சிவபோகத் தழுத்தி நாயேன்**
**செய்வினையும் கைக்கொண்ட வேலப்ப**
**தேசிகன்தாள் சென்னி சேர்ப்பாம்.**

**(பொ - ரை.)** *எந்தெந்தச் சமயத்தவராலும் கொள்ளப் பெறுகின்ற பொருள்களையும் திருவைந்தெழுத்தினுள் அடங்கச் செய்து, அத் திருவைந் தெழுத்தின் தன்மையைத் தெரியச் செய்து, உடம்பிடத்தே தோன்றுகின்ற ஐந்து அவத்தையிலும் நிற்கின்ற முறையையும் ஓதுகின்ற முறையையும் ஐயம் நீங்கத் தெளிவுபடுத்தி, அத் திருவைந் தெழுத்தின் உட்பொருளாகிய சிவத்தையும் தெரிவித்து, சிவபோக நிலைக்கண் மாறாது அழிழ்த்தி, நாயினுங் கடையேனை எளியேன் செய்கின்ற வினைகளையும் கைக்கொண் டருளிய வேலப்ப தேசிகருடைய திருவடிகளை எம் தலைமீது இருத்துவேமாக.*

*(வி - ரை.) எவ்வெவர்-எந்த எந்தச் சமயத்தோர். கோட்படு பொருள் - கொள்ளுகின்ற பொருள். அவை பதியே பொருளென் போரும் உயிரே பொருளென்போரும் பாசமே பொருளென் போரும் முதலியவற்றால் மாறுபடும் வேற்றுச் சமயத்தோர். சைவ சமயமோ கடவுள் உயிர் உலகம் என்னும் முப்பொருள்களும் எக் காலத்தும் உள்ளன வென்று அளவை முறையில் அளந்து காட்டுவது. அதனால் 'இயல்பு காட்டி' என்றார். அஞ்செழுத்து திருவைந்தெழுத்தாகிய பஞ்சாக்கரம். இப் பஞ்சாக்கரத்தை இலாடத் தானத்தில் கருவிகளோடு கூடிநிற்கும் சகல சாக்கிரத்தில், அக் கருவிகளோடு கூடாமல் நிற்கின்றனவான, நின்மல சாக்கிரம், நின்மல சொற்பனம் நின்மல சுழுத்தி, நின்மலதுரியம், நின்மல துரியாதீதம் என்னும் தூய அவத்தைகளில். திருவைந்தெழுத்து நிற்கு நிலையையும், அவ்வவ்விடங்களில் நின்று பதுக்கு (உச்*

சரிக்கு) முறையையும் அனுபவ வாயிலாக விளக்கியவாற்றாலும், சிவத்தோடிரண்டறக் கலந்து அனுபவிக்கும் தன்மையையும் உணர்த்தியருளிய வேலப்ப தேசிகருக்கு வணக்கங் கூறியவாறும்.

சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாததீதம் என்னும் வடசொற்கள், முறையே விழிப்பு, கனவு, செயலறல், தன்வயமாக நிற்றல், தன்வயமுங் கடந்து நிற்றல் எனப்பெறும் (உ0)

மற்றைய சிவநேசர்கள்

மறைநான்கும் பயின்றொழுகி இட்டிகளும்
பலவியற்றி மல்லல் ஞாலத்
திறவாத புகழ்படைத்தும் ஈசனிடத்
தன்பிலரை யெண்ணா துள்ளம்
புறமோதிக் கொலைபயின்று மதுமாந்துங்
கொடும்பாவப் புலைய ரேனும்
அறவாணன் திருவடிக்கீழ் அன்பினரேல்
அவரெம்மை அடிமை கொள்வார்.

**(பொ - ரை.)** நான்கு மறைகளையும் ஓதியுணர்ந்து அவ்வழியே நடந்து பல வேள்விகளையுஞ் செய்தும், வளம் பொருந்திய இந்நில வுலகத்தில் கெடாத புகழையடைந்தும், சிவபெருமானிடத்தே அன்பில்லாதவர்களை அடியேன் மனம் (ஒரு பொருட்டாக) எண்ணாது, அறத்தாறில்லாத நூல்களையே கற்று, கொலைத் தொழில் செய்வதில் தேர்ச்சி பெற்றுக் கட்குடிக்கும் கொடிய பாவத்தையுடைய புலையர்கள் ஆனாலும் அறவடிவினரான சிவபெருமான் திருவடியிடத்தே அன்பராக இருப்பாரானால், அவரே எம்மை வழி வழி அடிமையாகக் கொள்பவராவர்.

(வி - ரை.) கற்கக் கூடிய நல்ல நூல்களைக் கற்றும், அதன் வழியே ஒழுக்கத்தோடு நடந்தும், யாகஞ்செய்தல் போன்ற புகழுக்குரியவற்றைச் செய்தும், இவற்றால் புகழ் பெற்றவர்களாக இருந்தாலும் சிவபெருமானிடத்து அன்பில்லாதவர்களை ஒரு பொருட்டாக அடியேன் மதியேன்; இறைவனிடத்து அன்புடையார், கொலைத் தொழில் உடையராய்க் கட்குடிப்பவராய், உள்ள புலையர்களானாலும் அவரே எம்மை அடிமை கொள்ளும் சிறந்தோராவர்.

இக்கருத்தோ டொப்ப,

[1]" சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவ ரேனும்
மங்குவார் அவர்செல்வம் மதிப்போ மல்லோம்
மாதேவர்க் கேகாந்தர் அல்ல ராகில்
அங்கமெலாம் குறைந்தழுகு தொழுநோ யராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம்வணங்கும் கடவு ளாரே."

எனவரும் திருநாவுக்கரசர் தேவாரத்தாலும் அறிக. (உக)

## நூல் செய்தற்குக் காரணம்

### கலிநிலைத்துறை

**பொருவில் கச்சியம் புராணம்வண் தமிழினிற் புகலென்**
**றிருநி லம்புகழ் மணிமதிற் கச்சியே கம்பர்**
**திருவ ருட்குரி யான்றவர் கூறிய சிறப்பால்**
**உரிமை யுற்றெழும் ஆசையான் உரைத்திட லுற்றேன்.**

**(பொ - ரை.)** *ஒப்பற்ற அழகிய காஞ்சிப் புராணத்தை (வட மொழியில் இருந்து) சிறப்புடைய தமிழ்மொழியில் மொழிபெயர்த்துக் கூறுக என்று, பெரிய நிலவுலகம் புகழுகின்ற மணிகளழுத்திய திருமதில் சூழ்ந்த கச்சியில் எழுந்தருளியிருக்கின்ற, திருவேகம்பரின் திருவருட்கு உரிமையரான பெரியோர்கள் கூறிய மேம்பாட்டினால், அதற்கு உரிமை பூண்டு மேலோங்கிய ஆசையினால் இதைச் சொல்லத் தொடங்கினேன்.*

(வி - ரை) *வண் தமிழில் என்றமையால் வடமொழியிலிருந்து என்றசொல் வருவித்து உரை கூறப்பட்டது; இது, இறைவன் திருவடியார்கள் வேண்ட இந்நூல் செய்தேன் என்பதால் காரணமும், அதனால் இது வழிநூல் என்பதும் இதனால் விளக்கம் பெறுதல் காண்க. உரிய என்னும் குறிப்புவினைப் பெயரெச்சத்தின் இறுதி அகரம், விகாரத்தால் தொக்கது.* (உஉ)

1. *திருநாவுக்கரசர் தேவாரம். பதிகம் ௩0௬ : ௧0.*

## அவையடக்கம்

**மாயை காரிய உருக்களும் எம்பிரான் வடிவம்**
**ஆய வேலவை அருள்மயம் ஆகுமற் றதுபோற்**
**பேய னேன்பிதற் றுரையுமே கம்பர்தம் பெருமைத்**
**தூய காதையுள் ளுறுதலால் துகளறத் தோன்றும்.**

**(பொ - ரை.)** *அசுத்த மாயையின் காரியமான கல் மரம் முதலிய பொருள்களும், எப்பெருமானுடைய திருவுருவமாக அமையுமானால், அவைகள் திருவருள் உருவமாகும்; அதைப்போலப் பேய்த் தன்மையனாகிய அடியேன் பிதற்றுரையாகச் சுத்த மாயை காரியமான மொழிகளாலமைந்த இச் செய்யுளாலியன்ற இந்நூலும், திருவேகம்ப முடையாருடைய பெருமை பொருந்திய குற்றமற்ற வரலாறு தம்மிடம் பொருந்தியிருத்தலால் குற்றம் நீங்கி விளங்குவதாகும்.*

(வி - ரை.) *கல் மரம் முதலியவற்றால் செய்த இறைவன் திருவுருவம் இறைவன் திருஅருள் வடிவமாகக் கொள்ளப்படுவது; அதனையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு உலக மக்கள் போற்றுவர். அதுபோல் இறைவன் புகழ் கூறும் நூலும், அது பிழையுள்ளதாக இருந்தபோதினும், திருவேகம்பமுடைய பெருமான் வரலாறு கூறுதலால் குற்றமற்றதாகக் கொள்க வென அவையடக்கம் கூறியவாறும். அவையடக்கங் கூறுதல் ஆன்றோர் மரபு. அம்முறைபற்றி ஈண்டு அவையடக்கங் கூறினார். இக்கருத்தோடொப்ப, திருவிளையாடற் புராணத்தும்,*

[1]'*நாயகன் கவிக்குங் குற்றம் நாட்டிய கழக மாந்தர்*
*மேயஅத் தலத்தி னோர்க்கென் வெள்ளறி வுரையில் குற்றம்*
*ஆயுமா றரிதன் றேனும் நீர்பிரித் தன்னம் உண்ணும்*
*தூயதீம் பால்போற் கொள்க சுந்தரன் சரிதம் தன்னை.'*

*எனவும்,*

[2]'*பாய வாரியுண் டுவர்கெடுத் துலகெலாம் பருகத்*
*தூய ஆக்கிய காரெனச் சொற்பொருள் தெளிந்தோர்*

1, 2. *திருவிளை. மதுரைக் காண்டம்: உஎ, உக.*

ஆய கேள்வியர் துகளறுத் தாலவா யுடைய
நாய ஞர்க்கினி தாக்குப நலமிலேன் புன்சொல்.'

எனவும் வரும் பரஞ்சோதிமுனிவர் கூற்றுனும் அறிந்தின்புறுக.

மற்று : அசைநிலை. (உங)

**இழித்த சொற்புணர்த் தெளியனேன் இயம்பிய கவியும்**
**கழித்த ஐவகை இலக்கண வழுவுக்குக் காட்டாப்**
**பழித்தி டாதெடுத் தாளுவர் பல்வகைச் சுவையும்**
**கொழித்த நாவின ராகிய வழுத்தபு குணத்தோர்.**

(பொ - ரை.) பலவகையான சொற்சுவையும் பொருட் சுவையும் மிகுதியாகக் கொண்ட நாவினையுடைய குற்றத்தி னின்றும் நீங்கிய குணத்தினையுடைய மேலோர், அறிவிற் குறைந்தவனுகிய நான் அம் மேலோரால் விலக்கப்பட்ட வழுக்கள் நிறைந்த சொற்களால் தொடுத்துக் கூறப்பட்ட செய்யுளும் எழுத்து முதலிய ஐவகைப்பட்ட இலக்கணங் களுக்கும் வழுவென்று விலக்கிய வழுக்களுக்கு எடுத்துக் காட்டாக, இகழாமல் இதனை யெடுத்து ஆளுவர்.

(வி – ரை.) பலவகைச் சுவையென்பன: சொற்சுவை, பொருட்சுவை என இருவகையின. சொற்சுவை : குணம், அணி யென்பன. பொருட்சுவை : நகை அழுகை இளிவரல் மருட்கை அச்சம் பெருமிதம் உவகை வெகுளி சமநிலை என்னும் ஒன்பது மாகும். இழித்த சொற்களென்பன : திணைவழு, பால்வழு இட வழு, காலவழு, வினவழு, விடைவழு, மரபுவழு எனப் பலவாம். இவைகளைத் தொல்காப்பியம் முதலிய இயல் நூல்களிற் காண்க.

இதில் ஆசிரியர் தம் செய்யுட்களையே இலக்கண வழுக் களுக்கு எடுத்துக் காட்டாக எடுத்தாளுவர். தம் செய்யுட்கள் வழுக்களுக்கேனும் ஆன்றோர் எடுத்துக்காட்ட அமைந்ததெனக் குறிப்பது; தம் பணிவுடைமையையும் கற்றுத் துறைபோய அறிஞர்பால் நன்மதிப்பையும் புலப்படுத்துவனவாகும். திருத் தக்கதேவரும் தம் சிந்தாமணிக் காப்பியத்தில்,

[1]'சொற்பா லுமிழ்ந்த மதியும் மதியாற் கழுவிப்
பொற்பா அமைத்துக் கொளற்பாலர் புலமை மிக்கார்.'

என்ற கருத்தும் ஒத்ததாதல் அறிக. (உச)

---

க சீவகசிந். அவையடக்கம் : க.

**எழுத்துப் போலியும் எழுத்தென ஆளுவர்அது போல்**
**புழுத்த நாயினேன் பிதற்றிய செய்யுட்போ லியையும்**
**பழுத்த கேள்வியோர் கைக்கொள்வர் என்பது பற்றி**
**விழுத்த நாணினேன் சிவகதை விளம்புதற் கிசைந்தேன்.**

**(பொ - ரை.)** *அறிவுடையோர் எழுத்துப் போலியை யும் எழுத்தென்றே கைக்கொள்ளுவர். அதைப்போலாகப் புழுநெளிகின்ற உடலையுடைய நாயினுங் கடைப்பட்ட அடி யேன் பிதற்றியுரைத்த போலிச் செய்யுட்களையும் நிறைந்த கல்வி கேள்வியையுடைய அறிவாளர் எடுத்தாளுவர் என் பது கருதி, நாணத்தை உதிர்த்த நான் சிவகதையைக் கூறு தற்கு முற்பட்டேன்.*

(வி - ரை.) *எழுத்துப் போலியாவது, போலிமணியை யொத்தது. அய் ஐ ஆகவும், அவ் ஔ ஆகவும் அம்முழு எழுத் தைப்போலக் கூட்டெழுத்துக்களையும் கொள்ளுவது. அதைப் போலத் தம் செய்யுட்கள் சொற்சுவை, பொருட்சுவை, ஓசை நயம், சுருங்கச் சொல்லல் முதலிய பத்தழகுகளும் இல்லாமல் வெற்றெனச் சொற்கோப்புக்களால் இயற்றியதாகத் தாமே கொண்டு 'பிதற்றிய செய்யுட்போலி' என்றார்.*

*விழுத்த - விழச் செய்த; உதிர்த்த என்னும் பொருளதாய், நாணமின்மையைக் குறிக்க வந்தது. சிவகதை - சிவபெருமான் வரலாறு; அஃதாவது இறைவன் மக்களுக்காகச் செய்த திரு விளையாடல்.* (உரு)

**நெறிவ ழாவுமை பூசனை போனெறி பிறழ்ந்தோன்**
**எறித ருங்கலும் கைக்கொளும் கச்சியெம் பெருமாற்**
**கறிவின் மேலவர் காப்பியப் பனுவல்போல் அறிவின்**
**குறியி லேன்கவிப் புன்சொலுங் கொள்வது வழக்கால்.**

**(பொ - ரை.)** *சைவாகம நெறியினின்றும் நீங்காத உமையம்மையாரின் வழிபடு முறையைப்போல, சைவ நன்னெறியினின்றும் நீங்கிய சாக்கிய நாயனார் எறிந்த கல்லையும் ஏற்றுக்கொண்டருளிய காஞ்சிபுரத்தில் எழுந் தருளியிருக்கின்ற எம் சிவபெருமானுக்கு அறிவிற் சிறந்த பெரியோர்கள் ஆக்கிய பெருங்காப்பியமாகிய நூல்களைப்*

போல, கல்வியறிவென்று கூறப்பெற்றவற்றுள் ஒரு குறிப்பும் இல்லாத எளியேன் தொடுத்த புன்சொற் கவியையும் ஓர் சிறந்த கவியாக ஏற்றுக்கொண்டருள்வதும் அவர்க்குச் சிறந்த ஒழுகலாறாகும். (எனவே, எளியேன் புன்கவியையும் ஏற்றுக்கொண்டருளுவார்.)

(வி - ரை) இறைவனுக்குக் காஞ்சி நகரில் உமையம்மையார் சைவாகம நூலின் விதிவழிச் செய்தருளிய வழிபாட்டைப் போலச் சாத்தமங்கையில் தோன்றிப் புத்த சமயத்தில் நின்ற சாக்கிய நாயனார், உள்ளன்பு கொண்டு எறிந்த கல்லையும் ஆகமத்தில் கூறப்பட்ட நன்மலராகக் கொண்டருளினர் என்பது வரலாறு. அத் தன்மையைப்போல, கல்வியிற் சிறந்தோர், தம்மேற் செய்த பெருங்காப்பிய நூல்களை ஏற்றுக்கொண்டருளுவதுபோல, அறிவின் குறியில்லாத எளியேன் புன்கவி நூலையும் ஏற்றுக்கொள்வது மரபாகும் எனக் குறித்தார். சாக்கிய நாயனார் கல்லெறிந்த வரலாற்றை,

[1]'நல்லோன் எறிசிலையோ நன்னுதால் ஒண்கருப்பு
வில்லோன் மலரோ விருப்பு'

என, நன்னெறியினும்,

[2]'கல்லாலே எறிந்துதவும் அன்பான படிகாணில்
வில்வேடர் செருப்படியும் திருமுடியின் மேவிற்றால்
நல்லார்மற் றவர்செய்கை அன்பாலே நயந்ததனை
அல்லாதார் கல்லென்பார் அரனார்க்கஃ தலராமால்'

எனத் திருத்தொண்டர் புராணத்தும் வருதல் காண்க.

அவையடக்கமென்பது, நிறைந்த பேரவையிற் சிறந்த தவலருந்தொல்கேள்வித் தன்மையுடையவர்க்கு வழிபடு சொல்லாகப் பணிந்த மொழியால் அடங்கிக் கூறுதல். இதன் இயல்பை,

[3]'அவையடக் கியலே அரில்தபத் தெரியின்
வல்லா கூறினும் வகுத்தனர் கொண்மினென்று
எல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே.'

என வரும் தொல்காப்பியச் செய்யுளியல் நூற்பாவாலறிக.

அம்முறைகொண்டு நூலாசிரியர் 'மாயை காரியஉருக்களும்' என்பது முதலாக,'நெறிவழா உமைபூசனை' என்பது ஈறாக நான்கு

1. நன்னெறி 2. பெரியபுராணம், சாக்கிய : கசு.
3. தொல். செய்யு: ககரு.

செய்யுட்களால் பல கருத்துக்கொண்டு அவையடக்கத்தைத் திறம்பெறக் கூறினர். (உசு)

நூற் சிறப்புப்பாயிரம்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பணிக் குரிய மயேச்சுரர் முதலா
நால்வரும் தருகவென் றறைய
மருட்பகை துமிக்கும் காஞ்சிமான் மியத்தை
வழங்குதென் மொழியினுல் உரைத்தான்
கருப்பகை இரிக்கும் ஞானமும் ஏனைக்
கலைகளும் கரிசறப் பயின்ற
மருப்பொழில் உடுத்த ஆவடு துறையில்
வாழ்சிவ ஞானமா தவனே.

(பொ - ரை.) பிறப்பென்னும் பகையை நீக்குகின்ற சிவஞானபோத அருள் நூலையும் மற்றைய கலை நூல்களையும் குற்றமறக் கற்றுத் துறைபோய மணம் பொருந்திய சோலைகள் சூழ்ந்துள்ள திருவாவடுதுறைக்கண் வாழ்கின்ற சிவஞான முனிவர் என்னும் திருப்பெயர் வாய்ந்த பெரிய தவத்தையுடையோரானவர், திருவருளைப் பெறுதற்குரிய திருப்பணியில் முயலுகின்ற மயேச்சுரர் முதலிய நால்வர்களும் புராணம் இயற்றித் தருகவென்று கேட்க, தன்னைச் சேர்ந்தோருடைய மலப்பகையை ஒழிக்கின்ற காஞ்சித் திருநகரின் பெருமையை எக்காலத்தும் நிலைபெற்றிருக்கின்ற தமிழ்மொழியால் மொழிபெயர்த்துப்பாடியருளினர்.

(வி - ரை ) மயேச்சுரர் முதலிய நால்வர் என்றது, மயேச்சுரர் நாற்பத்தெண்ணுயிரவர் ; எழுநூறு திருமடத்து முதலிகள், தில்லைவாழ் அந்தணர் மூவாயிரவர் ; திருத்தொண்டு செய்யும் திருப்பேர் ஏழாயிரத்துத் தொளாயிரவர் என்பவர்களை.

[1] "தில்லை மாநகர் வாழவாழ்தவ சிந்தை அந்தணர் ஆறைஞ்ஞூறு
அல்ல தும்பல மடபதித் தவராச ரிக்கையில் உள்ளபேர்
எல்லை இல்லவர் யாவருங்களி கொளவி ளங்கச ரீரிவாக்கு
ஒல்லை வந்தெழ அனை வருங்கரம் உச்சி வைத்துளம் உருகினர்.,
என்னும் சேக்கிழார் புராணச் செய்யுளாலும் அறிக. (உஎ)

1. சேக்கிழார் நாயனர் புராணம்: கூஉ.

# திருநாட்டுப் படலம்

*நாடு வாழ்த்துத் துறை*

**கலிநிலைத்துறை**

**பணங்கொள் பாம்பணி கம்பனூர் பனிவரை பயந்த**
**அணங்கி னேடென்றும் அமர்ந்தினி தரசுவீற் றிருக்கும்**
**உணங்க ரும்புகழ்க் காஞ்சியை அகந்தழீஇ உம்பர்**
**வணங்க மேவரும் பாலிநாட் டணிநலம் வகுப்பாம்.**

**(பொ - ரை.)** *படத்தையுடைய நாகப்பாம்பை அணியாக அணிந்தருளிய திருவேகம்பனூர், இமயமலைச் செல்வியாகிய உமையம்மையுடன் எக்காலத்தும் விரும்பி இனிமையாக அரசு செய்து ஒப்பில்லாதிருக்கும் கெடுதலற்ற புகழ் வாய்ந்த காஞ்சி நகரைத் தன்னுட் கொண்டு, விண்ணுலகத் தேவர்களும் வணங்கும்படி நிலைபெற்றிருக்கின்ற பாலி நாட்டின் சிறப்பையும் வளத்தையும் இனி வகுத்துக் கூறுவாம்.*

**(வி - ரை.)** *பணம் - படம். கம்பனூர் - திருவேகம்பமுடையராகிய இறைவர். இறைவன் உலகைப் படைத்தலும் காத்தலும் அழித்தலும் ஆகிய முத்தொழிலையும் முறைப்படச் செய்கின்ற பேராற்றலுடையவனுதலால் 'அரசு வீற்றிருக்கும்' என்றூர். உம்பர் வானுலகத்திலுள்ள தேவர்கள். காஞ்சி நகரம் பண்டு தொட்டே கல்வி கேள்வி மிக்க பெரியோர்களும், அடியாரும், சமயக் கணக்கர்களும் இருந்த பெருமை பொருந்தியது. இதனுல் இது, 'கலைசேர் காஞ்சி' எனப் புகழ்பெற்றது அதனுல் 'உணங் கரும் புகழ்க் காஞ்சி' என்றூர். திருத்தக்காரும் ஏமாங்கத நாட்டின் மாண்பை இயம்புங்கால், 'பொருள் செய்வார்க்கும் அஃதிடம் தவஞ் செய்வார்க்கும் அஃதிடம்' என்பதை நோக்குக. பாலி நாடு பாலியாறு பாய்ந்தோடி அடுத்த வயல் குளம் நிரம்பிச் செந்நெலும் கன்னலும் தேமாங்கனிகளும் தெங்கும் வாழையும் விளைத்துத் தரும் சிறப்பு மிக்கதாகலான், உம்பர் வணங்க மேவரும் பாலி நாடென்றூர்.* (க)

## மழை வாழ்த்துத்துறை

**கடல்க டைந்திடச் செல்லுறாஉம் வெள்ளைமால் கடுப்பப்
படலை வெண்முகில் பரவைநீ ருழக்கிவாய் மடுத்து
விடமெ ழுந்தென மீண்டவம் மாயனை விழைய
உடல்க றுத்துவிண் நெறிப்படர்ந் தொய்யென மீண்டு.**

**(பொ - ரை.)** *திரண்ட வெண்ணிற மேகங்கள், பாற்கடலைக் கடையச் செல்கின்ற வெண்ணிறமுடைய திருமாலை யொப்ப, கடல் நீரைக் கலக்கி, உண்டு செறித்து, அப்பாற்கடல் நின்றும் ஆலகால நஞ்சு உண்டாயிற்று என்று திரும்பிய அத்திருமாலை யொப்ப, உடல் கறுத்து விரைந்து வானத்தின் வழியாகச் சென்று திரும்பி;*

(வி - ரை.) *வெண்ணிற மேகங்கள் வானத்தின்வழியே சென்ற தன்மைக்குத் திருமால் நிறத்தை உவமங் கூறினார் திருமால் வெண்ணிறத் திருவுருவன். தேவர்கள் வேண்டுகோட்கிணங்கிப் பாற்கடலில், மந்தரமலையை மத்தாக நாட்டி, வாசுகி என்னும் பெரும்பாம்பை அம் மத்துக்குத் தயிர்கடை கயிறாக இணைத்து வானவரும் தானவரும் இருபுறனும் நின்று கடைந்த போது அத் துன்பம் பொறுக்கலாற்றாது பாம்பு நஞ்சைக் கக்கிற்று; நஞ்சின் வேகம், நாடு நகர் முழுதும் பரவி வருத்திற்று; கடல் கடைய முன்னின்ற திருமால் உடல் நிறம், வெண்மை மாறி நஞ்சின் வேகத்தால் கருநிறமாக மாறிற்று. எனவே, 'கடல்கடைந் திட.... வெள்ளைமால் கடுப்ப' என்றார். படலை - திரட்சி. பரவை- கடல். கடுப்ப, விழைய என்பன, உவமவுருபுச் சொற்கள். ஒய்யென: விரைவுக் குறிப்புணர்த்தும் குறிப்புச் சொல்.* (உ)

**அற்றை ஞான்றுமால் கயிலையைச் சரணடைந் தாங்குப்
பொற்ற நந்தியஞ் சாரல்சூழ் பொருப்பினைக் குறுகிக்
கற்றை வார்சடைச் சுந்தரன் கடவுளான்மதுரை
முற்று நான்முகில் எனவரை முழுவதும் பொதிந்து.**

**(பொ - ரை.)** *திருமாலானவர் அந் நாளில் திருக்கைலையில் அடைக்கலம் புகுந்ததைப்போல, பொன் கட்டிகளையுடைய அழகிய சாரல் சூழ்ந்துள்ள நந்தி மலையையடைந்து, நீண்ட சடைமுடியையுடைய சோமசுந்தரப்*

பெருமான் செலுத்த, உயர்ந்த மதுரைநகர் முழுதும் புட்கலாவர்த்தம் முதலிய நான்கு மேகங்களும் மூடியது போல, அந் நந்திமலை முழுவதும் மூடி;

(வி - ரை.) நஞ்சால் வெண்ணிறம் மாறிய திருமாலானவர். திருக் கைலையைச் சென்றடைந்தாற்போல, கடல்நீரை மொண்டு கொண்டெழுந்தமையால் நந்திமலையை யடைந்து என உவமை கூறினார். இது, தொழில் குறித்த எடுத்துக்காட்டு உவமையணி.

பொற்ற - பொன் + அ; பொற்ற என வந்தது. றகரம் எழுத்துப் பேறு; பொன்னையுடைய எனப் பொருள் கொள்ளக் கிடந்ததறிக. கற்றை - திரள். கடவ - செலுத்த; போக்க, வரை - நந்திமலை. (கூ)

**முரிந்த வெண்டிரைக் கருங்கடல் முகட்டினைக் குழித்து**
**விரிந்த வெள்ளநீர் மடுப்புழிக் கரந்துடன் மேவிக்**
**கரிந்தி டத்தனைச் செய்ததீ வடவையின் களவைத்**
**தெரிந்து வில்லுமிழ் தடித்தெனத் திசைதொறும் சிதறி.**

(பொ - ரை.) கரைகளில் அடித்து முறிபட்ட வெண்ணிற அலைகளையுடைய கரிய கடலினது மேலிடத்தைக் குழியாக்கி, பரவியுள்ள நீர் வெள்ளத்தைப் பருகுமிடத்தே, ஒளித்துத் தன் உடலிற் புகுந்து தன்னைக் கருநிறமாகும்படி செய்த வடவைத் தீயினது களவுத் தன்மையை யறிந்து, அத்தீயின் ஒளியை மின்னலென்று கூறும்படி திக்குகள் தோறும் தன் மின்னலைப் பரப்பி;

(வி - ரை.) மேகம் நீர்மொண்டெழுந்தபின் மின்னல் வீசுவது, தன்பால் களவாக வந்து நுழைந்த நெருப்பை வெளிப்படுத்தி உலகினருக்கு அறிவிப்பதுபோல் இருப்பதாகத் தற்குறிப்பேற்ற அணி தோன்றக் கூறினார். மடுப்பு என்னும் தொழிற்பெயர் பெயரெச்சப் பொருள்பட வந்தது: முற்றெச்சம். தனனை வஞ்சித்த வடவைத்தீயுடன் போர் கொள்ளக் கருதியதால் இதனை உழிஞைத் திணையின்பாற் படுத்துக.

கரிய கடலின் நிறத்தை வடவைத் தீயால் சுடடுக்கருகச் செய்ததாகக் குறித்தது, வியப்புச் சுவைக்குரிய வொன்றும்.
தடித்து - மின்னல் சிதறி - பரப்பி ; வீசி. (ச)

**கான்ற அக்கனல் மீட்டடை யாவகை கருதி**
**வான்ற னிற்குனி சிலையெனத் தடையினை வயக்கி**
**ஏன்ற நீயினி யெதிர்த்தனை யாயிடின் இன்னே**
**ஊன்ற னேடுயிர் குடிப்பலென் றுருமொலி யெழுப்பி.**

**(பொ - ரை.)** *தான் கக்கப்பட்ட அந்த வடவைத்தீ மீண்டும் தன்னைச் சாராதவண்ணம் எண்ணி, வானத்தில் வளைந்த வில்லென்று சொல்லத் தடையாக வானவில்லை விளங்கச் செய்து எதிர்த்த நீ இன்னும் என்னை எதிர்ப்பா யானல், இப்போதே உன் உடம்பினுடன் உயிரையும் குடிப் பேனென்று இடியொலியை முழக்கி;*

(வி - ரை.) *ஊன் - உடம்பு: கருவியாகுபெயர். 'ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெலாம்'என்பதால் அறிக. தன்:அசை.*(கூ)

**அடுத்த டுத்தலை மோதுதெண் திரைப்புனல் அளக்கர்**
**உடுத்த பாரிலுன் கிளையெலாம் முதலற ஒருங்கே**
**படுத்து நின்வலி பாற்றுவன் யானெனப் பகைமை**
**தொடுத்த வெஞ்சினங் கொண்டழல் மேலமர் தொடங்கி.**

**(பொ - ரை.)** *கரையை அடுத்து மோதுகின்ற தெளிந்த அலைகளையுடைய நீர்மிக்க கடல் சூழ்ந்துள்ள உலகத்தில், உன்னுடைய சுற்றத்தாரையெல்லாம் வேரோடு தொலைய ஒருசேர அழித்து, யான் உன் வலிமையை யொழிப்பேனென்று பகையால் தோன்றிய கொடிய சின முற்று அவ் வடவைக் கனல்மீது போர்த் துவக்கங்கொண்டு;*

(வி - ரை.) *அடுத்து அடுத்து என்னும் அடுக்கு இடை விடாப் பொருளில் வந்தது. திரைப்புனல்: உருபும் பயனும் உடன் தொக்க தொகை. படுத்தல்-கெடுத்தல் அழல் - இங்கே வடவைத்தீ.* (சு)

**விச்சை மந்திர வலியினுல் வீங்குநீர் மழையை**
**வச்சி ரக்கணை யாக்கிமெய் வளமெனக் கருளும்**
**பொச்சம் இல்மறை வேள்வியும் புனிதனேந் தழலும்**
**எச்ச மாகமற் றெவையுமீண் டறுக்கென இயம்பி.**

**(பொ - ரை.)** *மந்திரவித்தையின் வல்லமையினாலே மிக்க நீர்வடிவமாகிய மழைத் துளியை வச்சிர அம்புகளாக்கி மெய்ம்மையான வளத்தை எனக்குக் கொடுக்கும் பொய்ம்மை தீர்ந்த வேத முறைப்படி செய்யும் வேள்வியும் சிவபெருமான் எடுத்துள்ள நெருப்பும் ஒழிய மற்ற எவ்வகைத் தீயையும் அறத்தொழிப்பாயாக வென்று அம்மழைத்துளி அம்புக்குக் கூறி ஏவி;*

**(வி - ரை.)** *விச்சை - வித்தை என்பதன் போலி. வீங்கு; மிகுதி. நீர்மழை: இருபெயரொட்டாகக் கொள்ளலுமாம். பொச்சம்-பொய்ம்மை. புனிதன்-மலமற்றவன்; ஈண்டுச்சிவபிரான். (எ)*

*மழைவளம*

**காட்ட கங்களும் கழைநரல் கதிர்மணிச் சிமயக்**
**கோட்ட கங்களும் குளிர்புனற் கழனிசூழ் குலவு**
**நாட்ட கங்களும் பரன்முரம் படுத்தெரி நடஞ்செய்**
**மோட்ட கங்களும் முழுவதுங் குளிர்கொளச் சொரிந்து.**

**(பொ - ரை.)** *காட்டு இடங்களும் மூங்கில்கள் ஒலிக்கின்ற ஒளி பொருந்திய முத்துக்களையுடைய உச்சியையுடைய மலையினிடங்களும், குளிர்ந்த நீர்மிக்க வயல்கள் சுற்றி விளங்குகின்ற நாட்டினிடங்களும், பருக்கைக் கற்கள் நிறைந்த மேட்டு நிலங்களையடுத்து, நெருப்புத் திரள்கள் கொப்புளிக்கும் பாலைநிலமாகிய இடங்களும் ஆகிய இவைகள் முற்றும் குளிர்ச்சி கொள்ள அம் மழையாகிய அம்புகளைப் பொழிந்து;*

**(வி - ரை.)** *இதன்கண் முல்லைகுறிஞ்சி மருதம் பாலையென்னும் நால்வகை நிலங்களும் கூறப்பட்டமையறிக. காடு- முல்லை நிலம்; கோடு - மலை; குறிஞ்சிநிலம்; கழனிசூழ்நாடு-மருதநிலம்; எரிநடஞ் செய்மோடு - பாலைநிலம். (அ)*

**இற்றொ ழிந்தன ஒழியமற் றெஞ்சிய எரிபோய்க்**
**கற்ற வேதியர் வேள்வியஞ் சாலையுட் கரப்ப**
**உற்ற வாகண்டு தன்சினக் கனலையும் ஒருவி**
**வெற்றி மாமுர சென மறைப் பேரொலி விளக்கி.**

**(பொ - ரை.)** *கெட்டொழிந்த நெருப்புகள் நீங்கலாக, கெடாது நின்று எஞ்சிய நெருப்புப்போய் மறைகளை ஓதி யுணர்ந்த அந்தணருடைய வேள்விச் சாலையில் ஒளிந்து கொள்ள, அத் தீ அடைந்த தன்மையைக் கண்டு, தன் சினத் தீயையும் ஒழித்து, பெரிய வெற்றிப் பேரிகை முழக்கு வதுபோல, பெரிய மறை முழக்கம் விளங்குமாறு செய்து;*

(வி - ரை.) *இற்று - கெட்டு. மற்று : வினைமாற்று 'மற் றைய தென்பது சுட்டி யதற்கினம்' என்பது காண்க. கரப்ப - ஒளிக்க ஆ-ஆறு; வழி; வசை; தன்மை: கடைக்குறை. மறைப் பேரொலி - மறை ஓதுதலால் உண்டாகும் பெருமுழக்கம். (௯)*

தனது கீர்த்தியுந் திறற்பிர
தாபமுந் தரைமேல்
அனல்செய் கோபமும் முல்லையும்
எனவெங்கும் அமைத்துப்
புனித மாமவை தன்னையும்
பொதிந்துகொண் டென்னப்
பனிவி சும்பினிற் சிவந்துவெண்

**(பொ - ரை.)** *தனது புகழையும் வெற்றியால் வந்த நற் பெயரையும் நிலவுலகத்தில் நெருப்புப் போலச் செந்நிறம் பொருந்திய இந்திரகோபப் பூச்சியும் முல்லை மலருமெனப் பார்த்தோர் சொல்ல, எங்கும் அவற்றை உண்டாகச்செய்து, தூய்மையாகிய அப் புகழ், நற்பெய ரென்னும் இரண்டும் பொதிந்து கொண்டாலொத்த குளிர்ந்த வானத்தில் செந் நிறம் பொருந்தி வெள்ளிய நிறத்தை அடையலாயிற்று. அன்று, ஏ ; அசைநிலைகள் :*

(வி - ரை.) *கீர்த்தி - மிகுபுகழ்: புகழ் வெண்ணிறமெனக் கொள்வது, கவிகள் மரபு. புகழாவது கொடை கல்வி முதலிய வற்றால் தோன்றும் நற்பெயர். பிரதாபம் - நற்பெயர்; பிறவி வென்று வெற்றிகொள்ளல் முதலியவற்றால் வரும் நற்பெயர். ..., செல்வத்தோடு ஒத்ததாதலால் அதனைச் செந்நிறமாகக் ...வது மரபு மேகங்கள் மழைபெய்து, வானத்திற் படர்ந்து*

செல்வது, செம்மேகமும், வெண்மேகமுமாகக் காட்சியளிப்பதாகலான், அதனைச் 'சிவந்து வெண்ணிறம் படைத்தது' என்றார். கோபம் - இந்திர கோபப் பூச்சி. '[1]கோபத்தன்ன தோயாப் பூந்துகில்' என்றார், நக்கீரனாரும். இப்படலம் இரண்டாவது செய்யுள்முதல் இதுவரை தொடர்ந்து முடிவதால், குளகமாகும். 'குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்' என்னும் விதிப்படி பலபாட்டுகள் தொடர்ந்து இச்செய்யுளோடு வினைகொண்டு முடிந்தமையறிக. (௧0)

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

உடுவணி குடுமிக் கோடு
பிளவுபட் டுடையப் பெய்யுங்
கொடுமழைக் காற்று தங்கட்
குளிர்பெயல் மாற எண்ணி
நெடுமலை எடுத்துக் காட்டும்
நெட்டிதழ்க் காந்தட் கொள்ளி
விடுசுடர்க் கனலி அந்தப்
புனலொடும் வீந்த தன்றே.

**(பொ - ரை.)** நெடிய அந்த நந்திமலையானது விண்மீன் மண்டிலத்தை அளாவிய தனது முடிகள் பிளவுபட்டுச் சிதைவுற, விடாமல் பெய்கின்ற பெரிய மழையினது துளிக்கு ஆற்றாது அவ்விடத்தை நடுக்கஞ் செய்கின்ற மழைத்துளி மாறுதற்கு எண்ணி, (மேலே) எடுத்துக் காட்டாநின்ற நீண்ட இதழ்களையுடைய செங்காந்தளாகிய கொள்ளிக் கட்டையில் ஒளிவிட்டெறிக்கும் நெருப்பானது அந்த மழைத் துளியோடும் அழிந்தது. அன்று, ஏ: அசைச் சொற்கள்.

**(வி - ரை.)** உலகில் மழைமிகுதியாகப் பெய்யுங்காலத்து, அதை நிற்கவேண்டுவோர், கொள்ளிக்கட்டையை வானத்துக்கு நேரே காட்டினால் நிற்குமென நம்பிக் கொள்ளிக்கட்டையையெடுத்துக்காட்டுவது வழக்கமாகும். அம் முறையை உட்கொண்டு, நந்திமலையில் மிகுதியான மழை பெய்ததைக் கருதி, அதை நிறுத்த நந்திமலை எண்ணிச் செங்காந்தட் பூக்களாகிய

1. திருமுருகாற்றுப்படை : ௧௫.

கொள்ளிக்கட்டையைக் காட்டியதாகத் தற்குறிப்பேற்ற அணி யாக்கிக் கூறினார். மழைக்காலத்தில் செங்காந்தளும் வெண் காந்தளும் ஏனைய மலர்களும் பூத்துக் குலுங்கி நிற்பது இயற்கை யாதலால் செங்காந்தள், செந்நிறமாக நெருப்புப்போல் இருப்ப தால் அதனைக் கொள்ளிக்கட்டையாக உருவகித்தார். மழைப் பெயல் நீங்கிய பின் காந்தள் மலர்களும் உதிர்வது இயற்கை. எனவே, 'காந்தட்கொள்ளி .....புனலொடும் வீந்தது' என்றார். ஒடு உருபு, உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. (கக)

போதமே லாகப் பண்டே
புல்லிய மலநோய் தீர்ந்தும்
வாதனை தாக்கு மாபோல்
மழைப்பெயல் மாறித் தீர்ந்தும்
காதல்செய் துறையும் புள்ளும்
மாக்களுங் கவன்று நெஞ்சம்
நோதக மரங்கள் எல்லாம்
நுண்துளி துவற்றும் மாதோ.

(பொ - ரை.) சிவஞானம் மேலோங்கியும் பண்டு தொட்டே விடாது சூழ்ந்த ஆணவ மலநோய் நீங்கியும் முன்னை (பிராரத்த) வினையானது நீங்காது நிற்கும் தன்மை போல, விடாதமழை விட்டு நீங்கியும், தன்னிடத்து விரும்பி வாழ்கின்ற பறவைகளும் விலங்குகளும் கவலையுற்று மனம் வருந்த எல்லா மரங்களும் சிறிய மழைத்துளிகளைச் சிதறுநிற்கும். மாது, ஓ : அசைநிலைகள்.

(வி - ரை.) புல்லிய - தொடர்ந்த. மலமானது செம்பிற் களிம்புபோல - உயிரை இடைவிடாதுபற்றி நிற்பது. அதுவும் நீங்கியதென்பார். "மலநோய் தீர்ந்தும்' என்றார். சிவஞானம்- எல்லாஞ் சிவனென உணர்ந்து நிற்கும் உயரிய சீவ முத்தநிலை. இதனைச் [1]"சிவனடியே சிந்திக்கும் திருப் பெருகு சிவஞானம், என வரும் சேக்கிழார் திருமொழியால் அறிக. அத்தகைய எல்லாஞ் சிவனெனக் கருதும் யானெனதென்னும் அகப்பற்றும் புறப்பற்றும் நீங்கப் பெற்றோர்க்கும் பழவினை விடாது என்பது, சைவசித்தாந்தத்தின் உண்மையாகும். இதனை,

1. பெரியபுரா, திருஞானசம் : எ0.

1. ......நாம்செயும் வினைகள் எல்லாம்
மேலைத்தான் பலமாச் செய்யும் இதமகி தங்கட் கெல்லாம்
மூலத்த தாகி என்றும் வந்திடும் முறைமையோடே'

என்னும் சிவஞான சித்தியார்த் திருவிருத்தத்தான் அறிக.

எனவே, மழைபெய்து விட்டபின்னரும் மரத்தின் இலைகளில் தங்கியிருக்கும் மழைநீர்த்துளிகள், சிதறி விழுதலைப் பிராரத்த வினைக்கு ஒப்புரைத்தார்.

போதம் - ஞானம். எல்லாவற்றினும் உயர்ந்த ஞானமாகிய சிவஞானத்தைச் சிறப்புப் பற்றிக் குறித்தது. வாதனை-துன்பம். மழைப்பெயல் - மழை பெய்தல். மா - விலங்கு. துவற்றும் - சிந்தும்; சிதறும். (கஉ)

கனைபெயல் எழிலிக் கூட்டங்
கலிவிசும் பகடு போழ்ந்த
நனைமுடி நந்திக் குன்றம்
நளிபடப் பொழியுந் தெண்ணீர்
புனைமறை வசிட்ட மேலோன்
செருத்தலான் பொழிந்த தீம்பால்
வனைபுகழ் வெள்ளம் என்னத்
திசைதொறும் வழிந்த மன்னே.

**(பொ - ரை.)** ஒலியையுடைய மழைத்துளியை யுடைய மேகக் கூட்டங்கள், பெரிய வானத்தினது வயிற்றைப் பிளந்துபோன மலரரும்புகள் பொருந்திய உச்சியை யுடைய நந்திமலையானது குளிர்ச்சி பெற அதிற்பெய்கின்ற தெளிந்த நீராகிய வெள்ளமானது, சிறந்த கருத்துக்கள் கொண்டு தொடுக்கப்பெற்ற மறைப்பொருளுணர்ந்த வசிட்ட முனிவரது மடியையுடைய காமதேனுவென்னும் பசுவால் சொரியப்பட்ட இனிய பாலாகிய புகழ் கொண்ட வெள்ளத்தைப்போலத் திசைகள்தோறும் பரவலாயின. மன், ஓ: அசை நிலைகள்.

1. சிவஞானசித்தியார், இரண்டாம் சூத்: கஉ.

(வி – ரை.) கலை - ஒலி. எழிலி - மேகம். அகடு-வயிறு. நளி - குளிர்மை. மேகம் காமதேனுவாகவும், அது பொழிந்த நீர் பாலாகவும், அது பெருக்கெடுத்ததுபோல் இம்மழை நீரும் வெள்ளமாகப் பெருக்கெடுத்தலாகவும் உவமை குறித்தோதினர்.(கரு)

பாலியாற்றுவளம்

**கண்ணகன் குடுமிக்**
**கல்லெனக் கறங்கி ஆர்த்து**
**விண்ணிவர் ஏணி யென்ன**
**வியன்முடி தொடுத்து வீழுந்**
**தண்ணரு அருவி யெல்லாம்**
**தலைத்தலை விரிந்து தோன்றும்**
**புண்ணியப் பாலி யாற்றிற்**
**சேர்ந்துடன் போய மாதோ.**

**(பொ - ரை.)** இடம் விரிந்த உச்சியையுடைய அந்நந்திமலையில் கல்லென்று ஒலித்து வானுலகிற்குச் செல்லச் சாத்திய ஏணிகள்போலப் பரந்த கொடுமுடியினின்றும் தொடுத்து வீழ்கின்ற குளிர்ச்சியையுடைய அருவிகள் எல்லாம், இடங்கள்தோறும் விரிந்து பரந்து, புண்ணியம் தோன்றுதற்கோர் இடமாகிய அந்தப் பாலிநதியிற் கலந்து அதனுடன் செல்லலாயின. மாது, ஓ : அசைச்சொற்கள்.

(வி – ரை.) அகன் - அகன்ற; விரிந்த: இறுதி லகரம் னகரமாகத் திரிந்தது. மேல, மேன என்பதுபோல. மலைமுகட்டிலிருந்து கீழிறங்கி வரும் அருவியானது விண்ணவர், வானுலகத்திற்குச் செல்வதற்கு வைத்த ஏணி போன்றதாகக் குறித்தார். தண் - குளிர்ச்சி. தன்னையடைந்த எவ்வகை உயிர்கட்கும் தன் நீரால் வெப்பமகற்றி நீர் வேட்கையையும் தீர்ப்பதாதலால் 'புண்ணியப் பாலியாறு' என்றார். (கசா)

**பாரிடங் குழித்து வீழும்**
**பல்வயின் அருவி எல்லாம்**
**ஓரிரும் பாலி யாற்றின்**
**ஒருங்குசென் றணையும் தோற்றம்**

**சீரிய புவனந் தோறும்**
**சிதறிய வினைகள் எல்லாம்**
**ஓரிடத் தொருவன் தன்பா**
**லுடங்குசென் றுறுதல் போலும்.**

**(பொ - ரை.)** *நிலவுலகின் இடத்தைக் குழியாக்கி அம்மலையினது பல இடங்களினின்றும் கீழிறங்கி வருகின்ற அருவிகளெல்லாம், ஒப்பற்ற பெரிய பாலியாற்றில் ஒரு சேரச் சென்று ஒன்றாகக் கலக்கும் தோற்றமானது சிறந்த உலகங்கள்தோறும் முற்பிறப்பிற் செய்த இருவினைப் பயன்கள் யாவும் மறுபிறப்பாக வேறோர் இடத்தில் பிறந்த ஒருவனிடத்தே ஒருசேரச் சென்று சேருவதை ஒக்கும்.*

*(வி - ரை ) உயிர்கள் தாம் செய்த வினைக்கீடாகத் தோன்றிய உலகில் தனுகரணபுவன போகங்களுள். தனுகரணங்களைக் கொண்டு உலகங்களிற் சென்று கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிவதாக நின்ற நுகர்ச்சி (போகங்)களை நுகர்ந்தே இருவினைப் பயனாகிய கன்ம மலத்தைப் போக்கவேண்டுவதாதலால் 'சிதறிய வினைகளெல்லாம் .....சென்றுறுதல் போலும்' என்றார். இது, எடுத்துக்காட்டுவமையணி. பிறப்பிறப்பை நீக்கி வீடுபேறடைவதே மக்கட் பிறப்பின் விழுமிய நோக்கமென்றுணர்ந்த ஆசிரியர் வாய்ப்புமிடங்களில் எல்லாம், பிறப்பின் தன்மை, வினைக்கீடாக உயிர்கள் பெறும் மாற்றம் முதலியவற்றையே உவமமாக எடுத்துரைப்பாரானார்.* (கசு)

**விலகிவீ ழருவித் தாரை வேறுவே றாக ஓடிக்**
**குலநதிப் பாலி வைப்பின் ஏகமாய்க் கூடும் தோற்றம்**
**அலகில்பல் வழியு மூதூர் அணிமையின் ஒன்று மாறும்**
**பலபல மதமும் ஈற்றின் ஒருவழிப் படலும் போலும்.**

**(பொ - ரை.)** *விட்டுவிட்டு வீழாநின்ற அருவியின் தாரை ஒழுங்குகள் வெவ்வேறாக ஓடிப்போய், மேன்மை பொருந்திய பாலியாற்றில் ஒன்றாகக் கலக்குந் தன்மை, ஓர் ஊருக்குச் செல்கின்ற அளவிறந்த பல வழிகளும் தொன்றுதொட்டுள்ள பழைய ஊர்களின் அண்மையில் ஒன்றாகும் தன்மையையும் பல்வேறுவகைப்பட்ட சமய நெறிகளும்*

இடையில் வெவ்வேறு வகைப்பட்டதாகத் தோன்றினும், முடிவில் ஒருவழிப்பட்டு நிற்பதையும் ஒத்திருப்பதாகும்.

(வி - ரை.) விலகி - விட்டு; கடந்து. அருவிகள் பல்லிடத்திருந்து பல வழிகளில் சென்றாலும் இறுதியில் ஆற்றில் வந்து சேர்வதாகும். இதனை ஓர் ஊருக்குச் செல்லும் பல வழிகள் பற்பல இடங்களிலிருந்து வருவதானாலும் அவ்வூருக்குச் சென்றபின் வழியின்றி ஊரில் சேர்வதுபோலவும், மதங்கள், பல்வேறு வகைப்பட்ட கருத்து வேறுபாடுகள் உள்ளனவானாலும் அவைகளின் குறிக்கோளும் முடிவும் [1]'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்றதற்கேற்பவும் [2]'யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே மாதொரு பாகனார்தாம்வருவர்' என்பதற்கேற்பவும் இறுதியில் கடவுள் நிலை ஒன்றாகக் காட்டுந் தன்மையைப் போலாகவும் பாலியாற்றில் ஒன்றுகலந்த அருவிநீரின் சிறப்பைக் குறித்தார்.

கம்பர் நீர் வெள்ளப் பெருக்கிற்குப் [3]'பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்ததன்றே' எனக் கட்டுரைக்கும் கருத்துரையோடு இஃதொத்தலவாதல் காண்க. (கரு)

மலைநகைத் தனைய காட்சி
வயின்வயின் அருவித் தாரை
சிலையினின் றிழிந்து மண்மேல்
திரண்டுசென் றணையுந் தோற்றம்
உலவையோ டிகலிச் சேடன்
உயர்வரைக் குடுமி யெல்லாம்
பலதலை விரித்துப் பொத்திக்
கிடந்தவப் பான்மை போலும்.

(பொ - ரை.) அந் நந்திவரை சிரித்ததை யொத்த தோற்றத்தையுடைய பல இடங்களினின்றும வருகின்ற அருவி நீரொழுக்கானது, அம் மலையினின்று கீழிறங்கி நிலத்தின்மேல் திரண்டுருண்டு வருகின்ற தோற்றமானது, ஒருகாலத்தில் ஆதிசேடனென்னும் பெரும்பாம்பு காற்றுக் கடவுளோடு பகைகொண்டு உயர்ந்த இமயமலையின் முடி

1. திருமந்திரம்: உகOசு. 2. சித்தியார், இரண்டாஞ் சூத்: உ௫.
3. கம்பரா, பால, ஆற்றுப்படலம்: கக.

களிலெல்லாம் தன் பல தலைகளையும் விரித்து மறைத்துக் கிடந்த தன்மையை யொத்துத் தோன்றும்.

**(வி - ரை.)** மலையினின்றும் பல முகங்கொண்டு ஓடிவருகின்ற அருவித்திரள்களை அதன் வெண்ணிறத்தைக் கொண்டு 'மலைநகைத்ததனைய' என்றார்; [1]'செய்யா மரபில் தொழிற்படுத் தடக்கியும்' என்னும் விதியாற் கொள்க.

**ஆதிசேடனுக்கும் காற்றுக் கடவுட்கும் உண்டாகிய பகை வரலாறு** :—ஒரு காலத்தில் பிரமன் முதலிய தேவர்கள், சிவபெருமானை வணங்குதற்குத் திருக்கைலை சென்றனர்; இறைவன் திருமுன் செல்ல எண்ணி ஓரிடத்தில் குழுமியிருந்தனர்; அப்போது ஆதிசேடனும் ஆங்கு வந்திருந்தனன்; அப்போது தேவர்கள் யாவரும் ஆதிசேடனை நோக்கி, 'நீ, உலகைத்தாங்குகின்றாய்; காற்றை உண்கின்றாய்; அதனால் உலகிற்கு நலஞ்செய்கின்றாய்; உனக்கு ஒப்பார், உலகில் யார் உள்ளனர்?' என்று புகழ்ந்தனர். இதைப் பொறாத காற்றுக் கடவுள், 'என் வலிமையைக் காண்மின்' என்று கூறித் தன் பெருவலி கொண்டு பெருங்காற்றாகச் சுழற்றி வீசினானாக, உடனே ஆதிசேடன் தன் படத்தை விரித்துத் திருக்கைலையை மூடினானாக, காற்றுத்தேவன் எவ்வளவு பெருவலிகொண்டு வீசியடித்தும் ஆதிசேடன் படத்தைச் சிறிதும் அசைக்க இயலாதாயிற்று. பெருங்காற்றால் உலகம் தத்தளித்தது. உடனே தேவர்கள், 'உலகம் நிலைகலங்குதலால், உன் படத்தை ஒடுக்குக' என வேண்ட, அப்பால் ஆதிசேடன் தன் படத்தை ஒடுக்கினனென்பது **செவ்வந்தி புராண வரலாறு.**

இவ் வரலாற்றை அமைத்து, உலவையோடிகலி... .......... பாலமை போலும்' என்றார். **(கள)**

குரைபுனல் தொண்டை நாட்டைக்
குறும்பெறிந் தடிப்ப டுத்துப்
புரைதப நடாத்து கென்னுப்
புதுமுகில் அரசன் நந்தி
வரைமிசை யிருந்து வேந்தா
மணிமுடி சூட்டி உய்ப்பத்
திரைபடு பாலி வல்லே
சிலையினின் நிமிக்கு போந்து,

1. தொல். பொருளியல் : உ.

(பொ-ரை.) புதிய மேகமாகிய மன்னவன், நந்தி மலையின் மேலிருந்து, குறுநில மன்னர்களையெல்லாம் வென்று ஒலிக்கின்ற நீர் முற்றுகை கொண்ட தொண்டை நாட்டை, உனது அடியின் கீழ்ப்படுத்தி, குற்றம் நீங்கச் செங்கோல்முறை செய்வாயாக வென்று, எல்லா ஆறுகட்கும் அரசாக மணிமுடி சூட்டிச் செலுத்த, அலைகளையுடைய பாலியாறானது, விரைந்து அந் நந்திமலையினின்று ...ச் சென்று;

(வி-ரை.) இது முதல் இனிவரும் 'பௌவம துணர்ந்து' என்பதுவரை ஒரு தொடர், இவை குளகமாக அமைந்துள்ளன. குறும்பு என்றது, கோடை காலத்தை. ஆறு குளிர்மையால் அரசனாகவும் குளிர்மைக்கு மாறான கோடையைக் குறும்பராகவும் உருவகஞ் செய்து கூறினார். இக்கருத்தோடொப்ப, [1]'அறுகாற் குறும்பெறிந்[து] அரும்பு பொதி வாசம், சிறுகாற் செல்வன் மறுகில் தூற்ற' என வரும் இளங்கோ வேந்தர் அருள்மொழியானும் அறிக.

அடிப்படுத்தல்-தன் வயமாக்குதல். அஃதாவது நீர்ப்பெருக்கால் நாட்டில், பிணியின்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம் ஆகியவற்றால் உயர்வுகொள்ளச் செய்தல். இதனை வள்ளுவர் நாட்டுக்கு இலக்கணம் கூறுமுகத்தால்,

[2]'உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்
சேரா தியல்வது நாடு'

எனக் கூறும் அருமைத் திருக்குறட்பாவாலும் அறிக. (கஅ)

அரசுகள் சூழ்ந்து செல்ல
அருங்கணி மலர்வாய் விள்ளச்
சரிகுழற் குறமின் னூர்கள்
பற்பல தானை வெள்ளம்
விரவிடப் பரிய காலாள்
மேதகு மாக்கள் அத்தி
இருபுடை தழுவிப் போத
இகல்கொடு வைய மூர்ந்து.

1. சிலப். ௪: கஎ-அ. 2. திருக்குறள்: எ௩௪.

**(பொ - ரை.)** அரசர்கள் பக்கத்தில் சூழ்ந்து வரவும், அரிய ஒளி நூல் வல்ல புலவர்கள் மலர்போன்ற தம் வாய் திறந்து நல்முழுத்த நாளைக் கூறவும், சரிந்த கூந்தலையுடைய குறத்திகள் ஆகிய பலவகைப்பட்ட படைத்திரள்கள் ஒன்றுபட்டு முன் செல்லவும், பருத்த காலாட்படையும் மேன்மைமிக்க குதிரைகளும் யானைகளும் இரண்டு பக்கங் களிலும் சேர்ந்து வரவும், பகைமேல் மாறுபாடுகொண்டு தேரினைச் செலுத்தி (அரச மரங்கள் வேர் பறிந்து புடை சூழ்ந்து வரவும், அரிய வேங்கைமரங்கள் பூக்கள் பூத்து நிற்கவும், சரிந்த கூந்தலாராகிய குறப்பெண்களின் பலவகை யான ஆடைகளின் கூட்டம் மேல் மிதந்து வரவும் பருத்த தூறுகளையுடைய ஆண் மரங்களும் மேன்மையுள்ள மாமரங் களும் அத்திமரங்களும் இரண்டு பக்கங்களிலும் தழுவி வரவும் வலிமை கொண்டு நிலவுலகின்மேற் சென்று.);

**(வி - ரை.)** அரசனது தன்மைக்கும், வெள்ளப் பெருக்கின் தன்மைக்கும் ஒத்த தன்மையை விளக்கிச் **செம்மொழிச்சிலேடை யணியாக** வந்தது, இச் செய்யுள்.

செல்ல விள்ள விரவிட போதவென வேறுபல வகைஅடுக்கி வந்த செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள், ஊர்ந்து என்னும் பிறவினை முதல் வினையைத் தனித்தனி கொண்டன. அரசனுக்கும், வெள்ளத்துக்கும் இயைபு நோக்கிப் பொருத்திக் காண்க. கணி-வேங்கை மரம், கணிதநூற் புலவன்; சோதிடன். மலர்வாய்; உவமைத் தொகை, மலர் போன்ற வாய்; மலரிடம். தானை-படை; ஆடை. மா-குதிரை; மாமரம். அத்தி-யானை; அத்தி மரம். இகல் - பகை; வலிமை வையம்-தேர், பல்லக்கு; உலகம். ஊர்ந்து-நடத்தி; சென்று. (கூ)

அணிவகுத் தெழுந்து குன்றர்
அரும்பெறற் குறிச்சி புக்கு
மணிவகை ஆரம் பூண்டு
மதுக்குட விருந்து மாந்தித்
தணிவற வெளிக்கொண் டேகித்
தலைத்தலை வேட்டம் போகித்
துணிபட மாக்க ளெல்லாந்
தொலைத்துட னீர்த்துச் சென்று.

(பொ - ரை.) (மேற்கூறப்பட்ட படைகளை) அணிகளாக வகுத்து மேலே யெழுந்து, குறவர்களுடைய அடைவதற்கருமையான, சிற்றூர்களிற் புகுந்து, பலவகைப்பட்ட மணிக்கற்கள் அழுத்திய மாலைகளை யணிந்து, விருந்தாக அங்குள்ள குடத்தின் கள்ளை உட்கொண்டு, ஒழிவில்லாது வெளியிட மெங்கும் சென்று, அவ்வவ் இடங்களிலெல்லாம் வேட்டையாடி, விலங்குகளெல்லாம் துண்டுபட அவற்றைக் கொன்று தன்னுடன் இழுத்துக் கொண்டு சென்று;

(வி - ரை.) அரசனுயின் செல்லுங்கால் நால்வகைப் படைகளும் சூழ்வரச் செல்வது மரபாதலால் 'அணிவகுத் தெழுந்து' என்றார்.

இதனால் பாலியென்னும் அரசன், தன் நாட்டில் வாழும் குடிமக்கட்குத் தன்னைப் பற்றி வருவனவும், பிறவுயிர்களைப் பற்றி வருவனவும், பகைவரைப் பற்றி வருவனவும், கள்வரைப் பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவுமாகிய ஐவகைப் பட்ட அச்சங்களையும் தீர்ப்பது கடனுதால், இவைகளையெல்லாம் உள்ளடக்கித் 'தலைத்தலை வேட்டம் போகி' என்றார்.

இத் தன்மையைச் சேக்கிழார் பெருமான் மனுமுறைகண்ட புராணத்தில்,

[1]'மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்க்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ?'

எனக் கூறுவதாலும் அறியலாம் (உ0)

கலிவிருத்தம்

மண்டமர் மேல்கொடு வந்தனம் இன்னே
தண்டக நாட்டுறை தாபதர் நோயோர்
பெண்டிரு நும்மரண் ஏகுதிர் பெட்டென்
றெண்டிசை யார்ப்ப இசைப்பறை சாற்றி.

1. பெரிய புரா, மனுநீதி : ௩௬.

**(பொ - ரை.)** நெருங்கிய போர்த்தொழிலை மேற்கொண்டு வந்தோம்; தண்டகநாட்டில் வாழ்கின்ற தவமுனிவரும், நோயாளிகளும், பெண்மக்களும், இப்பொழுதே உமக்குப் பாதுகாப்பாகவுள்ள இடத்துக்கு விரும்பிச் செல்லுமின் என்று, எட்டுத்திக்கிலும் முழக்கங்கொள்ளத் தம் பேரொலியாகிய பறையினால் தெரியப்படுத்தி;

**(வி - ரை.)** மண்டு - நெருங்கிய; மிகுதியான என்னும் பொருட்டு. போர் தொடங்கிய இரு பெருவேந்தர்கள், தத்தம் நாட்டிலுள்ள நல்லோர் பலரையும் அப்புறப்படுத்தியே தொடங்க வேண்டுமென்பது போரறம்; அம்முறைகொண்டு கோடைமேல் பொரவெழுந்த அருவிநீர்ப் பெருக்காகிய வேந்தன், தன் முழக்கமென்னும் பறையால் அறிவித்ததாகக் குறித்தார். தாபதர் முதலியோர் பாதுகாப்பான இடத்தைச் சேருமாறு கூறுதலை,

> [1]' ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
> பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
> தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்
> பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
> எம்அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மினென
> அறத்தாறு நுவலும் பூட்கை மறம்'

எனப் பிறசான்றோர் கூற்றானும் அறியப் பெறும் அன்றியும் கொங்கையால் கூடலில் எரிகொளுவிய காலை, கண்ணகியார் கூற்றாகத் 'தீத்திறத்தார் பக்கமே சேர்க' என்று கூறியதாக இளங்கோவடிகள்,

> [2]' பார்ப்பார் அறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர்
> மூத்தோர் குழவி எனுமிவரைக் கைவிட்டுத்
> தீத்திறத்தார் பக்கமே சேர்க என்று......
> பொற்றொடி ஏவப் புகையழல் மண்டிற்றே

என்றருளியவற்றினும் இப் பேரறம் கடைப்பிடித்தமையறிக. உக

> **இருற்றிகி ரிப்படை தாங்கி இபக்கோ**
> **டருத்திறல் வெஞ்சிலை காந்தள் அரும்பு**
> **நருப்பயில் கோலென ஏந்தி நல்வீரம்**
> **அருப்பகை மாய்த்துற வெட்சி மலைந்து.**

---

1. புறம்: க  2. சிலப். உக: ருக - எ.

(பொ - ரை.) தேன் அடைகளைச் சக்கரப் படைகளாகக் கொண்டு, யானைக் கொம்புகளை வெற்றி தவறாத கொடிய வில்லாகவும், தேன் நிறைந்த காந்தளின் அரும்புகளை அம்பாகவும் ஏந்தி, பிறரால் தடுத்தற் கேலாத நல்ல வீரம் பொருந்திய பகைவர்களைக் கொல்ல வெட்சி மாலையைச் சூடி;

(வி - ரை.) குறிஞ்சி நிலக் கருப்பொருள்கள் தேன் இறால் யானைக் கொம்பு காந்தள் முதலியன. இவற்றின் வடிவத்தால் ஒத்தனவாகிய இறாலையும், கொம்பையும், சக்கரப்படையாக உருவகஞ் செய்து கூறினார். போர் செய்யச் செல்வோர் முதலில் ஆனிரைகளைக் கவர்தல் மரபு. அம் முறையில் குறிஞ்சித் திணைக்குப் புறனாகிய வெட்சிமாலையைச் சூடி, இரவில் செல்வது வழக்கு. ஆதலால் 'வெட்சி மலைந்து' என்றார். இதனை,

[1]'வெட்சி தானே குறிஞ்சியது புறனே
உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே'

எனவரும் புறத்திணையியல் நூற்பாவால் அறிக. காந்தளரும்பு மலையில் தோன்றுவது; அது, அரும்பாகலான் வடிவு நோக்கி 'காந்தளரும்பு' நறுப்பயில் கோலென' என்றார். கோல்-அம்பு. (உஉ)

முல்லையின் வேந்து முடித்தக ரந்தை
ஒல்லை யழித்துய ரானிரை பற்றி
மெல்லிதழ் தின்று சிவந்தெழு வேய்த்தோள்
நல்லவர் கற்பை யழித்து நடந்து.

(பொ - ரை.) முல்லை நிலத்து வேந்தன் தான் முடித்த கரந்தை மாலையை விரைவில் அழித்து, சிறந்த பசுக் கூட்டங்களைக் கவர்ந்து, மெல்லிய இதழ்களை அதுக்கிச் சினந்து, ஓங்கி வளர்ந்த மூங்கிலை யொத்த தோள்களையுடைய முல்லைநிலப் பெண்டிர்கள் வளர்த்த கற்பினையழித்து அப்பாற் போய்;

(வி - ரை.) முல்லையின் வேந்து, முல்லை நிலத்துக்குரிய அரசனென்றும், முல்லை நிலமாகிய அரசன் என்றும், இரு பொருள் கொள்க. கற்பு, பெண்கள் பாதுகாத்த கற்பெனவும்

1. தொல், புறத்திணைஇயல் : ௧.

'இல்லிருத்தல் முல்லை' என்பவாகலான், முல்லைக்கொடிக்கும் கொள்க, கற்புக்கு அடையாளமாக மகளிரால் வளர்க்கப் பெறு வனவாகலான். குறிஞ்சி நிலத்தில் தோன்றிய அருவி முல்லை நிலத்துப் போந்து அங்குள்ள கருப்பொருள்களை இழுத்துக் கொண்டு செல்லுதலை நிரைகவர்ந்து வென்று செல்வதாகக் கூறினர். இவைகளின் நுணுக்கம், விரிப்பின் பரந்து செல்லும். வல்லார் வாய்க்கேட்டுத் தெளிக மேல்வரும் செய்யுட்களும் அன்ன. (உ௩)

**வஞ்சிம லைந்தழல் பாலையை வாட்டி**
**அஞ்சியி டாதுதன் ஆணையி ருத்தி**
**எஞ்சலு றுமரு தத்திறை யோடும்**
**வெஞ்சமர் ஏற்றுழி ஞைத்துணர் வேய்ந்து.**

**(பொ-ரை.)** வஞ்சிமாலை சூடி, கொதிக்கின்ற பாலை நிலமென்னும் பகைவனை வருத்தி, தான் சிறிதும் அச்சங் கொள்ளாது தான் அங்குத் தன் ஆணையை நிலைபெறச் செய்து, உழிஞைத்தப் பூங்கொத்தால் தொடுத்த மாலையை யணிந்து, வளங்குறைவில்லாத மருத நிலமாகிய பகையரச னுடன் கொடிய போர்த்தொழில் மேற்கொண்டு;

**(வி-ரை.)** [1]'உழிஞைதானே மருதத்துப் புறனே'

என்பது தொல்காப்பியம். இருபெரு வேந்தர் ஒருவரை ஒருவர் வெற்றி கொள்ளச் செல்லுங்கால் முல்லைக்குப் புறனாகிய வஞ்சி சூடிச் செல்லுதலும், மருதப் புறனாகிய உழிஞைத்த மலரைச் சூடிச் செல்லுதலும், புலமைச் சான்றோர் புலனெறி வழக்காதலால், 'வஞ்சி மலைந்து உழிஞைத் துணர் வேய்ந்து' என்றார். (உ௪)

**தடுத்தெதிர் நின்றத டங்கரை யெல்லாம்**
**படுத்து மதன்பயில் பாசறை வீட்டி**
**மடுக்குளம் ஏரியின் வாட்டம னைத்துங்**
**ரம் என்று தழீஇக்கிளர் வுற்று.**

**(பொ-ரை.)** தடுத்து எதிரே நிற்பதான பெரிய கரைகளையெல்லாம் அழித்து, மன்மதன் வாழ்கின்ற படை வீடுகளாகிய சோலைகளைத் தொலைத்து, மடு குளம் ஏரியாகிய

1. தொல் புறத்திணை : ௬.

இவற்றின் குறைகளை யெல்லாம் கெடுத்துவிட்டோமென்று அவற்றோடு ஒன்றுபட்டு மேலெழுந்து;

(வி - ரை.) 'தடங்கரை யெல்லாம் படுத்து' என்றது, வெள்ளம் பெருக்கெடுத்துக் கரைமேல் ஏறிச் செல்லுதலை. மன்மதனுக்குரிய படைவீடு என்னும் பூஞ்சோலைகளை 'கானும் தடங் காவும் காமன் படைவீடு' என்னும் நளவெண்பாவானும் அறிக. மடுக்குளம் ஏரிவாட்டம் கெடுத்தலாவது, அவைகளை நீரால் நிரப்பிச் செல்லல். (உ௫)

வீறிய டாவகை வெஞ்சிறை கோலித்
தூறிடு மள்ளர் தொலைந்தழி வெய்தச்
சீறிய டர்ந்து தெழித்துமுள் வேலி
கீறிவ ளைந்துகி டங்கினை நீங்கி.

(பொ - ரை.) அவ் வெள்ளம் மேல் நோக்கி வளங்களைக் கெடுக்காதவாறு கொடிய வேலியாக அமைத்து, முள் கற்றைகளால் இடப்பட்ட மன்னர்கள் அதைவிட்டு ஓடி வருத்தமுற, சினந்து நெருங்கி அதட்டி, அந்த முள் வேலியைச் சிதைத்து முற்றுகையிட்டு அங்குள்ள அகழிப் பள்ளத்தைக் கடந்து;

(வி - ரை ) வீறுதல் - மேலெழுதல். அடா: ஈறுகெ எதிர்மறைப் பெயரெச்சம். வெம்சிறை - விரும்பும் வேலி என்றலுமாம். தெழித்தல் - அதட்டுதல். வளைந்து - சுற்றி; முற்றுகை செய்து. (உ௬)

நொச்சியை முற்றியந் நொச்சியின் உள்ளார்
பச்சிள நொச்சிப றித்தணி யாமே
நச்சிய தும்பை நறுந்துணர் சூடி
அச்செழு மாமதில் முற்றும கழ்ந்து.

(பொ - ரை.) மதிலை முற்றுகைகொண்டு அந்த மதிலின் உள்ளே இருப்போர் பசுமையுள்ள முற்றாத நொச்சியின் மலரைப் பறித்து மாலையாக அணியாமல் விரும்பிய தும்பையின் நன்மணங் கமழ்கின்ற பூங்கொத்துக்களை யணிந்து, அந்தப் பெரிய மதில் முழுதையும் வேருடன் ...

(வி - ரை.) நொச்சி-காவல்; காவல் செய்யும் மதிலுக்கு ஆகுபெயர். நொச்சி அதன் மலருக்கு ஆதலால் ஆகுபெயராகக் கொள்க. மதிலை முற்றுகை கொண்ட மன்னன், போர் செய்ய எண்ணிய எண்ணத்தைத் தவிர்த்தற் பொருட்டு மதிலகத் திருந்த மன்னன் நொச்சிமாலை சூடுதல் வழக்கு. அதனால் 'பச்சிள நொச்சி பறித்தணி யாமே' என்றார். (உஎ)

கொச்சகக்கலிப்பா

இடித்துவெளி செய்துநக ரெங்கணுநு ழைந்தாங்
கடுத்தமட வார்வயி றலைத்தனர் இரங்கக்
கொடுத்திடுவ ளங்கள்பல கொள்ளைகொடு மண்ணின்
எடுத்துவரு வெள்வரகு கொள்ளுடன் இறைத்து.

(பொ - ரை.) இடித்து வெளியாக்கி நகர்முழுதும் நுழைந்து பரவி, அந்நகரிலுள்ள பெண்கள் வயிற்றிலடித்துக் கொண்டு வருந்த, தாம் முன்பு கொடுத்த பல வளங்களையும் கொள்ளையடித்து, முல்லை நிலத்திலிருந்து தான் கவர்ந்து வந்த வெள்வரகைக் கொள்ளுடன் விதைத்து;

(வி - ரை.) இடித்து-மதிலை இடித்து என்னும் பொருளது. வெள்ளம் பெருகி ஊர் நகருள் நுழைந்தவுடன், அங்குள்ள பெண்கள், வயிற்றிலடித்துக் கொண்டு வருந்துவது, உலகியல் வழக்காதலின் 'மடவார் வயிறலைத்தனர் இரங்க' என்றார்.

[1] 'கெடுப்பதூஉம் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை'

என்பது பொதுமறை. ஆகலான், ஒருவரை உயர்த்துவதும் தாழ்த்துவதும் மழை என்பதை உணர்த்த 'கொடுத்திடு வளங்கள் பல' என்றார். (உஅ)

வெற்றிபுனை மாலிகைமி லைச்சியிரு பாலும்
சுற்றிவரு புட்குல நிரைத்தொழுதி தன்னுற்
கொற்றமிகும் ஆர்கலியை நோக்கியறை கூவி
யெற்றுகழி நெய்தல்வழி யெய்துறுத லோடும்.

1. குறள் : கரு.

**(பொ - ரை.)** வென்றபின் சூடுகின்ற வெற்றி மாலையை யணிந்து, இரண்டு பக்கங்களிலும், சுற்றிவருகின்ற பறவையினத்தின் வரிசையான ஒலியினால், வெற்றிமிக்க கடலைப் பார்த்துப் போருக்கு அறைகூவி யழைத்து, கரையொடு மோதுகின்ற கழி சூழ்ந்த நெய்தல்நிலத்தின் வழியே செல்ல;

**(வி - ரை)** தொழுதி-கூட்டம். கொற்றம்-வெற்றி, ஆர்கலி-கடல். அறைகூவல்-போருக்கு வலிய அழைத்தல். நெய்தல் - கடல்சார்ந்த நிலம். (உகூ)

**பௌவம துணர்ந்துபவ ளந்தரளம் ஆதி**
**வெளவுதிரை யேந்தியெதிர் கொண்டடிவ ணங்கச்**
**செவ்விதின் உவந்துபயம ஈந்துசின மாறிக்**
**கௌவியமெய் யன் பொடுக லந்துளதை அன்றே**

**(பொ - ரை.)** கடலென்னும் வேற்று வேந்தன், அவ்வெள்ளத்தினது வருகையை யறிந்து, பவளம் முத்து முதலிய பொருள்களைக் கரையைக் கவர்கின்ற அலைகளாகிய கைகளில் தாங்கி எதிர் சென்று தன்னடியைப் பணிய, நேராகப் பகையில்லாமல் மகிழ்ந்து சிறிது அச்சமூட்டி, சினந் தவிர்ந்து, விடாத உண்மையன்புடன் கலந்தது. ஐ, அன்று, ஏ ; அசைச் சொற்கள்.

**(வி - ரை.)** பயம் ஈந்து-தண்ணீர் தந்து என்னும் மற்றொரு நயமும் காண்க. பெருக்கெடுத்துச் செல்கின்ற வெள்ளநீர் இறுதியிற் கடலொடு கலத்தலை, 'மெய்யன்பொடு கலந்துளது,' என்றார். திருவிளையாடற் புராண ஆசிரியர், வெள்ளத்தைப் பருவம் வந்த மங்கையாக உருவகஞ் செய்து, அதற்கேற்றவாறு வருணித்துக் கூறிக் கடலொடு ஒன்றாகக் கலந்ததைத் 'தன் மகிழ் கிழவனகம் தழீஇக்கொடு கலந்தது' என்ற கருத்தும் இஃதோடொத்ததாதல் கண்டு மகிழ்க. (ங0)

*அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்*

**தன்னடிப் படுத்து வேலைத்**
**தண்டக நாடு முற்று**
**முன்னுறக் கவர்ந்து கொண்ட**
**வளத்தினு ழவி ரட்டி**

பின்னுற வளித்து வானிற்
புலவரும் பெட்கு மாற்றல்
அந்நிலை உயிர்கள் ஓம்பி
அரசுசெய் துறையும் பாலி.

(பொ - ரை.) பாலியென்னும் யாறானது, தண்டக நாடு யாவற்றையும் தன்னடிக்கீழ்ப்படுத்தி அதன்பின் முன் தான் கவர்ந்துகொண்ட வளத்தைக் காட்டினும் ஆறுபங்கு வளத்தைப் பின்பு மிகவுந்தந்து வானுலகத்துள்ள தேவர்களும் விரும்புகின்ற வகையினால் அந்த நிலையில் உயிர்களைப் பாதுகாத்து அரசியல் நடத்தி வீற்றிருப்பதாகும்.

(வி - ரை.) தொண்டை நாட்டுக்குத் தண்டக நாடென்னும் பெயருண்டு.

இதனை,

'அண்டரும் புகழ்துண் டீரன்
ஆண்டுதுண் டீர நாடாய்த்
தண்டகன் பின்னர் ஆண்டு
தண்டக நாடாய்ப் பின்னர்த்
தொண்டைமான் ஆண்டு தொண்டை
நாடெனத் துலங்கிற் றென்ப
பண்டயன் படைப்புத் தொட்டுப்
பயிலுமித் தொண்டை நாடு.'

என வரும் விநாயக புராணச் செய்யுளால் தண்டகனென்னும் அரசனால் ஆளப்பட்டமையின் தண்டக நாடாயிற் றென்க.

பாலியாற்றின் நீர்வளத்தால் செந்நெல் வேலியாயிரம் விளையுள் மல்கி நாடு செழிக்க அதனால் அறம் பெருகச் சிறந்திருத்தலான் அச் சிறப்பு பாலியாற்றால் வந்ததாகலான், அவ் யாறு ஆட்சி செலுத்துவதாகக் கொண்டு, 'அரசு செய்துறையும் பாலி' என்றார். (௩௧)

காரணப் பொருளின் தன்மை
காரியத் துளதாம் என்ன
ஆரணப் பனுவல் கூறும்
அரும்பொருள் தெளியத் தேற்றும்

பேரிசைப் புவிமேல் யார்க்கும்
பெட்டன பெட்ட வாறே
சீரிதிற் கொடுக்குந் தேனுத்
தரவருஞ் செழுநீர்ப் பாலி.

**(பொ - ரை.)** *காமதேனுவென்னும் தெய்வ உலகப் பசு, தர உண்டான செழித்த நீரினையுடைய பாலியாறு, பெரிய புகழுடைய நிலவுலகத்தில் யாவர்க்கும் விரும்பிய வற்றை விரும்பியவாறே சிறப்புறக்கொடுக்கும்; ஒரு காரணப் பொருளின் தன்மை, அதனால் உண்டான காரியத்திலும் உண்டாகுமென்று வேத நூல்கள் கூறுகின்ற அரிய பொருளை யாவரும் தெரிந்துகொள்ளத் தெளிவுபடுத்தும்.*

(வி - ரை.) *பாலியாறு காமதேனுவால் சொரியப்பட்ட பாலே யாறாகப் பெருகிப் பாலி என்று பெயராயிற் றென்பது, விநாயகபுராணம் கூறுகின்ற வரலாறாகும். அதனால், 'தேனுத் தர.........நீர்ப்பாலி' என்றார். காரணம், முதற் காரணம் துணைக் காரணம் என இருவகையது. முதற் காரணம், அதனால் ஆகும் காரியத்துடன் பிரிவின்றி இருப்பது; துணைக் காரணம், முதல் காரியப்படும் வரை உதவியாக நின்றியல்வது. பொன் தாலி என்பதில் பொன் முதற் காரணம்; அதன் காரியம் தாலி; துணைக் காரணம், அத் தாலி செய்வதற்குரியதான வெட்டல் தட்டல் உருவாக்குதல் முதலிய கருவிகள். அதுபோல, இங்கே காமதேனு சுரந்த பாலே நீராயிற்று; அதன் தன்மையால் எங்கும் வளஞ் சுரந்த தென்பதை, 'ஆரணப்.........தெளியத் தேற்றும்' என்றார்.* (௩௨)

வறுமையுற் றுழியுந் தொண்டை
வளமலி நாட்டோர் தங்கள்
இறுமுடல் வருத்தி யேனும்
ஈவதற் கொல்கார் அற்றே
தெறுகதிர் கனற்றும் வேனிற்
பருவத்துஞ் சீர்மை குன்று
துறுமணல் அகடு கீண்டும்
ஒண்புனல் உதவும் பாலி.

(பொ - ரை.) தமக்கு வறுமையுற்ற காலத்தும் வளமிக்க தொண்டை நாட்டில் வாழ்வோர் தம் அழிகின்ற உடலை ஒரு பொருளாகக் கருதாது வருத்தியாவது கொடுப்பதற்குச் சிறிதும் தளர்ச்சி கொள்ளார்; அதைப்போல, தன் கதிர்களினால் உயிர்களை வருத்துகின்ற ஞாயிறு வெதுப்பும் வேனிற் பருவக் காலத்திலும், பாலியாறானது தனது வளங்குறையாமல் பொருந்திய தன் மணலாகிய வயிற்றைக் கிழித்தும் தெளிந்த நீரைத் தரும்.

(வி - ரை.) தொண்டை நாட்டு மக்கள் வறுமையுற்ற காலத்தும் ஈகையிற் குன்றார்; இல்லை யென்றுரைப்பவர்க்கு இல்லை யென்றுரையா நல்லோராவர், என, நாட்டுக்கு ஏற்றங் கூறி, ஆறுகள் பெருக்கற்று அடிசுடுங் காலத்தும் ஊற்றுப் புனலால் உலகு புரந்தூட்டும் உயர் பேரொழுக்கமுடையது; அவ்வியாறுகளினும் சிறப்புடையது பாலியாறு என்பாராய் 'ஒண் புனல் உதவும் பாலி' என்றார்.

[1]'வெம்மை யால்விளை வஃகினும் வேந்தர்கோல் கோடிச்
செம்மை மாறினும் வறுமைநோய் சிதைப்பினும் சிவன்பால்
பொய்ம்மை மாறிய பத்தியும் பொலிவுங்குன் றுவாய்த்
தம்மை மாறியும் புரிவது தருமமந் நாடு.'

என்று பாண்டி நாட்டு நன்மக்களுக்குப் பரஞ்சோதி முனிவர் ஏற்றங் கூறினார். அக் கருத்தோடொப்ப இவரும் 'வறுமையுற் றழியும்...... ..வளமலி நாட்டோர்' என்றார்.

மணல் அகடு : இருபெயரொட்டு. அகடு - வயிறு; நடுவிடம் என்னும் பொருளது. உவர்ப்புநீர், கலங்கல் நீர், சவர்நீர் இவைகள் நீங்கி நறுநீர் தரும் என்பாராய் 'ஒண்புனல் உதவும் பாலி' என்றார், என்று கோடலுமாம். (௩௩)

சொற்றவித் தீர்த்த மேன்மை
சுவைபடும் பாலோ டொக்கும்
மற்றைய தீர்த்தம் எல்லாம்
வார்தரு புனலோ டொக்கும்

1. திருவிளை, திரு நாட்டு: ௧௬.

**பெற்றிமை உணர்ந்து தொல்லோர்**
**பெயரிடப் பட்ட சீர்த்தி**
**பற்றிய தெனலாம் பாலிப்**
**பெருமையார் பகரு நீரார்.**

(பொ - ரை.) சொல்லப்பட்ட இந்தத் தீர்த்தத்தின் மேன்மையானது, சுவைமிக்க பாலோடு ஒத்த தன்மையையும், இஃதொழிந்த ஏனைய தீர்த்தங்களெல்லாம் செல்கின்ற நீரோடு ஒத்த தன்மையையும், முன்னோர்கள் முன்பே அறிந்து 'பாலி' என்று பெயரிட்டமையால் வந்த புகழ் நீங்காததென்று சொல்லப்பெறுவதாகும்; ஆதலால் அந்தப் பாலியாற்றின் பெருமையை யெடுத்துச் சொல்லும் தன்மையோர் யாருளர்? ஒருவருமில்லை யன்றோ?

(வி - ரை.) பாலி—பாலின் தன்மையுடையது: காரணப் பெயர். (நடச)

காட்டுவளம்

கலிநிலைத்துறை

**விளம்பும் இத்தகை மணிகொழி**
**விரிதிரைத் தரங்க**
**வளம்பு னற்றடம் பாலியான்**
**வன்மைபெற் றோங்கி**
**உளம்ப யின்றுநாற் பொருள்களும்**
**உளுற்றுநகர்க் கிடமாய்த்**
**துளும்பு மேன்மையிற் பொலிந்தது**
**தொண்டைநன் னாடு.**

(பொ - ரை.) தொண்டை யென்னும் பெயருடைய நல்ல நாடானது, சொல்லப்பட்ட இந்த அழகு பொருந்திய முத்துக்களை ஒதுக்குகின்ற விரிந்த அலைகளின் வளத்தையுடைய நீர்மயமாகிய பெரிய பாலியென்னும் ஆற்றினால், பிறர்க்குக் கொடுக்கும் பெருமைபெற்றுச் சிறந்து மன ஆக்கம் கொண்டு அறம் பொருள் இன்பம் வீடென்னும்

நாற்பயனும் பொருள்களைத் தேடுவோர்க்கு இடனாகி மிக்க மேன்மையுடன் விளங்குவதாயிற்று.

(வி - ரை) தரங்கம் - அலை. தடம்-பெருமை. அறம், இல்லறம் துறவறமாகிய நிலைகள் பொருள்-கல்வி, செல்வப் பொருள்கள். இன்பம் இல்லறத்தால் வரும் இன்பமும், துறவற நெறியால் வரும் இன்பமுமாம்; வீடு சிந்தையும் மொழியும் செல்லா அந்தமில் இன்ப வீடுபேறு. இது, துறவற நெறியில் வழுவா தொழுகுவார்க்குக் கிட்டுவது. எல்லாப் பேறும் பெறுதற்கு இடமாக இருப்பது, தொண்டை நாடு என்றபடியாம். [1]'நற்றவஞ் செய்வார்க்கிடம் தவஞ்செய் வார்க்கும் அஃதிடம், நற்பொருள் செய்வார்க்கிடம் பொருள் செய்வார்க்கு மஃதிடம்' என்னும் சிந்தாமணிச் செய்யுளும் நினைவுகூர்தற்குரியது. (௩௫)

**செக்கர் வார்சடைச் சிவபிரான்**
**திருவருள் செய்யத்**
**தக்க வாய்மையின் உயிர்க்கெலாம்**
**தன்னிடத் திருந்து**
**மைக்க ணெம்பெரு மாட்டியெண்**
**ணன்கறம் வளர்க்கும்**
**தொக்க மாப்புகழ் படைத்தது**

(பொ - ரை.) தொண்டை யென்னும் நல்ல நாடானது, சிவந்த நீண்ட திருச்சடை முடியையுடைய சிவபெருமான் அறம் வளர்த்தற்காக இரு நாழி நெல் கொடுத்தருள, மைதீட்டிய கண்களையுடைய எம்பெருமாட்டியாராகிய காமாட்சியம்மையார் தம்மிடத்திருந்து நடுநிலையுடன் எல்லாவகை உயிர்கட்கும் முப்பத்திரண்டு அறங்களையும் செய்து பாதுகாக்கும் சேர்ந்த பெரிய புகழ்பெற்றுள்ளதாகும்.

(வி - ரை.) எல்லாவகை உயிர்களையும் வேறுபாடின்றி அறத்தால் பாதுகாத்தருளி வளர்த்த பெருமை நோக்கி 'அறம் வளர்க்கும்' என்றார்.

1. சீவக சிந், நாமகள் இலம்பகம் : ௪௮.

செக்கர்-செவ்வானம். செவ்வானமொத்த செந்நிறத் திருச் சடை இறைவற்குரியதாகலான், 'செக்கர்வார் சடை' யென்றார். எண்ணான்கு அறம்-முப்பத்திரண்டு அறங்கள். அவற்றைப் பின்னர்க் கூறுவர். (௫௬)

பவம்வி ளைத்திடாப் பெரும்பதி
யெனத்திசை போய
சிவம்வி ளைத்திடு நகரங்கள்
ஏழுளும் சிறந்து
தவம்வி ளைத்திடு காஞ்சியைத்

நவம்வி ளைத்திடும் பெருமைபூண்

(பொ - ரை.) தொண்டை நாடானது தன்னிடம் வாழ்பவர்க்குப் பிறப்பை யொழிக்கும் பெரிய திருத்தலங்களென்று திசைகள் முற்றினும் புகழ்போகிய நன்மையை விளைக்கின்ற மதுரை முதலிய எழுவகை வீடுபேற்று நகரங்களுள்ளும் மேம்பாடுடையதாகி, தானே தவத்தைப் பெருக்குகின்ற காஞ்சி நகரத்தைத் தன்னிடமாகக் கொண்டு, எக்காலத்தும் புதுமையை மிகுத்துத் தருகின்ற பெருமையைக் கொண்டதாகும்.

(வி - ரை.) வீடுபேறு தரவல்ல திருநகரங்கள் ஏழு; அவை: காஞ்சி, மதுரை, அயோத்தி, மாயை, காசி, அவந்திகை, துவாரகை என்று கூறப்படுவனவாம். சிவம்-நன்மை எட்டுத் திக்குகளினும் இக் காஞ்சியைத் தன்னிடங் கொண்டு திகழ்வதால் புகழ் காஞ்சிய தென்பாராய், 'பவம் விளைத்திடாத்...... திசை போய' என்றார். [1]'ஏமாங்கத மென்று இசையால் திசை போயது ண்டே' என்னும் சிந்தாமணிச் செய்யுளும் இக் கருத்தை வற்புறுத்தும். (௫௭)

தரைவி ளங்கிய தண்டக
நாட்டினில் தகைசால்
வரையுங் கானமும் புறம்பணைப்
பழனமும் மணிநீர்த்

1. சீவக சிந், நாமகள் இலம்பகம் : உ.

**திரையும் வேலையும் என்னுநா**
**னிலத்தினுட் சிறந்த**
**புரையில் ஐந்திணை வளஞ்சிறி**
**தறிந்தவா புகல்வாம்.**

**(பொ - ரை.)** *நிலவுலகில் உயர்ந்து விளங்கிய தொண்டைநாட்டிலே, சிறப்புடைய மலையும் காடும் பக்கத்தே யணைதலையுடைய வயலும் வற்றாத நீர் மடங்குகின்ற கடலுமென்று சொல்லப்பட்ட நால்வகைப்பட்ட நிலங்களுள், மேம்பட்ட குற்றம் நீங்கிய குறிஞ்சி முதலிய ஐவகை நிலங்களிலுமுள்ள வளங்களின் பெருமையுள் எமக்குச் சிறிது தெரிந்தவாறு எடுத்துக் கூறுவாம்.*

*(வி - ரை.) குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தலென்பன நால்வகை நிலங்கள். பாலை, இவைகளின் முறை திரிந்து மாறியது ஆகலான் அதற்கொரு தனி நிலம் இன்று. இதனை,*

> [1] *'முல்லையுங் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து*
> *நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்*
> *பாலை என்பதோர் படிவங் கொள்ளும்.'*

*என்னும் சிலப்பதிகார அடிகளால் அறிக.* *(௩அ)*

**முருக வேட்கிடு தூமமோம்**
**புறமுளி யகில்சந்**
**துருவ ஆரமுற் பெய்துபுன்**
**பயிர்விளைத் துவப்பார்**
**பெருவ ளந்துறந் தூர்தொறும்**
**இடுபலி பேணிப்**
**பொருவில் வாழ்க்கையர் தம்செயல்**
**போன்மெனப் பொருப்பர்.**

1. சிலப். கக : ௬௪-௬௬

**(பொ - ரை.)** *பெருஞ் செல்வத்தைத் துறந்து ஊர்கள்தோறும் சென்று இடுகின்ற பிச்சையேற்று வாழும் ஒப்பற்ற துறவற நெறியையுடையவர் செயலைப் போன்றதென்னும்படி மலைவாணராகிய குறவர்கள், முருகக் கடவுட்குப் புகைக்கின்ற முகவாசத்தை ஓம்புதற்குப் பக்கத்தில் உலர்ந்த அகிற்கட்டைகளையும் சந்தனக்கட்டைகளையும் நிறம் பொருந்திய நிறைந்த தீயில் போட்டுப் புல்லிய தினை முதலிய பயிர்களை விளைவித்து மகிழ்வு கொள்வார்கள்.*

**(வி - ரை.)** *குறிஞ்சி நிலத்துக்கு முருகவேள், கடவுளராதலால் அவரை வழிபடக் குறிஞ்சிநில மக்களாகிய குறவர் நறுமணப் புகையிடுதற்கு உலர்ந்த அகிற் கட்டை, சந்தனக் கட்டைகளைப் புகைத்து வழிபட்டுத் தினையை விளைத்து மகிழ்வர் என்றார். இந்நிலம் மலையும் மலை சார்ந்த இடமுமாதலால், குன்றுதோறும் குமரப் பெருமானுக்கு வழிபாடு புரிவாராயினர். இதனை, [1] 'நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி' என்று நக்கீரர் அருளியவாற்றானும் அறிக.* (௩௧)

ஏறு தன்னுடல் வருத்திய
பகைமையெண் ணாது
தூறு பன்மணி மரமுதல்
பொறையெலாந் தொலைத்த
வேறு நன்றியே கடைப்பிடித்
திசைவியன் பொருப்பர்க்
கூறு நல்வளம் விளைத்திடு
முயர்ந்தவர் செயல்போல்.

**(பொ-ரை.)** *தினைப்புனமானது, வலிமை மிக்க தனது உடம்பினை உழுது வருந்தச் செய்த பகைமை யெண்ணாமல் தூறுகளும் பலமணிகளும் மரமும் முதலிய சுமைகளாகிய இவைகளையெல்லாம், அடியோடு களைந்தொழித்த இவ்வுதவியை யெண்ணி, மேன்மக்கள் பிறர்க்குச் செய்யும் உதவிகளைப் போல, விரிந்த இடத்தையுடைய குறிஞ்சிநிலமாக்களுக்குப் பெருக்கமான வளத்தைத் தந்துதவும்.*

---

1. *திருமுருகு :* உ௩௧

(வி – ரை.) தினை முதலிய பயிர்களை விளைத்தற்கு மலைவாணர் நிலத்தை உழுது பண்படுத்துதலை, அதனை வருத்துவதாகத் தற்குறிப்பேற்ற அணி தோன்றக் கூறினர். நன்றியறிவுள்ள மக்கள் 'நன்றல்ல தன்றே மறப்பது' இயல்பு ஆகலான் மலைவாணர் உழுது நிலத்தில் விதைப்பதை 'தன்னுடல் வருத்திய பகை' என்றார். (௬0)

வேட்டை மேற்புகு வார்க்குநல்
வினையுந்த மடவார்
கூட்டம் வாய்க்குமச் சாரலில்
தினைக்குரற் கொய்தும்
சேட்டி ளங்கிளிக் குலங்களத்
தெரிவைமா ரோப்பும்
பாட்டி சைத்திறம் ஒளியிருந்
தனுதினம் பயிலும்.

(பொ – ரை.) வேட்டையாடச் செல்கின்ற பருவம் வாய்ந்த ஆடவர்க்கு நல்லூழ் கூட்டுவித்தலால் மங்கைப் பருவம் வாய்ந்த பெண்களின் புணர்ச்சிகிட்டும் அந்த மலைச்சாரலில், தினைக் கதிர்களைக் கொய்துசெல்ல வருகின்ற மிக்க இளமையுடைய கிளிக்கூட்டங்கள், அந்நிலத்தில் வாழ்கின்ற குறப் பெண்கள், தம்மைத் துரத்துதற்குப் பாடுகின்ற பாட்டினது இசைத் தன்மையைக் கேட்டு ஒளித்திருந்து எக்காலமும் பழக்கஞ் செய்யும்.

(வி – ரை.) குறிஞ்சி புணர்தலும் புணர்தல் நிமித்தமுமுள்ள இடமானதால், 'வேட்டைமேற் செல்வார்க்கு மடவார் கூட்டம் வாய்க்கும்' என்றார். கொடிச்சியர் கிளிகளை ஓப்புதற்குப் பாடுகின்ற பாட்டின் இனிமையைக் கேட்டுக் கிளியினங்கள் அடுத்து ஒளித்திருந்து கேட்டு அதைப்போல் தாம் பாடுதற்கு எந்நாளும் பயிலும் என்றார். இதனால் குறிஞ்சி நில இளநங்கையர் தம் இனிமையும் அவர் சிறந்த வனப்பும் குறிப்பால் உணர்த்தியவாறும். (௬௧)

நங்கு லத்தரு வாழ்க்கையைக்
கெடுத்து நம் இருக்கை
தங்க ளுக்கெனக் கொண்டவிவ்
வேனல்கள் தம்மை

**இங்கண் வாட்டுதும் என்பதோர்**
**சூழ்ச்சியெண் ணியபோல்**
**அங்கண் எஞ்சிய வேங்கைகள்**
**போதுசெய் தலரும்.**

**(பொ - ரை.)** அவ்விடத்தே வெட்டப்படாது எஞ்சி நிற்கும் வேங்கை மரங்கள், நம் குலத்தில் தோன்றிய மரங்களின் வாழ்க்கையைக் கெடச் செய்து, நமக்கு இருப்பிடமாகவுள்ள இடத்தைத் தங்களுக்கு இருப்பிடமாகக் கொண்ட இந்தத் தினைப் பயிர்களை, இவ்விடத்தே வருத்துவோமென்று எண்ணுகின்ற ஓர் எண்ணத்தை, எண்ணியதைப் போலாக, அரும்பில் போரும்பாக ஆகி மலர்ந்துநிற்கும்.

**(வி - ரை.)** தினைகள், விளைந்து பருவ முற்றிய காலத்தில் வேங்கைமரங்கள் பூக்கும்; பூத்த அக்காலத்தே தினைவிளைந்த தென்று கருதித் தினைக்கதிர் கொய்ய முற்படுவார் அதன் தினைத் தட்டைகளை அறுப்பர் ஆகலான், வேங்கைமலர்ந்து நின்றகாட்சி தம்மிடத்தைப் பற்றிக்கொண்டு, தம்மினத்தையழித்த பகையை யொழிப்பதற்குப் பூத்ததாகத் தற்குறிப்பேற்ற அணி தோன்றக் குறித்தார்.

(சஉ)

**என்னை ஊர்ந்தருள் சுடர்வடி**
**யிலையவேற் பெருமான்**
**தன்னை நன்மரு கெனப்படைத்**
**தவன்றன தூர்தி**
**அன்ன தாமெனுங் கேண்மையான்**
**அளிமுகிற் குலத்தைக்**
**கன்னி மாமயில் காண்டொறுங்**
**களிசிறந் தகவும்.**

**(பொ - ரை.)** இளமையும் பெருமையும் வாய்ந்த மயில்கள், என்னை ஊர்தியாக நடத்தியருளிய ஒளியுடைய வேலேந்திய முருகக் கடவுளை, நல்ல மருகனைக்கொண்ட இந்திரனுடைய ஊர்தியென்னும் நட்பினால், குளிர்ச்சி

வாய்ந்த மேகக் கூட்டங்களை காண்கின்ற போதெல்லாம் மகிழ்ச்சியாற் சிறந்து ஆடாநிற்கும்.

(**வி - ரை.**) மயில் மேகத்தைக்கண்டு ஆடுதற்கு ஏதுக்கூறலால் **ஏதுஅணி.** தெய்வ யானையை முருகவேளுக்கு மணஞ் செய்துகொடுத்த சிறப்பால் இந்திரன் மாமனாகக் கூறப்பட்டான். (சங)

**நெருங்கு பைந்தழை வருக்கைமேல்**
**நெடுவளி யலைப்ப**
**அருங்கண் மாமயில் வீற்றிருந்**
**தசைதருங் காட்சி**
**கருங்க ணுயிரச் செம்மல்தன்**
**மருகனைக் காண**
**மருங்கு வந்துதன் ஊர்தியை**
**நிறுவுதல் மானும்.**

(**பொ - ரை.**) பசுமையான இலைகள் நெருங்கிய பலா மரத்தின் மேல், பெரிய காற்றானது அசைக்க அரிய கண்களையுடைய தோகையையுடைய பெரிய மயில்கள் வீறுடன் இருந்து அசைகின்ற தன்மையால் கருமை பொருந்திய ஆயிரங் கண்களையுடைய இந்திரன் தன் மருகனை முருகக் கடவுளைக் காண்பதற்கு அக்குறிஞ்சி நிலத்தின் பக்கத்தில் வந்து தன் ஊர்தியாகிய மேகத்தை நிறுத்திவைத்திருப்பதை ஒக்கும்.

(**வி - ரை.**) பச்சிலை தழைத்த பலாமரங்களை மேகமாகவும், அதில் தங்கியிருக்கும் மயில் தோகைக்கண்கள் உண்மையால் அதனை இந்திரனாகவும் கொள்க.

மானும் - ஒக்கும் என்னும் பொருளது. (சச)

**சந்தும் ஆரமும் தாங்கிவம்**
**பலர்ந்ததண் குவட்டான்**
**மைந்தர் கண்ணையு மனத்தையுங்**
**கவர்ந்திடும் வனப்பின்**

**முந்தும் ஓங்கலும் கொடிச்சியர்**
**குழுக்களும் முகில்தோய்**
**கந்த மார்குழை முகத்தலர்**
**இலவங்கங் காட்டும்.**

**(பொ - ரை.)** *சந்தன மரங்களையும் முத்துக்களையும் தாங்கி மணம் பரவிய உச்சிகளினால், கண்ட ஆடவர்களின் கண்களையும் மனத்தையும் கவருகின்ற அழகால் முதன்மை யாக விளங்கும் மலையும் (சந்தனக் குழம்பையும் முத்து மாலையையும் மேற்கொண்டு கச்சிறுக்கிய அடிஇடம் அகன்ற தண்ணிய திரட்சிபொருந்திய கொங்கைகளினால் ஆடவர் களின் பார்வையையும் மனத்தையும் கொள்ளை கொள்ளு கின்ற அழகால் பெண்களுள் முதன்மையான குறப் பெண் களின் கூட்டங்களும்), மேகங்கள் தவழ்கின்ற மணமிக்க குழைகளிடத்தே மலர்கின்ற இலவங்கத்தைக் காட்டா நிற்கும். (மேகத்தை யொத்த கூந்தலில் சேர்ந்த கம்மியின் தொழில் தம்மிடம் முடிவுற்ற குண்டலத்தையுடைய முகத்தினிடத்து முருக்க மலரை யொத்த இதழினைக் காட்டா நிற்பர், கொடிச்சியர்.)*

**(வி - ரை.)** *இதில் சிலேடையணியாகக் கொடிச்சியருக்கும் மலைக்கும் ஒப்புமைகூறியதறிக. 'சந்தும் ஆரமுந் தாங்கி வம்ப லர்ந்த தண்குவட்டால்' என்பதால்* **செம்மொழிச் சிலேடையும்** *'முகில் தோய் கந்தமார் குழை முகத்தவர் இலவங்கங் காட்டும்' என்பதால் பிரிமொழிச்சிலேடையும் கொள்க.* (௬௫)

**கொங்கை யேந்திய ஆண்களும்**
**அவணகொம் புடைய**
**துங்க வேங்கையின் குலமெலாம்**
**அவணபால் சுரந்து**
**பொங்கு நீடுசே வினங்களும்**
**அவணவான் புனலை**
**அங்கண் வேட்டுணும் ஒற்றைத்தாள்**
**எகினமும் அவண.**

(பொ - ரை.) மணத்தைக்கொண்ட ஆண் மரங்களும் அவ் விடத்தில் உள்ளன; கிளைகளையுடைய மேன்மை பொருந்திய வேங்கை மரங்களும் அவ்விடத்தில் உள்ளன: பாலைச் சுரந்து விளங்கும் பசுக்களின் கூட்டங்களும் அவ் விடத்தில் உள்ளன; வானக் கங்கை நீரை அவ்விடத்தே விரும்பியுண்ணுகின்ற ஒரு காலினையுடைய புளியமரங்களும் அவ்விடத்தே உள்ளனவாம்.

(வி - ரை.) குறிஞ்சி நிலக் கருப் பொருள்களான மரத்தை யும் ஆனினத்தையும் கூறியவாறும். சே - எருது. அவ்வின மாகிய பசுக்கள். (சசு)

ஆணெ லாமொரு கன்னியை
மணப்பவா னணையுங்
கோணை வேங்கைகள் யாட்டினே
டுறவுகொண் டோங்கும்
பேணு சேவினஞ் சிங்கமே
லேறிடும் பிழையா
தேணி னுற்பொலி யெகினங்கள்
இடபத்தை விழுங்கும்.

(பொ - ரை.) ஆண் மக்களெல்லோரும் ஒப்பில்லாத கன்னிப் பெண்களை மணக்க, வானம் வரையும் தாவுகின்ற மாறுபாடுகொண்ட புலிகள், ஆடுகளோடு உறவுகொண்டு விளங்கும்; விரும்புகின்ற எருதின் கூட்டம் சிங்கத்தின் மேல் ஏறிவிளையாடும்; வலிமையால் விளங்குகின்ற புளிய மரங்கள் வானுற வளர்ந்து இடபராசியை மறைக்கும்.

(வி - ரை.) இதற்கு ஆண்மரங்கள் வானுற வளர்ந்து நிற்ப தால் கன்னி ராசியைத் தொடுமெனவும், வானத்தையளாவிய வேங்கை மரங்கள், மேட ராசியைத் தொடுமெனவும் விரும்பு கின்ற அழிஞ்சில் மரங்கள் சிங்க ராசியின்மேல் தொடுமெனவும் வேறொரு பொருள் கொள்ளக் கிடப்பதறிக. (சஎ)

வில்ல லர்ந்தபல் லுடுக்களும்
விண்ணெறிப் படரும்
செல்லும் வெண்கதிர்க் கடவுளும்
பானுவுந் திறல்சால்

**மல்லல் வானவக் குழுவுமெய்ப்**
**பாறவந் திருக்கும்**
**இல்லம் எங்கனும் வான்தொட**
**இழைத்திடுங் குன்றம்.**

**(பொ - ரை.)** *அங்குள்ள மலைகள், ஒளிமிக்க பல விண்மீன் கூட்டங்களும், வான்வழிச் செல்லுகின்ற வெண் கதிருடைய சந்திரனும், சூரியனும் வலிமை மிக்க வளப்பம் பொருந்திய தேவர்கூட்டங்களும், இளைப்பாற வந்திருக் கின்ற தேற்று மரங்களை எல்லா இடத்தும் வானுற வோங்கி வளரும்படி வளர்க்கும்.*

**(வி - ரை )** *தேற்று மரங்கள் அம் மலையில் வானுற வளர்ந் தோங்கியிருக்கும் எனக் கூறுவது மலையின் உயர்வு நவிற்சியணி யாகும்.* (சஅ)

**போது மூன்றினும் போதுசெய்**
**காவிசூழ் பொருப்பு**
**மேத குந்தமிழ்க் கெல்லையாம்**
**வேங்கட வரையுங்**
**காதல் பூப்பவத் தாணிகொண்**
**டறுமுகக் கடவுள்**
**கோது நீத்தர சாட்சிசெய்**
**குறிஞ்சியக் குறிஞ்சி.**

**(பொ - ரை.)** *அந்தக் குறிஞ்சிநிலமானது காலை நண்பகல் மாலை என்னும் மூன்று காலத்தினும் அரும்பி மலர்கின்ற கருங் குவளைகள் நிறைந்த திருத்தணிகையை யும் மேன்மை பொருந்திய தமிழ்மொழி வழங்குகின்ற ஓரெல்லையான வடவேங்கட மலையையும் முருகப் பெருமா னுக்கு விருப்ப மிகுதலால் தம் அரசிருக்கையாகக் கொண்டு, குற்றம் நீங்கிய அரசியல் செலுத்தும் குறிஞ்சி யாகும்.*

(வி - ரை.) போது - பொழுது: முதனீண்டு திரிந்தது. இதனால் தமிழ் வழங்கு நிலத்துக்கு வடவெல்லையாக விளங்கும் வேங்கட மலையையும் அறுமுகச் செவ்வேள் ஆட்சிகொள் திருத்தணியையும் சேர்த்துக்கூறி, குறிஞ்சி நிலமே அரசாளுகின்றதெனக் குறித்தார். பிறரும் குறிஞ்சியை [1]'வானயாறு தோய்ந் துயரிய மலயமே முக்கண், ஞானநாயகன்', ஆகக் குறித்த கருத்தும் அது. (சகூ)

அன்பெ லாமொரு பிழம்பெனத்
திரண்டகண் ணப்பன்
எம்பி ரார்க்கொரு விழியிடந்
தப்புகா ளத்திப்
பொன்பி றங்கிய முகலிசூழ்
கயிலையம் பொருப்புந்
தன்பு லத்திடை உடையது
தடவரைக் குறிஞ்சி.

(பொ - ரை.) பெரிய மலையைச் சார்ந்ததான குறிஞ்சி நிலம், அன்புகளெல்லாம் ஒருரு வெடுத்துவந்தாற்போன்ற கண்ணப்ப நாயனார், எம்பெருமானுக்குத் தம் ஒரு கண்ணையும் தோண்டி யப்புதற் கிடனான திருக்காளத்தி மலையாகிய விளங்குகின்ற பொன்முகலியாறு சூழ்ந்த திருக்கைலை மலையையும் தன்னிடத்தே கொண்டது.

(வி - ரை.) கண்ணப்பநாயனார் அன்பே உருவாகக்கொண்டவர்; தாம் வேறு இறைவன் வேறாகக் கருதாத உள்ளப் பாங்கினர்; இவர்தம் பெருமையைக் 'கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்' எனக்கூறி மணிமொழிப் பெருமான் பாராட்டுப் பெற்றவர்; அவர் இறைவன் திருக்கண்களில் செந்நீர் பெருகியோட அது பொழுது தம் கண்ணைத் தோண்டி அப்பிய பேரன்பாளர். ஆகலான் 'அன்பெலா மொரு பிழம்பெனத் திரண்ட கண்ணப்பன்' என்றார். குறிஞ்சி நிலத்துக்குப் பெருமை கூறுவார், இக் கண்ணப்பர் கண்ணிடந் தப்பப் பெற்ற பெருமையுடையதும், தென் கைலையெனப் பெயர் பெறுவதுமாகிய சிறப்புப் பெற்றது 'கயிலையம் பொருப்பும்' தன்பாற் கொண்டதென்றார். (ருo)

1. திருவிளை, திருநாட்டு: சச.

**நாவன் மன்னவர்க் கிரந்துசோ**
**றளித்திடு நம்மான்**
**தேவி யோடமர் திருக்கச்சூர்**
**திருவிடைச் சுரமும்**
**பாவ காரியர் எய்தொணக்**
**கழுகுசூழ் பறம்பும்**
**மேவ ரத்திகழ் குறிஞ்சியின்**
**பெருமையார் விரிப்பார்.**

**(பொ - ரை.)** *திருநாவலூர ராளியாகிய ஆளுடைய நம்பிக்குப் பல இடங்களிலும் சென்றிரந்து திருவமுது தந்தருளிய சிவபெருமான், உமையம்மையாரோடு எழுந் தருளியிருக்கின்ற திருக்கச்சூர் என்னும் திருத்தலமும், திருவிடைச் சுரமென்னும் திருத்தலமும், பாவத் தொழி லுடையார் சேர்தற்கருமையான திருக்கழுக்குன்றமும் தன்னிடத்துக்கொண்டு விளங்குகின்ற குறிஞ்சிநிலத்தின் பெருமையை எடுத்து விளக்கிக் கூறுவோர் எவருளர்? (ஒருவருமில்லை யென்றபடி.)*

**(வி – ரை.)** *நாவல் - திருநாவலூரர். அறிவிற் சிறந்த ஆண் டகையாகலான், ஆளுடைய நம்பிகள் 'மன்னவர்' எனப்பட்டார். ஆளுடைய நம்பிகள் திருக்கச்சூருக்கு எழுந்தருளியபோது சிவ பெருமான் அந்தணத் திருக்கோலங் கொண்டுவந்து சோறு வாங்கி வந்து உண்பித்தனர் என்பது வரலாறு. இத்தகைய பெருமை பெற்ற திருக்கச்சூரும், திருவிடைச்சுரமும், திருக் கழுக் குன்றமும் மலையாகிய குறிஞ்சி நிலமாகலின் 'குறிஞ்சியின் பெருமை யார் விரிப்பார்' என்றார்.* (௩௧)

*பாலை*

**குரா வளித்திடு பாவையைக்**
**கோங்குபொன் கொடுத்துப்**
**பராரைப் பாடலம் பூந்தழற்**
**பாங்கரின் மணப்ப**

**மராம ரத்துளர் வண்டுபண்**
**பாடவன் முருங்கை**
**விராவி வெண்பொரி இறைத்திடும்**
**வியப்பின தொருபால்.**

**(பொ - ரை.)** *ஒரு பக்கம் குராமரம் ஈன்ற பாவையைக் கோங்கு மரங்கள் பொன்னையளித்துப் பருத்த அடியை யுடைய பாதிரியின் பூக்களாகிய வேள்வித் தீயின் பக்கத்தில் திருமணஞ் செய்ய, மராமரத்தில் பறந்தாடுகின்ற வண்டுகள் இசைப்பாடல் பாட வலிய முருங்கை மரங்கள் கலந்து கொண்டு வெண்ணிறப் பொரிகளைத் தூவும் வியப்பினை யுடையது.*

*(வி - ரை.) குரவ மரம், பாவைபோல் மலர் பூத்தலால் 'பாவை' என்றார்.*

> *' தான்தாயாக் கோங்கம் தளர்ந்து முலைகொடுப்ப*
> *ஈன்றாய்நீ பாவை இருங்குரவே '*

*எனவும்,*

> *' அரவின் வாயின் முள்ளெயி றேய்ப்ப அரும்பீன்று*
> *குரவம் பாவை முருகமர் சோலைக் குற்றாலம் '*

*எனவும் வரும் பிற சான்றோர்கள் திருமொழிகளானும் அறிக.*

*குரவும் கோங்கும் பாதிரியும் முருங்கையும் பாலை நிலக் கருப் பொருள்கள்; ஆகலான், அவற்றை ஒருங்கே கூறினார். குரவின் மலர், பெண் போன்றிருத்தலால் ஏனைய மரங்கள் பூக்கள் உதிர்ப் பதை மணத்துக்குரிய பொருள்களாக வியப்புத் தோன்றக் குறித்தார்.* (௫௨)

**எயிற்றி மாரெழில் நலத்தினுக்**
**கிரியல்போ யுடைந்தாங்**
**கயற்பொ தும்பர்க் கலிர்குராப்**
**பாவைகண் டவர்தந்**
**துயிற்று சேயெனக் கவன்றுபோய்த்**
**தூதுணம் புருக்கள்**
**வெயிற் றலைக்கணின் றுயங்குவ**
**நிலைமைவிண் டவர்போல்.**

**(பொ - ரை.)** கல்லை உண்கின்ற புறுக்கள் வேடப் பெண்களது அழகின் பொலிவுக்குப் புறங்காட்டித் தோற்று, அவ்விடத்து அயற்பக்கத்திலுள்ள சோலையிற்சென்று மலர்ந்த குராமரத்தின் காயாகிய பாவையைப் பார்த்து அவர்களது தூங்கச்செய்கின்ற குழந்தையென அப்பாற் சென்று; இல்லறத்தினின்று துறந்த துறவிகள்போல வெயிலில் நின்று வருந்துவனவாகும்.

(வி - ரை.) எயிற்றியர்-வேடமாதர். தூது - கல். 'தூதுணம் புறவெனத் துதைந்தநின் எழில்நலம்' என்பதில் அஃதிப் பொருட்டாதல் அறிக. புறுக்கள், குரவம் பாவையென அஞ்சி வெளிச் சென்று வெயிலில் துறவிகள்போல நிற்கும் என்பதாம். (௩௩)

**தூது ணம்புற வினமெலாம்**
**துணையுடன் கெழுமிப்**
**போத வூடியும் உணர்த்தியும்**
**தலைத்தலைப் புணர்ந்து**
**காத லந்நலார் மொழியையுங்**
**கடந்துசே ணிடைச்செல்**
**ஏதி லாடவர் தமைச்செல**
**வழுங்குவித் திடுமால்.**

**(பொ - ரை.)** தூதுணம் புறுக்களெல்லாம் தம் சேவற் புறுவுடன் தழுவிப் பொருந்த ஊடல்கொண்டும், அவ்வூடலைத் தீர்த்தும் இடங்கள்தோறும் புணர்ந்து, விருப் பந்தரும் தம் தலைவிகளின் சொல்லையுங் கடந்து, பொருள் வயிற் பிரிவாகத் தூர நாட்டிற்குச் செல்லுகின்ற தமக்கு அயலாயுள்ள தலைவர்களை அவர்கள் கருதிச் செல்லுஞ் செலவினைத் தடுக்காநிற்கும்.

(வி - ரை.) புறுக்கள் ஆணும் பெண்ணுமாகக் கூடிக் களித் தலைக் கண்ட பொருள் வயிற்பிரியும் ஆடவர், தம் காதலியின் பால் அன்பு மீதூரத் தம் செலவைத் தவிர்ப்பர் ஆகலான், 'ஏதிலாடவர்.........செலவழுங்குவித் திடும்' என்றார். (௩௪)

வெங்க திர்ப்பிரான் நண்பகற்
போதினில் வேனில்
மங்கை கொங்கைதோய்ந் தளித்திடும்
பாலையா மைந்தன்
அங்கண் நானில அரசர்பால்
இரந்துவன் முரம்பு
தங்கு சூழலிற் சிற்றர
சாள்வதும் உளதால்.

(பொ - ரை.) வெப்பக் கதிர்களையுடைய சூரியன், நடுப்பகற் காலத்தில், வேனிற் பருவமாகிய பெண்ணின் கொங்கையைத் தழுவிப் பெற்ற பாலைநிலமாகிய ஆண்மகன், அழகிய இடத்தையுடையவாகிய முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும் நானிலப் பேரரசர்களிடத்துக் குறை பிரந்து வன்மையாகிய மேட்டுநிலத்திலிருந்து சிற்றரசு செலுத்தி ஆள்வது உண்டு.

(வி - ரை.) [1]"கோத்தொழி லாளரொடு கொற்றவன் கோடி
வேத்தியல் இழந்த வியனிலம் போல
முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவங் கொள்ளும்'

என்பது, ஆன்றோர் வழக்காதலால், பாலையை ஆண்மகனாகக் கொண்டு சிற்றரசு ஆள்வதாகக் குறித்தார். (ருரு)

முல்லை

நவிலும் இந்நிலப் புறம்பயில்
புறவநன் மடந்தை
குவிவ ருந்தழல் வெம்மைகூர்
கொடும்பசி தணியச்
செவிலி யாய்முகில் தீம்பய
மூட்டிட வளர்ந்தாங்
கவிழு நீள்வர காதியா
மகப்பயந் தளிக்கும்.

1. சிலப், கக: சு0 -

**(பொ - ரை.)** சொல்லப்பட்ட இந்தப் பாலைநிலத்தின் பக்கத்தேயமைந்த முல்லை நிலமாகிய ஓர் அழகுள்ள பெண், திரண்ட நெருப்புப்போலும் வெம்மைமிக்க கொடிய பசி நீங்க, மேகமென்னும் வளர்ப்புத் தாய் இனிய பாலாகிய நீரையூட்ட வளர்ச்சியுற்று, அவ்விடத்துப் பரந்து நீண்ட வரகு முதலிய மக்களைப் பெற்று அந் நிலமக்களை வளர்க்கும்.

**(வி - ரை.)** முல்லை நிலத்தில் வரகு கொள்ளு எள்ளு சாமை துவரை முதலியன விளையும் தன்மையன. ஆகலான், 'வரகாதியா மகப்பயந் தளிக்கும்' என்றார். இதனால் முல்லை நிலத்தின் இயல்பும் அதில் விளைபொருளும் கூறப்பட்டனவாம். (௩௯)

**கொல்லை யெங்கணுங் கொழுமலர்**
**ததைபுன முருக்கின்**
**முல்லை மென்கொடி படர்ந்தலர்**
**நிரைநிரை முகிழ்ப்ப**
**வல்லை வென்றநந் தரப்பிரா**
**னரக்கெறி மார்பின்**
**தொல்லை வெண்டலை மாலிகை**
**துயல்வரல் மானும்.**

**(பொ - ரை.)** அந்த முல்லை நிலத்தில் எவ்விடத்தும் செழிப்புள்ள மலர்கள் நிறைந்து நெருங்கிய காட்டு முருங்கை மரத்தின்மேல், மெல்லியவான முல்லைக் கொடிகள் படர்ந்து மலர்கள் வரிசை வரிசையாக அரும்புதலானது, இருளை வென்ற திருநீலகண்டத்தையுடைய சிவபெருமானது ராதிலிங்கத்தை வென்ற திருமார்பிடத்தில் பழமையான வெண்ணிறமுள்ள தலைமாலை தொங்கி அசைவதை ஒத்திருக்கும்.

**(வி - ரை.)** புனமுருக்க மலர், செந்நிறமாதலால் சிவபிரான் திருமார்பாகவும், முல்லை அதன்மேற் படர்ந்து மலர்தலை, தலை மாலையாகவும் அதன்மீது படர்தலை அசைவாகவும் குறித்தார். இறைவன் பத்தியின் பாலராகிய பெரியார்க்குக் கண்ணிற் காண்பன வெல்லாம் இறைவன் திருக்கோலமாகத் தோன்றுதல் இயல்பு. அவ்வியைபால், இந் நூலாசிரியராகிய முனிவரர், அகக்

ண்களுக்குச் சிவபெருமான் திருவடிவாக முல்லையொடு கூடிய முருக்க மலர் காட்சியளித்தது! என்னே! பெரியார் பண்பு. மேல் வருவனவும் அன்ன. (௬எ)

நீலம் பூத்தலர் பூவையைக்
கோட்டுநீள் கரத்தாற்
கோலம் பூத்தபொற் கொன்றைகள்
தழீஇக்கிடந் தசைவ
ஆலம் பூத்தருள் மிடற்றினோன்
அன்றுமோ கினியாம்
சீலம் பூத்தமால் இளமுலை
திளைப்பது தெளிக்கும்.

**(பொ - ரை.)** கருநிற மலர்கள் பூத்து மலர்ந்த காயாவை, பொன்னிறம்போல் அழகுடன் மலர்ந்த பூக்களை யுடைய கொன்றைமரங்கள் தம் கிளைகளாகிய நெடிய கைகளினால் தழுவிக்கொண்டு அசைவது, நஞ்சக்கறை படிந்த திருநீலகண்டத்தையுடைய சிவபெருமான் அக் காலத்தில் மோகினிப் பெண்வடிவு கொண்ட அழகு மிக்க திருமாலினுடைய இளங் கொங்கை இன்பம் நுகர்தலை ஒக்கும்.

**(வி - ரை.)** நீலம்: பண்பாகுபெயராக மலரைக் குறித்தது. பூத்தலர்ந்த காயாமலர்களைத் திருமாலாகவும், பொன்னிறமாகப் பூத்த கொன்றைமலர்களைச் சிவபெருமானாகவும் நிறம்பற்றிக் கொள்க.

முற்காலத்தில் பாற்கடல் கடைந்தபோது அமுதம் உண்டாக அதைத் தேவர்கட்கும் அசுரர்கட்கும் பகுத்துக் கொடுத்து உண்பிப்பதற்குத் திருமால் மோகினி உருவங்கொண்டார் என்பது வரலாறு. அம்மோகினியைச் சிவபெருமான் புணர்ந்தனர் என்பதும் கந்தபுராணம் கூறுவதாகும். (௬அ)

பெண்ண லங்கனி இடைக்குலப்
பிடிநடை மடவார்
விண்ண லங்கனி மாதரை
எழிலினுல் வென்று

**பண்ண லங்கனி மிடற்றவர்**
**பணைத்தமூக் கரிந்து**
**மண்ணில் எங்கணுந் தூக்கிவைத்**
**தெனக்குமிழ் மலரும்.**

**(பொ - ரை.)** *பெண்களுக்குரிய பல்வகை யழகும் மிகுந்த இடைக்குலத்துப் பிறந்த பெண்யானையை யொத்த நடையையுடைய ஆய்ச்சியர், வானுலகத்து அழகு மிக்க அரம்பையர்களைத் தம் அழகினால் வெற்றிகொண்டு, பண்ணின் சுவையை யொத்த குரலினராகிய அவ்வரம்பை மாதரின் பெரிய மூக்குகளையரிந்து இந்நிலவுலகில் எங்கும் தூக்கி வைத்தாலொப்பக் குமிழ மலர்கள் மலர்ந்திருக்கும்.*

**(வி - ரை.)** *காயா கொன்றை குமிழ் இவைகள் முல்லைநிலக் கருப்பொருள்கள். அழகிற் சிறந்த அம் முல்லைநில வாழ்க்கையரான ஆய்ச்சியர்கள், தம் அழகிற்குப் பகைவர்களான வானுலக அரம்பையர்களை வென்று, அவர்தம் மூக்கையரிந்து கொணர்ந்து, கட்டித் தொங்கவிட்டிருப்பதை யொப்ப, குமிழ மலர்கள் பூத்திருப்பதாகும். எனவே குமிழும் பிற காயா கொன்றை முதலியனவும் மலர்ந்து காட்சியளிக்கும் முல்லைநிலத்தின் மாண்பு இதனால் உணர்த்தப்பட்டது.* (௯௫)

**மௌவ லங்குழ லார்விழிக்**
**குடைந்துவான் குதிக்கும்**
**நவ்வி மீண்டக லாவகை**
**மகளிரா னனத்துக்**
**கொவ்வு றுதவர் ஆணையில்**
**திரியு மொண் மதிகண்**
**டவ்வு ழித்தன திருக்கையிற்**
**சிறைப்படுத் தலைக்கும்.**

**(பொ - ரை.)** *முல்லை மலர்களையணிந்த அழகிய கூந்தலையுடைய ஆய்ச்சியர்களின் கண்களுக்குத் தோற்று வானில் தாவுகின்ற மானை, அப் பெண்களின் முகத்துக்கு ஒப்பாகாமல் (தோற்றுப் போனதால்) அவர் கட்டளைக்குக்*

கட்டுப்பட்டு (வான வெளியில்) திரிகின்ற ஒளிமிக்க சந்திரன் பார்த்துத் தன்னினின்றும் மீள நீங்கிப் போகாதவாறு அவ்விடத்தே தனது இருக்கையில் சிறைப்படுத்தி வருத்துதல் செய்யும்.

(வி - ரை.) முல்லைநிலத்து ஆய்ச்சியர் முகத்துக்குத் தோற்றுப்போன சந்திரன், அவர் கண்களுக்குத் தோற்றமானைச் சிறைப்படுத்தும் என்பது, சந்திரனில் தோன்றியிருக்குங் களங்கத்தை. இதனை, முயற்களங்கமென்றும், மான்களங்கமென்றும், பண்டுதொட்டே நம் தமிழ்ச் சான்றோர் வழங்குவர். இதனை,

[1] 'திங்களுள் தோன்றி இருந்த குறுமுயால்'
என வரும் கலித்தொகைச் செய்யுளானும் அறியப்பெறும். சந்திரன் மங்கையர் முகத்துக்கு உவமப் பொருள். அது, ஒவ்வாத தன்மையைத் தோற்றதாகத் தற்குறிப்பேற்ற அணி தோன்றக் குறித்தார். தோற்றவர் தோற்கடிக்கப்பட்டவர்க்கு அடிமையாக அவர் உவப்பன செய்வது உலகியல் மரபு ஆதலால், அக்களங்கத்தை மானைச் சிறைப்படுத்தியதாகக் கூறினர். (௩௦)

**கற்றை வார்குழல் ஆய்ச்சியர்**
**கயல்விழி முகத்தின்**
**பெற்றி ஒப்புறப் பெருங்குருந்**
**துச்சிமேல் தாவி**
**ஒற்றை மானுடைக் கலைமதி**
**யதனிழல் உறங்கு**
**மற்றை மானையும் பற்றுவான்**
**கதிர்க்கையால் வருடும்.**

**(பொ - ரை.)** ஒருமானைத் தன்னிடங் கொண்ட கலை நிறைந்த சந்திரன், நீண்ட கூந்தல் திரளையுடைய இடைப் பெண்களின் கயல்மீனை யொத்த கண்களையுடைய முகத்தினது தன்மை யொப்ப, பெரிய குருந்த மரத்தின் உச்சிமீது தவழ்ந்து, அம்மரத்தின் நிழலில் உறங்குகின்ற வேறொரு மானையும் பிடிப்பதற்குத் தன் கதிர்களாகிய கைகளினால் தடவா நிற்கும்.

1. கலித்தொகை : ௧௪௪.

**(வி - ரை.)** பெண்களின் முகத்துக்கு ஒப்பாகிய ஒரு மானை யுடைய சந்திரன், மற்றொரு மானையும் பிடிப்பதற்குத் தன் கதிர்களாகிய கைகளினால் குருந்தமரத்தடியில் தூங்குகின்ற மானைத் தடவிப் பிடிக்க முற்படுவான் என்க. மற்றொருமானைப் பிடிக்கும் தன்மை சந்திரனுக்கு இல்லாமையால், இல்பொருள் தொழிலுவமம். (௬௧)

நலம்ப யின்றிள வேனிலின்
நவிலுமாங் குயில்கள்
அலம்பு கார்வரும் போதுவா
யடைப்பது முன்னாட்
புலம்பு கொண்டவர் காரொடுந்
தலைவர்தேர் புகுத
வலம்பு னைந்துரை வளமொழிக்
கிடைதலான் அன்றே.

**(பொ - ரை.)** நன்மைமிக்க இளவேனிற் பருவகாலத்தில் கூவுகின்ற மாமரத்தில் வாழும் குயில்கள், முழங்குகின்ற மேகங்கள் வரும்போது கூவாது வாயடைத்துப் போதல், தம் தலைவர் பிரிந்த முன்னாட்களில் பொறுத்திருந்து வருந்திய பெண்கள், வருங்காலத்தை வரையறைப் படுத்திப் பிரிந்து சென்ற தலைவர் தேருடன் வருதலால், அவர்களின் வெற்றியைச் சிறப்பித்து வாழ்த்துக் கூறுகின்ற இனிய சொல்லுக்குத் தோற்றுப்போன தன்மையினாலன்றோ?

**(வி - ரை.)** குயிற்பறவைகள் இளவேனில் நீங்கிக் கார்காலம் துவங்கியவுடன் கூவாது வாயடங்கும்; மயில்கள் கார் கண்டு ஆடுதல் செய்யும்; ஆகவே, தலைவர்கள் குறித்துச் சென்ற கார் காலம் வந்தவுடன் தம் காதலியைக் காணத் தேர்மீதிவர்ந்து வந்தனராக; அவர் வருகை கண்ட முல்லை சான்ற கற்பின் மிக்க மங்கையர் தம் கணவர் புகழ்பாடிக் கனிந்த சொற்களால் வாழ்த்தி மகிழ்வர். அக் குரல் கேட்ட குயில்கள் அதைக் கேட்டுத் 'தம் குரல் இவ்வளவு இனிமைப் பண்பில்லையே!' என்ற நாணத்தால் வாயடைத்துக் கூவாது வாளா இருந்ததாகக் கருத்துக் கொண்டு, 'வாயடைப்பது......வளமொழிக் கிடைதலான் அன்றே' என நயம்படக் கூறினர். (௬௨)

**தொண்டை மான்கடக் களிற்றினை**
**முல்லையால் தொடக்கி**
**அண்டர் தம்பிரான் வெளிப்படக்**
**காட்சிதந் தருள்சீர்**
**கொண்ட வான்பதி முதல்பல**
**தன்னிடைக் குலவக்**
**கண்ட முல்லையின் பெருமையார்**
**கட்டுரைத் திடுவார்.**

(பொ - ரை.) *தொண்டை நாட்டையாண்ட அரசனுடைய மதத்தையுடைய யானையைத் தன்னிடமுள்ள முல்லைக் கொடிகளினாற் கட்டிச் சிறைப்படுத்தி, சிவபெருமான் அவ் வேந்தனுக்குத் தோன்றிக் காட்சி தந்தருளிய சிறப்புப் பொருந்திய பெருமை வாய்ந்த திருமுல்லைவாயில் முதலிய திருத்தலங்கள் தன்னிடத்து விளங்குமாறு கொண்டுள்ள முல்லைநிலத்தின் பெருமையைத் தொகுத்துப் புகழ்ந்து கூறுவோர் எவர்? (ஒருவருமில்லையன்றோ!)*

(வி - ரை.) *தொண்டைமானாண்ட நாடாதலால் அதற்குத் தொண்டை நாடெனக் காரணப் பெயராக வழங்கலாயிற்று. ஒரு சோழவேந்தன் தன் பகைவர்களோடு போர் செய்தற்குத் திருமுல்லைவாயில் வழியாக யானைமேல் ஏறிச் செல்லும்போது அங்கு அடர்ந்து படர்ந்து கிடந்த முல்லைக்கொடிகளினால் கட்டுண்ட அவ்வியானை அடிபெயர்த்து வைக்கவும் வலியின்றித் தடைப்பட்டு நின்றது. அதையறிந்த மன்னன் கீழிறங்கி அக் கொடிகளைத் தன் வாளால் தறித்து விடுவிக்க ஓங்கிய காலையில் அவ் வாளின் வெட்டு அங்கெழுந்தருளியிருந்த சிவபெருமானின் இலிங்கவடிவு மேல் தாக்க, அதையறிந்த மன்னன் வருந்தச் சிவபெருமான் காட்சி தந்தருளினார் என்பது புராண வரலாறு. அவ்வரலாற்றை உள்ளடக்கி, 'முல்லையால் தொடக்கி......... காட்சி தந்தருள்சீர்......வான்பதி' என்றார்.*

*இத்தகைய சிறப்பு முல்லையென்ற பெயரால் வந்ததாகலான், 'முல்லையின் பெருமை யார் கட்டுரைத்திடுவார்' என்று வியப்புச் சுவை தோன்றக் கூறினார்.* (கூ௩)

மருதம்

பொலஞ்சி றைச்சுரும் புளர்தரு
குறுஞ்சுனைப் புறவம்
நிலந்த னைப்புடை உடுத்தது
நெட்டிள வாளை
இலஞ்சி நின்றுமீப் பாய்ந்துவெண்
மதிகிழித் தேகித்

தடம்பணை மருதம்.

(பொ - ரை.) மிக்க இளமை பொருந்திய வாளைமீன்கள், தடாகத்திலிருந்து மேலே தாவிப்பாய்ந்து, வெண்ணிறமுள்ள சந்திரனைக் கிழித்து, அப்பாற்போய், வானத்திலுள்ள கங்கையில் உலாவி வருதற்கு, எல்லையாகவுள்ள தாமரைமலர்களையுடைய பெரிய கழனிகள் நெருங்கிய மருதநிலமானது, பொன்னிறம் பொருந்திய சிறகுகளையுடைய வண்டுகள் பறந்து அசைந்து திரிகின்ற சிறிய கற்சுனை (மடுக்)களையுடைய அம் முல்லைநிலப் பாங்குகளைத் தன் பக்கத்தே சூழப்பெற்றுள்ளதாகும்.

(வி - ரை.) நெடு இள வாளை; முதலையடுத்த அடைமொழிகள். வாளைமீன்களின் வளர்ச்சியையும் இளமைப் பண்பையும் எடுத்து விளக்கியவாறும். மருதஞ் சான்ற மருதத் தண்பணையின் சிறப்புக்கு, அதன் வளத்துக்கு இவ்வாறு கூறினர். இவ்வாறே மருதநில வைப்பை அதிவீரராம பாண்டியனாரும், தம் நைடதப் பெருங்காப்பியத்தில்,

"[1]பூகமடல் கீறியிள வாளைபுனல் காலும்
மேகமிசை தாவிடும் விதர்ப்பநகர்,

என்றதும் காண்க. சுரும்பு-பொறிவண்டு. புறவம் – முல்லைநிலக்காடு, இலஞ்சி-தடாகம். மீ-மேலிடம். தலம்-இடம்.(கூச)

ஒருவன் ஆகிய சிவபிரரன்
உலகுயிர் அளிப்பக்
கருணை கூர்ந்துதன் நவந்தரு
பேதமுங் காட்டும்

1. நைடதம், நளன்தூது : ந.

**திருநி கர்ப்பவோர் பாலியே**
**வயல்வளஞ் செழிப்பப்**
**பெருகு தண்புனல் பற்பல**
**கால்களாய்ப் பிரியும்.**

**(பொ - ரை.)** ஒரே வடிவனாகிய சிவபெருமான், (தம் திருவருளினால்) உலகில் (பல்வேறு தோற்றம் பெற்றுள்ள) உயிர்வகைகளைப் பாதுகாத்தருளும் பொருட்டாக அருள் மிகுந்து ஒன்பது வகைப்பட்ட வெவ்வேறு திருவுருவத்தைக் கொண்டருளிய சிறப்பை யொப்ப, ஒரு பாலியாறே வயல்களின் விளைவுவளம் செழித்து ஓங்குதற்காக, தன்னிடம் பெருகியுள்ள குளிர்ந்த நீரால் பற்பல கால்வாய்களாகப் பிரிந்து செல்லும்.

**(வி - ரை.)** முப்பத்தாறு வகைப்பட்ட தத்துவங்களையும் கடந்து அறிவின் வெளியிலே நிற்கின்ற சைவசமய முதற்கடவுள் சிவபெருமான். இவர் உலகுயிர்கட்குப் பரிபக்குவம் வாய்க்கப் படைத்தல் காத்தல் அழித்தல் ஆக்கல் அருளல் ஆகிய ஐவகைத் தொழிலையும் இயற்றியருளுவர். இவ் வைவகைத் தொழில் நடாத்த, சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் மகேசுவரன் உருத்திரன் திருமால் பிரமன் என்னும் ஒன்பதுவகை அருவம் உருவம் அருவுருவம் ஆகிய திருமேனிகளைக் கொண்டருளுவர். இவற்றுள் சிவம் சத்தி நாதம் விந்து என்னும் நான்கும் அருவம். மகேசுவரன் உருத்திரன் திருமால் பிரமன் என்னும் நான்கும் உருவம். நடுநின்ற சதாசிவன் அருவுருவம் எனக் கொள்க. இவற்றை ஐந்தொழிலுக் கேற்ப ஐவகைத் திருமேனிகளாகக் கொள்வதுமுண்டு. இவற்றை இவ் விறைவர்களின் அருள்வலி (சத்தி)யாகக் கொண்டு அடக்கிக் கூறுவது ஆன்றோர் வழக்கு. இதனைப் பரஞ்சோதி முனிவரர்,

> [1]'ஈறிலாதவள் ஒருத்தியே ஐந்தொழில் இயற்ற
> வேறு வேறுபேர் பெற்றென வேலைநீர் ஒன்றே
> யாறு கால்குளம் கூவல்குண்டு அகழ்கிடங் கெனப்பேர்
> மாறி யீறில்வான் பயிரெலாம் வளர்ப்பது மாதோ'

என்பதால் அறிக. ஒன்பது வடிவங்களையும், சிவபிரான் முழுமுதல் தன்மையையும்;

1. திருவிளை, திருநாட்டு. கஎ.

[1]'சிவம்சத்தி நாதவிந்து சதாசிவன் திகழும் ஈசன்
உவந்தருள் உருத்தி ரன்றான் மாலயன் ஒன்றின் ஒன்றாய்ப்
பவந்தரும் அருவம் நாலிங் குருவநால் உபயம் ஒன்றாய்
நவம்தரு பேதம்ஏக நாதனே நடிப்பன் என்பர்'

எனவும்,

[2]'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே
மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய் வங்கள்
வேதனைப் படும்இ றக்கும் பிறக்குமேல் வினையும் செய்யும்
ஆதலான் இவையி லாதான் அறிந்தருள் செய்வன் அன்றே'

எனவும் வரும் சிவஞானசித்தியார்த் திருவிருத்தத்தா னறிக. ஏனைய தத்துவவகைகள் யாவும் விரிக்கின் விரியும். வல்லார் வாய்க் கேட்டுத் தெளிக.

இத்தன்மைபோல, பாலியாறு ஒன்றேயாய் அதனினின்றும் பல பிரிவுகளாக வாய்க்கால் கொண்டுசென்று அடுத்த வயல்களை நிரப்பிப் பயிர்களை வளர்த்து விளைவுமல்கச் செய்யும் என்க. இஃது, எடுத்துக்காட்டு உவமையணி. (கரு)

பராரை மூலமேற் பணைகிளை
வளாரரெனைப் பலவும்
விராவி ஒன்றிலொன் றனந்தமாய்க்
கவடுவிட் டென்னத்
தராத லம்புகும் பாலியிற்
பிரிந்துதண் கரைக்கண்
அராவு கால்களும் அவைதரு
கால்களும் அனந்தம்.

(பொ-ரை.) பருத்த தூற்றையுடைய ஒரு மரத்தினது மேலிடத்தே கொம்பும் கிளையும் வளாரும் ஏனைய தளிரும் இலையும் அரும்பும் பூவும் காயும் பழமும் ஆகிய பலவும் தம்முள் ஒன்றுபட்டு ஒன்றிலிருந்து ஒன்று அளவு கடந்து கவடுவிட்டு மேலெழுந்தாற் போலாக, உலகெங்கும் செல்கின்ற பாலியாற்றினின்று பிரிவுபட்டு, தண்ணிய

1, 2. சிவ-சித்தியார் என; உடு.

கரையை அரித்துச் செல்கின்ற வாய்க்கால்களும் அவை களின் கிளைகளாகப் பிரிந்த கால்வாய்களும் எண்ணிலடங்கா தனவாம்.

(வி - ரை.) பருஅரை-பராரை. [1]'முற்றும் அற்று ஓரோவழி' என்னும் நன்னூல் விதிப்படி பரரை எனப் புணரற்பாலது வரு மொழி அகரம் நீண்டு பராரை என்றுயிற்று. பருத்த அடி என் பது பொருள். மூலம்-ஆதி; முதன்மை; அடிப்படை. இங்கே மரத்தைக் குறித்தது. அரவால்-அரித்தல்; மெல்ல மெல்லக் கரையை நீரால் கரைத்துச்செல்லல். கால்-கால்வாய்; கால்போல் நடந்து சேறற்கு இடனுக இருத்தலால், கால்போன்ற வாயை யுடையது என்னும் பொருளாய் நீரோடும் வழியைக் குறித்து நின்றது. (௬௬)

நான்மு கப்பிரான் வேள்வியைத்
 தபவரு நதியை
மான்ம றுத்திடைக் குறையெனக்
 கிடந்தமை மான
மீன்மு கப்பெருங் காற்புனல்
 தட்பவீழ்ந் துழக்கும்
பான்மு லேக்கரு மேதியாற்
 பருமடை உடையும்.

(பொ - ரை.) நான்கு திருமுகங்களையுடைய பிரமன் செய்கின்ற வேள்வியை அழித்தற்கு வாராநின்ற வேகவதி யாகிய யாற்றைத் திருமால் தடுப்பதற்காக அவ்வாற்றி னிடையே கரையாகப் பள்ளிக்கொண்ட தன்மையைப் போலாக, மீன்களைத் தன்னிடங்கொண்ட பெரிய கால்வாய் களிலுள்ள நீரைத் தடுப்பதற்கு அதில் வீழ்ந்து உழக்கு கின்ற பால் சுரக்கும் மடியையுடைய கருநிற எருமைகளி ஞல் பெரிய நீர் மடைகள் உடைபட்டுப் போகும்.

(வி - ரை.) சிவபெருமான் வழிபாட்டால் திருமாலுடன் உலகைப் படைக்கக் கருதிப் பிரமதேவன் காஞ்சிநகரில் சென்று தன் பெயரால் சிவலிங்க உருவமைத்து நிறுவி, வழிபட்டுச்

1. நன்னூல்: ௧௬௪.

சோமவேள்வி செய்யத் தொடங்கினுர். வேள்வி செய்வது மனைக் கிழத்தியோடிருந்து செய்யவேண்டு மென்பது விதி. ஆகலான், சாவித்திரி, காயத்திரி என்னும் மனைவியரோடிருந்து வேள்வி செய்தனர். இதனையுணர்ந்த அவர் தம் முதன் மனைவி கலைமகள் தன்னையன்றி வேள்வி செய்தற்குச் சினங்கொண்டு அவ் வேள்வியை அழிக்க எண்ணி, யாற்றின் வடிவு கொண்டு பெருகிவந்தாள்; அதை நாரதமுனிவன் கண்டு பிரமனிடம் போய்க் கூறினுன். பிரமன் சிவபிரான்பால் சென்று வணங்கிக் குறையிரந்து முறையிட அவர் அஞ்சேல் எனக் கூறித் திருமாலை யழைத்து. 'நீபோய் அவ் வேள்வியைக் காப்பாயாக' என்று அருள, அத்திருமால் ஆற்றைத் தடுத்தற்காக அவ் ஆற்றின் நடுவிடத்தே பள்ளி கொண்டு தடை செய்தான் என்பது இப் புராணவரலாறு. ஆகவே, இவ் வரலாற்றை இங்கே உவமமாகக் காட்டிக் கூறினுர்.

இழிந்த ஒரு பொருளுக்கு இறப்ப உயர்ந்த ஒன்றை உவமங் கூறினுர், தலத்தின் பெருமை உலக மக்கட்குத் தெரிப்பான் கருதி எனக் கொள்க. (கூஎ)

பழங்கண் வேனிலைப் புயல்கொடு
பாற்றுதன் இறைக்குத்
தழங்கும் ஓதையின் மருதம்வாழ்த்
தெடுப்பது தகைய
வழங்கு தண்ணுமை ஓதையும்
மள்ளரார்ப் பொலியும்
முழங்கு தீம்புனற் சும்மையும்
முடுகிவிண் புகுமால்.

**(பொ - ரை.)** தனக்குத் துன்பத்தைத் தருகின்ற வேனிற்காலத்தை மேகத்தைக்கொண்டு ஓட்டுகின்ற தனக்குத் தலைவனுன இந்திரனுக்கு, ஒலிக்கின்ற ஒலி மிக்கதான மருதநிலம், வாழ்த்துதலை யொக்குமென்னும்படி, மருதநிலக் கிணைப்பறை யொலியும் மருதநில மாக்கள் ஒலிக்கும் பேராரவாரமும் நீர் செல்லும் பெரு முழக்கமும் ஒன்றுகலந்து விரைந்து வானுலகிற் செல்லும்.

(வி - ரை.) மருதநிலப் பாங்கில் தோன்றுகின்ற பல்வகை ஒலிகளையும் மருதநிலம் இந்திரனுக்கு வழிபாடாற்றுவதாகக் குறித்தார். பல்வகை ஒலிவேறுபாட்டை,

[1] 'உழவர் ஓதை மதகோதை உடைநீர் ஓதை தண்பதங்கொள்
விழவர் ஓதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி'

என்னும் கானல்வரிப் பாடலானும் அறிக. (௩அ)

பொறிகள் ஐந்தையும் புறஞ்செலா
நடக்கியோர் நெறிக்கே
குறிகொ ளும்படி செலுத்துபே
ராளர்தங் கோள்போற்
பிறிவு றும்பல மடைகளிற்
பிழைத்திடா தொதுக்கிச்
செறித ரும்புனல் முழுவதும்
அகன்பணை செறிப்பார்.

(பொ - ரை.) ஐம்பொறிகளின் வழியாகச் செல்கின்ற ஐம்புல ஆசைகளையும் புறம்பே செல்லாமல் அடக்கி ஒரு வழியே குறிக்கொண்டு செல்லச் செய்கின்ற, பெருமையுடையவர் கொள்கையைப்போல, பிரிந்துபோகும் பல நீர் மடைகளினின்றும் தவறாமல் அணைகட்டி ஒதுக்கி; நெருங்கிய நீர் முழுதும் இடம் விரிந்த மருதநிலத்தில் செல்ல விடுவார்கள்.

(வி - ரை.) பொறி-கண் காது மூக்கு நாக்கு உடல் என்பன. இவற்றின் இடத்தைக்கொண்டு ஒவ்வொன்றையும் உணரநிற்பன, புலன்கள். இதன்வழியே செல்கின்ற அவாவில் மக்கள் அவ்வவ் வயப்பட்டு களைகண் இன்றி அலமருவர். பல முகமாகச் சிதறியோடும் அறிவை ஒருமுகப்படுத்துவோனே - நல்ல நெறியில் செல்ல விடுவோனே சிறந்தவனுவான். எனவே, 'பொறிகள் ஐந்தையும்......பேராளர்தம் கோள்போல்' என்றார். இதனை,

[2] 'சுவையொளி ஊறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு.'

என வள்ளுவர் பெருமகனும்.

[3] 'மெய்வாய்கண் மூக்குச் செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை அவாவினைக்—கைவாய்க்

1. சிலப், எ : ௪. 2. திருக்குறள்: ௨எ. 3. நாலடியார்: ருக.

கலங்காமல் காத்துய்க்கும் ஆற்றல் உடையான்
விலங்காது வீடு பெறும்.'

என, சமண முனிவரும் கூறுவதானும், மேற்குறித்த திருக்குறளுக்குப் பரிமேலழகியார் வரைந்தஉரையானும் அறிக. இத்தன்மை யொப்ப உழவர் பல முகமாகப் பயனின்றி உறுதலைத் தன்றி உவர் மேடு காடுகளெல்லாம் செல்லும் நீரை வழிகோலி அணைதடுத்து விளைபுலத்துய்த்து நெல்லும் கரும்பும் வாழையும் தெங்கும் வகை தர விளைவிப்பர் என, உவமத்துக் கேற்பப் பொருள் கொள்க. (சா-க)

பழியி னீங்கிநன் கீட்டிய
பசும்பொருள் சிறிதும்
கழிப டாதுநல் வழிப்பயன்
படுவது கடுப்பக்
கொழிதி ரைச்சுவைப் பாலியின்
குளிர்புனல் முழுதும்
வழுவு றுதுகால் வழிச்சென்று
வளவயல் நிறைக்கும்.

(பொ-ரை.) குற்றங்களினின்று நீங்கி முறைப்படி ஈட்டிய அருமையான பொருள்கள்; சிறிதும் தீயவழிகளில் போகாது நல்லவழிகளில் பயன்பெறுதலைப்போல, ஒதுக்குகின்ற அலைகளையுடைய சுவையையுடைய பாலியாற்றினது, குளிர்ந்த நீர் எல்லாம், சிறிதும் வழுவாமல் வாய்க்கால் வழியேபோய் வளமிக்க வயல்களை நிறைவுபடுத்தும்.

(வி-ரை.) பழியாவது அழுக்காறு, அவா, வெகுளி, இன்னச்சொல் ஆகிய பாவங்கள். அறஞ்செய்வான் இவைகளை நீக்கிச் செய்தல் வேண்டும்; அதற்கு இத்தீய நெறியன்றி நன்னெறியிலீட்டிய பொருளாக இருத்தல்வேண்டும் என்பார், 'பழியினீங்கிநன் கீட்டிய பசும்பொருள்' என்றார். பிறரும்

[1] அறத்தின் ஈட்டிய ஒண்பொருள் அறவோன்
திறத்துவழிப் படூஉம் செய்கை போல'

என்பதால் அறிக.

1. மணிமேகலை:

இதையொப்ப, பாலியாற்றின் நன்னீர் பயனற்ற நிலத்திற் பாயாமல் பயன் தந்து தள்ளா விளையுள் தரும் வயல் நிலத்தில் பாய்தலால் 'வளவயல் நிறைக்கும்' என்றார். உடையதன் தொழில் உடைமைமேல் ஏற்றிக் கூறப்பட்டது. (எ0)

**கண்ண கன்புவி முழுதுமாங்**
**கடுங்கொலை அவுணன்**
**அண்ணல் மார்பகம் பிளப்பவர்**
**போலவிர் மணியின்**
**வண்ண வன்கடா நிரைநிரை**
**யாத்துவன் படையாற்**
**பண்ணை தோறுநின் றுழுநர்கம்**
**பலைகளே யெங்கும்.**

**(பொ - ரை.)** இடமகன்ற நிலவுலக முற்றும் கொடிய கொலைத்தொழிலைச் செய்த அசுரனது பெருமையமைந்த மார்பைக் கிழிப்பவர்போல, விளங்குகின்ற நீலமணி போன்ற கருநிறத்தையுடைய வலிய எருமைக் கடாக்களை நிரை நிரையாகப் பூட்டி, வலிமையான கலப்பையால் வயல்கள்தோறும் நின்று உழுகின்றவர்களின் பேரொலிகளே எங்குமுள்ளனவாம்.

**(வி - ரை.)** பேரூழிக் காலத்தின் மறுநாள் பிரமன் நீரை உண்டாக்கி உலகை மீண்டும் படைத்தனன். அப்போது மது கயிடவர் என்னும் இரு அவுணர் திருமால் காதுத் தொளையினின் றும் தோன்றினர். அவ் விருவரும் திருமாலோடு போர் தொடுத் தனர்; உடனே திருமால் அவ்விருவரின் மார்பைக் கிழித்துக் கொன்றனர்; அவர் தம் கொழுப்பு உலகமெங்கும் பரவிற்று. இவ்வரலாற்றை உட்கொண்டு, 'கொலைஅவுணன்......மார்பகம் பிளப்பவர்போல' என்றார். உழுநர் திருமாலாகவும் அவுணர் மார்பகம் பண்ணையாகவும் உவமங் கொள்க. (எக)

**மருவு சால்தொறும் வெருவிமுன்**
**குதித்தெழு வாளை**
**இரும ருப்பிடை உதைந்துழும்**
**எருமையைத் தடுக்கும்**

**பருவ ரார்குலம் ஒய்யெனப்**
**பாய்ந்தெழுந் தலைக்கும்**
**உருவ வாற்புறத் துதைந்துவல்**
**விரைந்தெழ உந்தும்**

**(பொ - ரை.)** *உழுங்கால் தோன்றுகின்ற உழுபடைச் சால்கள்தோறும் அச்சங்கொண்டு முன்னே துள்ளி யெழுந்த வாளைமீன்கள், உழுகின்ற எருமைக்கடாக்களை அதன் இருகொம்புகளின் இடையே உதைந்து அவை உழுதலினின்று நிற்க ஒருபால் தடைப்படுத்தும்; பெரிய வரால்மீன் கூட்டங்கள், விரைந்து பாய்ந்து மேலே எழுந்து அச்சத்தால் ஆட்டுகின்ற அவ்வெருமையின் உருவம் வாய்ந்த வாலின்புறத்தே உதைந்து (நின்ற அக்கடாக்களை) மிகவும் விரைவாகச் செல்லும்படி ஓட்டாநிற்கும்.*

**(வி - ரை.)** *எருமை, வாளை, வரால், இவை மருதநிலக் கருப்பொருள்கள். உழுது கொண்டு செல்கின்ற எருமைக்கடாக் களை வாளைமீன்கள் துள்ளி யெழுந்து கொம்பில் முட்டி அவை அஞ்சி நிற்கச் செய்யும் ஒருபால்; மற்றொருபால், அவ்வாறு அஞ்சி நின்ற அக்கடாக்களை வரால்மீன் துள்ளியெழுந்து அவற் றின் வாலில் முட்டி ஓட்டும் என்பது, மருதநிலத்தின் நீர்வளங் கூறியவாறும். சால் - உழுபடைச்சால். மருப்பு - கொம்பு. உருவம் - வடிவம். (எஉ)*

**பூண்ட வன்கொடுந் தானவன்**
**ஆக்கைபோழ்ந் திடலும்**
**காண்ட கும்புவி தன்னிறங்**
**காட்டிய தென்னக்**
**கீண்ட சால்தொறும் கேழ்கிளர்**
**தமனியங் கிடந்து**
**மாண்ட பேரொளி வயங்கிநீள்**
**கனையிருள் மேயும்.**

**(பொ - ரை.)** *யாவரும் காணத்தக்க நிலவுலகமாகிய வலிமை கொண்ட கொடிய அசுரனது உடலைக் கிழித்த*

லால், அது தன் பொன்னிறத்தைக் காட்டியதுபோல, கலப்பை கீண்ட படைச்சால்கள்தோறும் நிறம் விளங்குகின்ற பொன்கட்டிகள் கிடந்து சிறப்பமைந்த மிக்க ஒளியுடன் விளங்கிப்பரந்த மிக்க இருளினைப் போகச் செய்யும்.

(வி - ரை) போழ்தல் - பிளத்தல்; ஈண்டுக் கிண்டுதல். கேழ்-நிறம். தமனியம்-பொன். மாண்ட - மாண்புடைய; சிறந்த [1]'மனத்தது மாசாக மாண்டார்' என்பதில், சிறந்த என்னும் பொருள்தருதல் அறிக. (எ௩)

வேறு செய்துபின் பொருத்துறும்
வினைவல அமைச்சிற்
கூறு செய்தகண் சேறெலாங்
குழப்பியொன் ருக்கிச்
சாறு செய்துவா சவற்றொழு
துறுமிடர் தவிர்த்து
நாறு செய்கென வெண்முளை
வித்துவர் நாளால்.

(பொ - ரை.) பகைவர்க்குத் துணையானவர்களை முன் பிரித்துப் பின் ஒன்றுபடுத்துகின்ற தொழிலில் வல்ல நல்லமைச்சரைப்போல, முன்பு வேறுக்கிய குளிர்ச்சி வாய்ந்த சேற்றையெல்லாம் குழப்பி ஒன்றுபடுத்தி, வருகின்ற இடையூறுகளையெல்லாம் நீக்கி நாற்றினை வளமுறச் செய்வாயென்று மருதநிலத்துக்குரிய திருவிழா நடத்தி, இந்திரனை வழிபட்டு (நல்ல முழுத்த நாளில்) வெண்ணிற நெல் முளைகளை விதைப்பார்கள்.

(வி - ரை.) போர் மூண்ட காலத்துப் பகை வேந்தர்க்குத் துணையாயினுரை, முன்னர்ப் பிரித்தும் தம்மிற் பிரிந்து மனம் வேறுபட்டிருப்பவரைத் தம்முடன் சேர்த்தும் கொள்ளுதல் நல்லமைச்சரின் மதிநலம் ஆகும். ஆகவே, அதைப்போல உழுது சேருக்கிப் பின்னர்க் குழப்பி ஒன்ருக்கித் தொளி செய்தாரெனக் கொள்க. அமைச்சர் கடனை,

1. திருக்குறள்: உ௭அ

"[1] பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு"
"[2] வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோடு
ஐந்துடன் மாண்ட தமைச்சு"

என வரும் தேவர் திருமறையான் அறிக.

இதனால் மருதநிலக் கடவுளை வாழ்த்தலும், சேறுசெய்து நிலத்தைப் பண்படுத்தி விதைவிதைத்து நாற்றுப்பாவுதலும் கூறப்பட்டன.

இன்: ஐந்தனுருபு; ஒப்புப் பொருளில் வந்தது. கூறுசெய் தல்-வேறுபடுத்தல். சாறு-திருவிழா. வாசவன்-இந்திரன். நாறு-நெல்விதை முளைகளைப் பரப்பி உண்டாகும் பயிர்கள். (எச)

அருள்வி ளங்கலும் உடல்பொருள்
ஆதிய பந்தம்
தரும வன்புடை யெய்துறக்
கொடுத்திடுந் தகைபோற்
பெருக யாத்தநீர்க் கலங்கல்போய்த்
தெளிந்தபின் முழுதும்
மருவு கால்வழி வடிந்துறக்
கவிழ்ப்பர்கள் மள்ளர்.

(பொ-ரை.) திருவருள் ஞானம் மேமேலோங்க உடல் பொருள் மனைவி மக்களின் மேலுள்ள பந்தங்களைத் தமக் குத் தந்தருளிய அச் சிவபெருமானிடத்தே சேர எல்லா உயிர்களும் கொடுக்கும் தன்மையைப்போல, மருதநில மாக்கள் வயல்களின் நிறையக் கட்டிய நீரின் கலங்கல் நீர் கழிந்து தெளிவுற்றபின் அந் நீர் முழுமையும் (முன்பு தந்த) பொருந்திய அக் கால்வாய் வழியாகவே கவிழ்த்துச் செல்ல விடுவார்கள்.

(வி-ரை.) மருதநில வினைஞரான மள்ளரை சகலான்மா வாகவும் கால்வாயைச் சிவபெருமானாகவும் கால்வாயில் தரப் பட்ட நீரினை உடல்பொருள் முதலிய கட்டாகவும் தெளிந்தநீரினை

1. 2. திருக்குறள்: சுகூகூ; சுகூஉ.

அருள் விளக்கமாகவும் மீட்டும் வந்த கால்வாய் வழியாக நீரை வடித்தலை சிவபிரானால் தரப்பட்ட உடல் முதலிய கட்டுக்களை அவன்பால் மீட்டுங் கொடுத்தலாகவும் உவமமாகக் கொண்டு உபமேயத்தை நுனித்தறிக. இது இவ்வாறு எடுத்து விளக்குதலால் எடுத்துக்காட்டு உவமை. (எகு)

**இளமகப் பசிதனக் கேந்து கொங்கைப்பால்**
**அளவறிந் தூட்டுதாய் மான ஆறறி**
**களமர்கள் முளைப்புனல் செவ்வி கண்டுநீள்**
**வளவயல் பாய்ந்தித்தம் மகவின் ஓம்புவார்.**

**(பொ - ரை.)** இளமைமிக்க குழந்தையின் பசிக்கு உயர்ந்த தன் கொங்கையின் பாலினை அக் குழந்தை உண்ணும் அளவறிந்து ஊட்டுகின்ற தாயை ஒப்ப, உழவின் ஆறுவகைப்பட்ட தொழிலையறிந்த மள்ளர்கள் நெல்லின் முளைத்த இளம் பயிர்களுக்கு, நீர் பாய்ச்சும் பருவத்தை அறிந்து நீண்ட வளமை பொருந்திய வயலில் நீரைப் பாய்ச்சித் தம் மகவைப்போல அப் பயிர்களைப் பாதுகாத்து வருவர்.

**(வி - ரை.)** அறுவகைத் தொழில்களாவன : வைக்கோல் போர் திரட்டி வைத்தல், மாடுகளைப் பாதுகாத்தல், நிலத்தை வெட்டி ஒழுங்கு செய்து பண்படுத்துதல், உரம்வைத்தல், உழுதல், களைகட்டு நீர்தேக்கிப் பயிரைப் பாதுகாத்தல் என்பன. இவை யிற்றை வள்ளுவப் பெருந்தகையார் தம் அறத்தில்,

[1]'ஏரினும் நன்றால் எருஇடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு'

எனக் கூறுதலானும் அறியலாம்.

இளஞ்சிறார் பசி கண்டு மனமுவந்து பாலூட்டுவது தாய்மைப் பேரன்பு. அத் தாய்மைத் தன்மையையே மருதநிலமாக்கள் செவ்விபார்த்துப் பயிர்களை வளர்த்துப் பாதுகாத்தற்கு உவமங் கூறினர். தாயின் அளவற்ற அன்பை வியந்து தம்மை ஆட்கொண்டருளிய இறைவன் பேரருட்டிறத்திற்கு,

1. திருக்குறள் : ௧0௩௮.

[1]'பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியேனுடைய
ஊனினை உருக்கி'

என்றருளினர் மணிமொழிப் பெருமான். பரஞ்சோதியார் மதுரை மாநகரத்தைச் சூழ்ந்த மருதவளத்தைக் கூறுங்கால், பயிர்களைப் பாதுகாத்து நெல்விளைவித்த திறத்தை.

[2]'வன்புறு கருங்கால் மள்ளர் வைகலும் செவ்வி நோக்கி
நன்புல முயன்று காக்க விளைந்தன நறுந்தண் சாலி'

என்பதும் இக் கருத்துக்கேற்ற பெற்றியாக அமைந்திருத்தலை யறிக. கம்பநாடரும் கோசல நாட்டை வளப்படுத்தும் சரயு ஆற்றின் தன்மையை இத் தாய்ப்பாலாகவே கொண்டு உவமங் கூறுவதும் அறியத்தக்கதாம். அஃது,

[3]'சரயு வென்பது தாய்முலை அன்னதிவ்
உரவு நீர்நிலத் தோங்கும் உயிர்க்கெலாம்'

என்பது. ஆறு என்னும் தொகைக் குறிப்பு, உழவுத் தொழில் ஆறையும் குறித்தது. (எசு)

**ஓரிடத் துயிர்த்ததன் பறழை ஓம்புவான்**
**பாரிடைப் பல்வயின் உய்க்கும் பூஞைபோற்**
**காருடற் களமர்கைந் நாறு வாரிப்போய்ச்**
**சீருடைப் பணைதொறும் நடுதல் செய்வரால்.**

(பொ-ரை.) ஓரிடத்தே ஈன்ற தன் குட்டிகளைக் காப்பாற்றுதற்கு நிலவுலகில் பல இடத்துக் கௌவிக் கொண்டுபோய்ச் சேர்க்கும் பூனையைப் போலாக, கரியவுடலை யுடைய பள்ளர்கள், தம் கையொடு பறித்த நாற்று முடிகளை வாரிக்கொண்டுசென்று சிறப்புமிக்க வயல்கள் தோறும் நடுவார்கள்.

(வி-ரை.) பூனை தன் குட்டிகளை ஏனைய விலங்குகளைப் போல ஈன்ற இடத்திலேயே கிடத்துவதில்லை. தன் வாயால் கௌவிக்கொண்டுசென்று பற்பலஇடங்களில் போகட்டுப்பாது

1. திருவாசகம்,பிடித்த: கூ. 2. திருவிளை, திருநாட்டு: உ௫.
3. கம்பரா, பால, ஆற்றுப் படலம்: கஉ.

காக்கும்; அதுபோல மருதநில மாக்கள், செவ்விபெற வளர்ந்த நெல் நாற்றைப் பறித்து முடிகளாகக் கட்டி நுண்தொளி செய்த வயல்களில் பரக்க எறிந்து, முடியைக் களைந்து நாறுகளை நடுவார்கள். மள்ளர் எனப் பொதுவாகக் கூறினுரேனும் இங்கே ஆடவரையன்றிப் பெண்பாலையே குறித்து நின்ற பொதுச்சொல்லாகக் கொள்க. தற்காலம் பெண்களே முடிநாறழுத்தி நாவாற் குலவை யொலி செய்து கழனி வாழ்கென, மருதப்பாடல் பாடுவாராகலான் என்க. (எள)

மரகதந் தளிர்த்தென வளர்பைங் கூழ்செறி
தரநிறை கழனியுட் சங்கம் ஊர்வன
பரவைநீர் மேய்ந்தெழும் படலைக் கொண்டலுட்
சரமதி நுழைந்துசெல் காட்சி சாலுமால்.

**(பொ-ரை.)** மரகதமணியே உருக்கொண்டு தழைத்தாலொப்ப வளருகின்ற பச்சைநிறப் பயிர்கள், நெருங்கி நிறைந்த வயல்களில் சங்குகள் தவழ்ந்து ஓடுகின்ற காட்சி, கடல்நீரை மொண்டுகொண்டெழுந்த திரண்ட சூல் கொண்ட மேகத்தின் உள்ளே கார்காலத்துச் சந்திரன் நுழைந்து செல்லும் காட்சியை யொத்திருக்கும்,

(வி - ரை.) நட்ட நாறுகள், காலூன்றி நடுகை திரும்பிப் பச்சைப்பசேல் என வளர்ந்து வருகின்ற தன்மைக்கு மரகதமே தழைத்து வளர்வதாக அரிய உவமங் கூறினுர். வயல்களில் சங்கினம் தவழ்ந்து ஓடுதலை மேகத்தூடு செல்லும் வெண்மதி நிலவின் தன்மைக்கு ஒப்பிட்டுரைத்தார்,

இவை பண்பும் தொழிலும் பற்றிய உவமையணியாகக் கொள்க. (எஅ)

களமர்கள் களைகளை பருவங் காட்டலும்
இளமயில் வயல்வளங் காண எய்தியாங்
குளமகிழ் கூர்தர உழத்தி மாரெலாம்
வளமலி பணைதொறும் வந்து முற்றுவார்.

**(பொ - ரை.)** பயிர்களானவை தமக்குக் களையைக் களைகின்ற பருவங்காட்டலும் இளமை பொருந்திய மயில்கள் வயலின் வளத்தைக் காண்பதற்கு வந்து சேர்ந்த

—8

தன்மையைப்போல, மருதநிலப் பெண்கள் யாவரும் மன மகிழ்ச்சி கொண்டு வளப்பமிக்க வயல்கள்தோறும் பள்ளர் களுடன் வந்து சூழ்வார்கள்.

(வி - ரை.) களமர்கள் என்பதில் உடனிகழ்ச்சிப் பொருள் தரும் மூன்றன் ஒடு உருபு, செய்யுள் விகாரத்தால் தொக்கது கூட்டிப் பொருள் கூறப்பட்டது. பெண்களின் சாயலால், 'இள மயில் எய்தியாங்கு' என்றார். ஆங்கு: உவம உருபு. (எகூ)

அம்புயம் உற்பலம் ஆம்பல் ஆதியாம்
பைம்புதற் களையறப் பறித்த தம்முருக்
கொன்புனல் தோன்றலும் கொய்த புன்களை
பின்பினும் முளைப்பதென் பெயர்த்தென் பார்சிலர்

(பொ - ரை.) தாமரை கருங்குவளை அல்லி முதலிய பசிய புதல்களாகிய களைகளற்றுப் போகப் பறித்த பெருமை மிகுந்த நீரில் கடைசியர்தம் உறுப்புக்கள் தோன்றுதலால் தாம் கொய்த புன்மையுள்ள களைகள் பின்னும் பின்னும் மீள முளைப்பது என்ன காரணமோ என்று அவருட் சிலர் கூறுவார்.

(வி - ரை.) பெண்களின் உறுப்புக்கட்கு மலர்களையே உவமங் கூறுவது ஆன்றோர் மரபு அஃது இயற்கைப் பண்பு மாகும். அம்புயம், உற்பலம், ஆம்பல் என்பன அவற்றின் மலர் கட்கு ஆதலால் முதலாகு பெயர் பெண்கள் தம் முகமும் கண் ணும் வாயும் ஆங்கே களைகட்டபின் நீரில் நிழலுருவமாகத் தோன்றுதலை அவ்வாறு மலர்களாகக் கருதியமையால் மயக்கவணி. இவ்வாறே கம்பர் தம் மாப்பெருங் காப்பியத்தில்,

[1]'பண்கள்வாய் மிழற்றும் இன்சொற் கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகால் முகம்வாய் ஒக்கும் களையலாற் களையி லாமை
உண்கள்வார் கருங்கால் மள்ளர் களைகலா துலாவி நிற்பார்'

என்பது காண்க. (அ0)

பங்கயம் ஆம்பலுற் பலத்தில் தேனுண்டு
தங்கிய வண்டினந் தமது வாள்முகம்

1. கம்பரா. பால. நாட்டு : க0

**செங்கனி வாய்விழி சேர்ந்து மூசுற**
**அங்கவை கட்டெறிந் தகற்று வார்சிலர்.**

**(பொ - ரை.)** *தாமரை ஆம்பல் கருங்குவளை மலர்களின் தேனையுண்டு தங்கிய வண்டினங்கள், கடைசியரின் ஒளி பொருந்திய முகத்திலும் சிவந்த கனிபோன்ற வாயிலும் கண்களிலும் கூடி மொய்த்தலினால், அவ்விடத்திலுள்ள அவைகளைப் பற்றிப்பிடித்து விட்டெறிந்து சிலர் அப்புறப்படுத்துவர்.*

(வி - ரை ) *வண்டுகள் கள்ளுண்ட மயக்கத்தாலும், பெண்களின் உறுப்புகட்கும் மலர்கட்கும் வேற்றுமை தெரியாது கடையியர் தம் முகத்தில் மொய்த்தல் கண்டு அவைகளைத் தம் கைகளால் பிடித்து விட்டெறிந்து அப்புறப்படுத்தினர் என்க.* இதுவும் மயக்கவணி. *(௮௧)*

**பாயிதழ்த் தாமரை பறித்தங் கொப்புமை**
**ஆயுநர் எனமுகம் சேர்த்தி ஐதுதேன்**
**வாய்மடுத் திணையில தென்று மாற்றல்போல்**
**மீயுயர் கரைப்புறம் வீசு வார்சிலர்.**

**(பொ - ரை.)** *பரந்த இதழ்களையுடைய தாமரைப் பூக்களைப் பறித்தெடுத்து, அவ்விடத்துத் தம் முகங்களோடு அவை ஒத்திருக்கின்றனவா? என ஆய்வு செய்வார் போல, தம் முகங்களோடு சேர்த்து, அவற்றிலுள்ள நல்ல தேனையுண்டு, தம் முகத்தோடு இவை ஒத்தனவாக இல்லையென்றறிந்து எறிதலைப் போல, மேலே உயர்ந்துள்ள வரப்பின் மேலே சில பெண்கள் வீசியெறிவார்கள்.*

**(வி - ரை)** *பாய்-பரந்த. ஆயுநர்-ஆராய்வார்:* **குறிப்பு** *வினைப் பெயர். அது-சிறப்புடையது என்னும் பொருட்டு. பெண்கள் தாமரைமலர்களைத் தம் முகத்தோடு பொருத்திப் பார்த்து அவை தம் முகத்துக்கு ஒப்பாக இல்லாததால் அவைகளை வீசியெறிந்தாரென்க.* *(௮௨)*

**இணைவிழிக் கிணையிலை யென்ப தண்மையில்**
**நணுகிநீ காணென அழைத்துக் காட்டல்போல்**

**பிணையுநா சியினெதிர் பிடித்து மோந்துதேன்**
**தணிவிலுற் பலமுடி சார்த்து வார்சிலர்.**

**(பொ - ரை.)** தம் இரண்டு கண்களுக்கும் நீ ஒப்பாதல் இல்லை யென்பதை நீ பக்கத்தில் வந்து காண்பாயாகவென்று அழைத்துக் காட்டுவதை யொப்ப, தம்முன் இணைந்த மூக்குக் கெதிரே பார்த்துக் கொணர்ந்து மோந்து, தேன் நீங்காத கருங்குவளைமலர்களைத் தம் முடியிற் (சிறைப் படுத்தல் போல்) சில பெண்கள் சூடுவார்கள.

**(வி - ரை.)** கருங்குவளை மலர்களைப் பறிக்கும்சில பெண்கள், நீ எம் கண்களுக்கு ஒப்பாகா யென்பதை நீயே வந்துகாண் என அழைத்துக் காட்டுவது போலத் தம் மூக்கிற்கு நேரில் பிடித்துக் காட்டி, அவை ஒப்பாகா நிலையுணர்ந்து, முன்னர் ஒப்பென்றுகூறி வாதிட்ட அம் மலர்களின் குற்றத்துக்குத் தண்டனை கொடுப்பார் போன்று; அவைகளைத் தம் முடிமேற் செருகி யணிவார்கள். தம் முடிச்சார்த்துவார் என்பதில், அவை ஒப்பாகாமைக் கேற்ற அவாய் நிலைச் சொற்களாக நிற்றலால் அதற்கேற்றவாறு (சிறைப் படுத்தல் போல்) என்னும் குறிப்புச் சொற்கள் வருவித்துப் பொருளுரைக்கப் பட்டது. [1]இக்கருத்து,

> " காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
> மாணிழை கண்ணொவ்வேம் என்று'

என்னும் வள்ளுவர் படைத்த தலைமகன் கூற்றாக அமைந்திருத்த லறிக. (அரு)

**சைவலங் களைகுவான் குனியத் தாழ்குழல்**
**எய்தியெம் இனத்தினை ஒறேன்மின் என்பபோல்**
**கைமிசை விழுந்துசிக் குண்ணக் கால்நிமிர்த்**
**தையபூங் குழல்முடித் தணைகின் றார்சிலர்.**

**(பொ - ரை.)** வயற்கண் படர்ந்துள்ள கொடிப்பாசி யைக் களைவதற்குக் குனிய, தாழ்ந்த கூந்தல் உடனே தொங்கி எமக்கு இனமாகவுள்ள இப் பாசித்திரள்களைக் களையாதொழிக வென்று கூறுதல்போல, தம் கைகளின் மீது அவிழ்ந்து விழுந்து சிக்குப்பெற, சேற்றில் புதைந் துள்ள தம் கால்களை யெடுத்து, அழகிய மலர்சூடிய கூந்தலை

1. திருக்குறள் : ககக௪.

வாரி முடித்துச் சில பெண்கள் வரப்பின்மேல் ஏறி வெளி வருவார்கள்.

(வி - ரை.) சைவலம்-கொடிப்பாசித்திரள். திரட்சியாக வுள்ள மங்கையர் கூந்தலுக்கு உவமைப் பொருள். ஒத்த பண்பால் இனமாவது, களையெடுப்பார், பாசியையும் களையும்போது கூந்தல் தற்செயலாக அவிழ, அவற்றைத் தம் இனத்தைக் களை தல் வேண்டா என்று வேண்டுவதுபோலத் தற்குறிப் பேற்றம் தோன்றக் கூறினர். (அச)

நறுமலர்ப் பங்கயங் களைய நாரியர்
கறுவொடு முள்ளரைக் காம்பு பற்றலும்
தெறுகரங் கிழியப்புண் செய்யு மேதமக்
கிறுதிசெய் வார்க்கெவர் இடரி ழைத்திடார்.

(பொ - ரை.) அந் நிலப்பெண்கள் நறுமணங் கமழு கின்ற தாமரைப் பூக்களைக் கிள்ள, சினத்தோடு முள்ளினை யுடைய தூற்றையுடைய, அத் தாமரையின் காம்பைக் கையாற் பிடிக்க, தம்மை வருந்தச் செய்கின்ற அவர் கைகள் புண்படும்படி, அத் தாமரைகள் குத்தும். தமக்குத் துன்பஞ் செய்வோர்க்குத் துன்பஞ் செய்யாதவர் உலகில் எவருள்ளனர்?

(வி - ரை.) நல்ல தாமரைகளை மருதநில மகளிர் களைய, அதிலுள்ள முட்கள் கையில் தைப்பதைத் துன்பஞ்செய்வோர்க்கு உலகில் செய்யப்பட்டோர், தாம் மறுதுன்பம் செய்யாதிரார் என் பதைக் குறித்தலால், வேற்றுப் பொருள்வைப்பணி. (அரு)

அலமரு விழியினம் ஆமெ னுமுக
மலர்மிசைப் பாய்தரு கயலு மாண்டதன்
குலமெனப் புறவடி கூடுங் கூர்மமும்
இலவிதழ்க் கடைசியர் எளிதிற் கைக்கொள்வார்.

(பொ - ரை.) முள்முருக்கமலர் போலும் சிவந்த இதழ்களையுடைய மருதநிலத்துப் பெண்கள், சுழல்கின்ற தம் கண்களைத் தமக்கு இனமான மீன்களென்று எண்ணி, முகமாகிய தாமரைமலரின்மேல் துள்ளிப் பாய்கின்ற

கெண்டை மீன்களையும், தாம் குலமெனக் கருதி அவர்தம் புறவடிகளை வந்து சேருகின்ற ஆமைகளையும் எளிமையாகக் கைப்பற்றிப் பிடிப்பார்கள்.

(வி - ரை.) அலமருதல்-சுழலல்; 'அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி' என்பது தொல்காப்பியம். விழி: எழுவாய். முகமலர்: இருபெயரொட்டுப் பண்புத்தொகை. புறவடி-அடியின் மேற்புறம். இலவு-முள்முருக்கு: மலருக்கு ஆகுபெயர். கடைசியர்-மருதநில மகளிர். (அசு)

பறிதரக் களைந்தெறி பாவை மாரையம்
மறிபுனற் குவளைகால் வளைத்துப் பாம்பெனப்
பொறிவெரு வுறச்செயும் புடைப்பின் மொய்ம்பிலாச்
சிறியருந் தம்மினுந் தீங்கி ழைப்பரே.

(பொ - ரை.) பறியும்படி களைந்தெறிகின்ற பாவையை யொத்த கடைசியர்களின், அந்த மடங்கி வருகின்ற நீரிலுள்ள குவளைகள் கால்களை வளைத்துப் பாம்பென்று அவர்கள் பொறிகலங்கும்படி அஞ்சச்செய்யாநிற்கும். உலகில் ஒருவன் அடித்தானாயின், திரும்ப அடிப்பதற்கு வலியற்றவர்களும் தம்மால் இயன்ற தீங்கைச் செய்வார்கள் (என்பதைக் காட்டா நிற்கும்.)

(வி - ரை.) களைபறிக்கின்ற கடைசியர்களின் கால்களைக் குவளைக்கொடிகள் சுற்றிக்கொள்ளும் தன்மை, வலியுள்ள ஒருவன் வலிமையற்றவனுக்குக் கேடுசெய்வானாயின், வலிமையற்றவனும் நம்மால் என்ன செய்ய இயலும் என்று இராது தன்னால் இயன்ற கெடுதலைச் செய்வான் என்றதைக் காட்டாநிற்கும் என, இவற்றில் உலகியல் முறையைக் கூறினர். (அஎ)

களிபடு சுரும்புளர் கமலக் கஞ்சமும்
நளிபடு குவளையும் நனைகொள் ஆம்பலும்
தளிரியற் கடைசியர் முழுதுஞ் சாடுவார்
அளிமரு வலர்க்கெவர் அன்பு செய்குவார்.

(பொ - ரை.) கள்ளுண்டு களிகொள்கின்ற வண்டுகள் சுழன்றோடித் திரிதற்கிடனான தாமரைமலர்களும், பெருமை

மிக்க குவளைமலர்களும், தேன்பொருந்திய ஆம்பல் மலர்களுமாகிய இவற்றை மாந்தளிர் போன்ற இயற்கையை யுடைய அக் கடைசியர், (தம் கைகளால்) களைந்தெறி வார்கள், பகைவர்கட்கு அன்பு செய்வோர் யாவர்? ஒருவரு மில்லையன்றோ?

(வி - ரை.) அளிமருவு அலர்-வண்டுகள் பொருந்திய மலர் என்றும், மருவுஅலர்-பொருந்துதல் இல்லாதவர், அஃதாவது தம்மோடு சார்பில்லாதவர், பகைவர் என்றும் இருபொருள் நயம் காண்க. சாடுதல்-முழுதும் அழித்தல். 'ஆடுகொடிப்படை சாடி' என்றதில் இப் பொருள் தருதலறிக. அளி-வண்டு; அன்பு. எவர் அன்பு செய்குவார் என்னும் வினா செய்யாரென்னும் எதிர்மறைக் குறிப்பாக வந்தது. (அஅ)

**புரைதபு பசும்பயிர்ப் பொலிவுங் கங்கெலாம்**
**நிரைநிரை கிடந்தபல் நிறத்த பூக்களும்**
**வரைதவழ் முகில்களும் வான விற்களும்**
**தரையிடைப் பயன்பெறச் சார்ந்த தொக்குமால்.**

**(பொ - ரை.)** குற்றமற்ற பச்சைநிறப் பயிர்களின் தோற்றமும், வயல்களின் வரப்புப்பக்கம் எங்கணும், வரிசைவரிசையாகக் கிடக்கின்ற பல நிறத்த பூக்களும், மலையில் தோன்றுகின்ற மேகங்களும் அதில் தோன்றும் இந்திரவில்லும் உலகில் பயன்பெற வந்திருக்கும் தன்மையை ஒத்திருக்கும்.

(வி - ரை.) வெண்ணிற மலர், நீலநிறமலர் செந்நிற மலர்கள் இவைகள் பூத்து நிற்றல் வானவில்லைப்போல் இருந்த தென்க. பயிர்கள் மேகத்தை யொத்திருந்தன என்று கொள்க. ஆல்: அசைநிலை. (அகூ)

**இருள்முகில் உறழ்பயி ரிடையெ லாந்தடித்**
**துருகெழ வயங்கியாங் குலவு மந்நலார்**
**திருமலர்ப் பதமெல்லப் பெயர்த்துத் தேங்குழற்**
**கருஞ்சிமி ழூர்த்தெழக் கரையி லேறுவார்.**

**(பொ - ரை.)** கரிய நிற மேகத்தை யொத்த பசிய பயிரினிட மெங்கும், மின்னலைப் போன்ற தம் வடிவு

தோன்ற விளங்கி அங்கே உலாவுகின்ற மருதநில மகளிர், அழகிய தாமரைமலர்போன்ற தம் கால்களைச் சேற்றினின்றும் மெல்லப் பெயர்த்தெடுத்து தேனொழுகுகின்ற கூந்தலிலிருந்து கருநிற வண்டுகள் ஒலித்துக்கொண்டு மேலே பறந்தெழ வரப்பில் ஏறுவார்கள்.

(வி - ரை.) இருள் முகில்-இருள்போன்ற நீர் கொண்டெழுந்த கரிய மேகம். உறழ்: உவமவுருபு. தடித்து-மின்னல். பயிர்களையும் மலர்களையும் முறையே, மேகமும் இந்திரவில்லும் என்று உவமங் கூறியதற் கேற்ப, மருதநிலப் பெண்களை அவர் தம் வடிவுபற்றி மின்னலாகக் குறித்தார். இது, தற்குறிப்பணி. (கூ0)

தெறுங்களை கட்டநீர்ச் செறுவிற் பண்டுபோல்
நறுங்களம் போருகச் சேக்கை நாடிவந்
துறுங்களி யோதிம முயங்கி வாடுவ
வறுங்கள நாடியுள் மறுகு மாந்தர்போல்

(பொ - ரை.) பயிர்களுக்கு இடையூறு செய்கின்ற களைகளைப் பறித்தெறிந்த நீரினையுடைய வயலில் களிப்புள்ள அன்னப்பறவைகள் முன்போலத் தாமிருக்கின்ற நறுமணங் கமழுகின்ற தேனையுடைய தாமரைகளாகிய படுக்கைகளைத் தேடிவந்து அவைகள் இல்லாததால், தலைவி அல்லகுறிப்பட்டமை கண்டு அவள் நிற்றல் நீங்கிய இடத்தைத் தேடிவந்து காணாது மனம் மறுகுகின்ற தலைவர்களைப்போல, மனம் மாழ்கி வாடாநின்றன.

(வி - ரை.) களவுப் புணர்ச்சியில் இன்பந்துய்க்கும் காதலர்களாகிய தலைவன், தலைவியர்கள் இரவுக்குறி யிடையீடுபட்டு அல்ல குறிகண்டு வருந்தி நிற்கும் தலைவர்களை யொப்ப அன்னப் பறவைகள் தம் சேக்கையாகிய தாமரைமலரை வயற்கண் இருக்குமெனத் தேடிவந்து, கடைசியரால் களையாகப் பறிக்கப் பட்டு வெற்றிடமா இருப்பதறிந்து வருத்தமுற்றன என்பதால் இயற்கை நவிற்சியணி. (கக)

கொள்ளைபோய் நனிவறங் கூர்ந்த காலையும்
வள்ளியோர் விருந்தினர் வாடக் காண்பரோ
கள்ளரு மலர்வளம் இழந்துங் கார்வயல்
வெள்ளன மகிழமீன் விருந்து நல்குமால்.

(பொ - ரை.) கொடையிற் சிறந்தோர், தம் பொருள் யாவும் வறியர்களுக்கே கொடுத்து மிக வறுமையடைந்த காலத்திலும் தம்மிடத்து வந்த விருந்தினர், பசியால் மெலிவடையப் பார்த்திருப்பார்களோ? இரார்; அதுபோல, தேனறுத தாமரை முதலிய மலர்க்கூட்டங்களை இழந்திருந்தபோதும் நீரையுடைய வயலானது வெண்ணிற அன்னப் பறவைகள் மகிழ்ச்சிகொள்ள மீன்களை விருந்தாகக் கொடுக்கும்.

(வி - ரை.) நல்லோர் வறுமையுற்ற காலத்தும் வந்த விருந்தினர்க்கு ஊட்டுவதுபோல, வயல்கள் தேனறுத மலர்களை இழந்திருந்தாலும் தம்மை நாடிவருகின்ற அன்னப் பறவைகளுக்குத் தம்மிடமுள்ள மீன்களை நல்குமென்றது, வயலின் வளங்கூறிய வாறும். ஆல் : அசை. (௬௨)

மண்ணக மகளிர்கை வண்மை கண்டயாம்
விண்ணக மகளிர்கை மேன்மை காண்டுமென்
றெண்ணிமேற் சேறலுற் றென்ன வான்பயிர்
கண்ணிறை கவின்செழித் தோங்குங் காட்சித்தே.

(பொ - ரை.) சிறந்த பயிர்கள், இம் மண்ணுலகிலுள்ள மங்கையர் கையினது மேன்மையைத் தெரிந்த நாம் வானுலக மங்கையர்களின் கையின் வளத்தைக் காண்போமெனக் கருதி, மேலே செல்வதுபோல, கண்ணிறைந்த தம் அழகினால் விளங்குங் காட்சியுடையது.

(வி - ரை.) வானுற வளர்கின்ற நெற்பயிர்கள் வானுலக மங்கையர் கைத்திறத்தைக் காணச் சென்றது போலிருப்பதாகக் குறித்தார். (௬௩)

தரவுகொச்சகக்கலிப்பா

ஈன்றெடுத்தோர் குணமகவுக் கியையுமுறைப் படிவித்தில்
தோன்றுமுளை முன்விளர்த்துப் பின்பசந்த தொடர்பினால்
ஆன்றசெழுங் கதிர்களுமுன் தூவெள்ளை யாயெழுந்து
மான்றுமர கதமேனி வாய்த்துமடல் கிழித்தெழுமால்.

(பொ - ரை.) பெற்றெடுத்த தாய் தந்தையர் குணம் அவர்தம் பிள்ளைகளுக்கும் பொருந்துகின்ற முறைப்படி விதையிலிருந்து உண்டாகிய முளைகள் முதலில் வெளுத்துப் பின் பச்சைநிறமாக உண்டாகும் தொடர்ச்சியினாலே அமைந்த செழித்த நெற்கதிர்களும் முதலில் குற்றமற்ற வெண்ணிறமாய்த் தோன்றிப் பின்பு பெருமைகொண்டு மரகதம்போல மேனி பசுமைநிறங்கொண்டு மடலைக் கிழித்துத் தோன்றும்.

(வி - ரை.) வெண்ணிற முளையாகத் தோன்றிப் பின், பசுமைநிறமாகப் பயிர்கள் மாறுவதைப்போல, அதில் தோன்றிய கதிர்களும் முதலில் வெண்ணிறமாகத் தோன்றிப் பசுமை நிறமாக மாறுவது, பெற்றோர் குணம் அவர்தம் பிள்ளைகளிடையே விளங்கித் தோன்றும் தன்மையைக் காட்டுவதை யொத்ததாக உளது என, இயற்கைத்தன்மையை இயற்கைப் பொருளுடன் பொருத்திக் காட்டினார். (கச)

அரமகளி ரங்கைவளம் அறிபாக்கு
மேற்போந்து
திரையெறிநீர்க் கடல்வரைப்பில் தெரிவையர்கைக்
கிணையொவ்வா
மரபுணர்ந்து மீண்டென்ன வானோக்கிக்
கதிர்த்தெழுந்த
பரவுபுனல் தடஞ்சாலி பார்நோக்கி

(பொ - ரை.) தெய்வ உலகத்துப் பெண்களின் அழகிய கையின் தன்மையை உணர்வதற்கு மேலெழுந்து அலைகள் மோதுகின்ற நீரையுடைய கடல் சூழ்ந்த இந்நில வுலகிலுள்ள பெண்களின் கைகட்கு ஒப்பாகாத தன்மையை யறிந்து திரும்பியதை யொப்ப, வானுலகத்தை நோக்கிக் கதிர்பறிந்து மேலெழுந்தோங்கிய பரந்த நீரிலுண்டாகிய பெருத்த நெல்லின் பயிர்கள் இம் மண்ணுலகை நோக்கி வளைந்து சாய்ந்து நிற்கும்.

(வி - ரை.) பிரிந்து மேல்நோக்கி நின்ற நெற்கதிர்கள், பால்பிடித்தபின் தலைவணங்கி நிற்றலை, அரம்பையர் கைகள் மண்ணுலக மங்கையர் கைகட்கு ஒப்பாகாமையறிந்து திரும்பியதாகத் தற்குறிப்பு அணி தோன்றக் கூறினார். தலைவணங்கி நின்ற காட்சியைச் சிந்தாமணி ஆசிரியரும், திருவிளையாடற் புராண ஆசிரியரும் குறிப்பது நற்கருத்துடன் அருமைசான்ற பொருளுமுடையதாக இருத்தலின் சுவைத்து மகிழத் தருவாம்:

[1]'சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே'

எனச் சிந்தாமணியும்,

[2]" புரையற உணர்ந்தோர் நூலின் பொருளினுள் அடங்கி அன்னோர்
வரையறை கருத்து மான வளர்கருப் புறம்பு தோன்றிக்
கரையமை கல்வி சாலாக் கவிஞர்போல் இறுமாந் தந்நூல்
உரையென விரிந்து கற்பின் மகளிர்போல் ஒசிந்த தன்றே'

எனத் திருவிளையாடலும் பகர்வன அறிக. (௩௫)

பேதைமையி லாடவர்முன் வளைவின்றிப்
பெதும்பைமையின்
மேதகச்சற் றெனவணங்கி மங்கைமையின்

மாதரைப்போற் பைங்கூழின் மன்னனெதிர்
கதிர்த்தெழுந்த
ஏதமிலாக் கதிர்முதிர்ந்து வரவரக்கீழ்

(பொ - ரை.) பேதைப்பருவத்தில் ஆடவர் முன்னே தலைவணக்க மில்லாமல் பெதும்பைப் பருவத்தில் உயர்வு

1. சீவகசிந், நாமகள்: உச. 2. திருவிளை, திருநாட்டு: உச

பொருந்தச் சிறிது தலைவணங்கி மங்கைப்பருவத்தில் மிகவும் தலைவணங்கும் பெண்களைப் போலப் பசிய பயிராக வுள்ள பருவத்தில் தன் இல்லத் தலைவனை இந்திரனுக் கெதிரே கதிர்கொண்டு தலையிறக்கமின்றிப் பழுதகன்ற அந் நெற்கதிர்கள், பால்பிடித்து முதிர்ந்து வரவர நிலத்தை நோக்கிக் கீழே தலைவணங்காநிற்கும்.

(வி - ரை.) பேதைமை பெதும்பைமை மங்கைமை என்பன; அவ்வவற்றின் இயற்கைத்தன்மை. இல்மன்னன் – இல்லறத் தலைவன்; இந்திரன் மழைக்கடவுளாதலின், மழைபொழிவித்துப் பயிர்களை வளர்த்து, விளைவிக்கும் இயல்பினால் அவற்றிற்கு இந்திரன் தலைவனாவன். ஆகவே, 'இல்மன்னன்' என்றார். (கசு)

உருத்திட்ப முருக்காலைத் தலைநிறீஇ
உற்றதற்பின்
தருக்கற்று நனிவணங்கிப் பழுத்தகதிர்த்

பெருக்கத்து வேண்டுமாற் பெரும்பணிவு
மிகச்சிறிய
சுருக்கத்து வேண்டுமுயர் வெனுமொழியின்
சுவைதேற்றும்.

(பொ - ரை.) நெற்கதிர்களின் உருவம் பால் பிடித்தல் இல்லாத காலத்துத் தலைநிமிர்ந்து நின்று பால்பிடித்த பின் செருக்கு நீங்கி மிகவும் தலையிறங்கிப் பழுத்து முற்றிய மணிகளையுடைய பெரிய நெற்கதிர்கள், எல்லோருக்கும் மிகுந்த பணிவுத்தன்மை செல்வமிக்க காலத்தில் வேண்டப் படுவதாகும். மேன்மை மிகவும் சுருங்கியுள்ள காலத்தில் உயர்ச்சி வேண்டுமென்னும் அறவுரையின் கருத்தைத் தெளிவுபடுத்தும்.

(வி - ரை.) வள்ளுவர் தம் அருமறையில் மக்கள் பெருமிதத் தோடு வாழும் வகையைக் குறிக்குங்கால்,

[1]'பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு'

எனவும்,

[2]'எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து'

எனவும், அருளிய மெய்ம்மொழிக் கருத்தை உட்கொண்டது, இச் செய்யுள். (௬௭)

**தூமதிவாக் கியகிரணந் துளித்தென்னக்
கதிர்ச்சாலி
காமர்மணித் தரளங்கள் கான்றுசெறுத்
திடராக்கிப்
பூமலரக் கால்யாத்த புனல்முழுதும்
புறங்கவிழ்த்து
மாமைநீர் புலர்த்தவரு மள்ளருள
மகிழ்விக்கும்.**

**(பொ - ரை.)** கதிர்களையுடைய நெற்பயிர்கள், தூய சந்திரன் தம்மேல் சொரிந்த ஒளிக்கதிர்களைத் துளித்தா லொப்ப, அழகிய மணிகளாகிய முத்துக்களைக் கக்கி வயல் களை மேடாக்கி, பூக்கள் மலரத் தம் கால்கள்தோறும் சிறைப்படுத்திய நீர் முழுதும் வெளியிற் போகவிட்டு அழகிய நீரை வெளிப்படுத்த வாராநின்ற அங்கில மள்ளர்கள் மனத்தை மகிழ்ச்சிகொள்ளச் செய்யும்.

(வி - ரை.) சந்திரன் ஒளிக்கதிர்களினால் நெற்கதிர்கள் பால்பிடிக்கும் என்பது, உழவர்கள் தம் அனுபவ வாயிலாகக் கண்டறிந்த உண்மை ஆகலான், 'கிரணம் துளித் தென்ன' என்றார். விளைந்த நெற்பயிரினின்றும் முத்துக்கள் பிறப்பது இயல்பு. அதனைக் கக்கி வயலை மேடாக்குவதாகக் குறித்தார். காமர், மாமை என்பன அழகு என்னும் பொருளன. (௬௮)

1, 2. திருக்குறள்: ௯௬௩; ௧௨௫.

வணங்குகுலைக் கதிர்ச்சாலி சிலையாக
வளர்பதடி
உணங்குகதிர் கணையாக ஒளிர்முளரிக்
கரம்பற்றி
இணங்குபசுங் குரல்கவர வரும்புட்கள்
இரிந்தோட
அணங்குபுரிந் தெதிர்கண்டோர் அதிசயிப்பச்
செயும்பணைகள்.

**(பொ - ரை.)** வயல்கள் விளைந்த கதிர்க்குலைகளை யுடைய நெற்பயிர்களை வில்லாகவும், வளர்ந்து உலர்ந்துள்ள பதர்களோடு கூடிய கதிர்கள் அம்பாகவும், விளங்குகின்ற தாமரை மலர்களாகிய கைகளில் தாங்கி, பொருந்திய பசிய கதிர்களைக் கவருவதற்கு வருகின்ற பறவைகள் விலகிச் செல்ல, அவைகட்குத் துன்பங்கொடுத்து, நேரிற்கண்டோர் வியப்பெய்த (விரட்டுதல்) செய்வனவாம்.

**(வி - ரை.)** விளைந்த நெற்பயிர்களை வில்லாகவும், கதிர்களை அம்பாகவும், தாமரை மலர்களைக் கையாகவும் உருவகஞ் செய்து, அவை கொடு வயல்கள் கதிர்களைக் கவர வருகின்ற பறவைகளை ஓட்டித் தற்காப்புச் செய்து கொள்வதாகக் குறித்தார். (௫௫)

பாலொளிநீத் தெழும்விடத்தால் முகில்வண்ணம்
படைத்திருந்த
மாலவனார் கலிக்கச்சி வந்தெய்தித்
தவமுஞற்றி
மேலையுருச் சிவந்தென்ன வெள்ளொளிபோய்ப்
பசந்தெழுந்த
சாலியெலாஞ் செங்கனக நிறம்வாய்ந்து
தழைக்குமால்.

**(பொ - ரை.)** கடலில் தோன்றிய நஞ்சினால் பால் போன்ற தன் வெண்ணிற வண்ணத்தை இழந்து, மேகம் போன்ற கரிய நிறத்தைப் பெற்றிருந்த திருமாலானவர்,

செல்வமிக்க திருக்கச்சி நகரைச்சார்ந்து தவஞ்செய்து முன்னுள்ள கருவண்ணம் நிறமாறிச் செந்நிறம் ஆனாற்போல, முன்பு வெண்ணிறம் பருவத்தினால் நீங்கி, பின்பு பச்சை நிறங்கொண்டு, ஓங்கிவளர்ந்த நெற்பயிர்கள் எல்லாம் கதிர்களினால் சிவந்த பொன்னிறம் பெற்றுத் தழைத்தோங்கும்.

(வி - ரை.) திருமாலின் நிறம் வெண்மை; அமிழ்துபெறத் திருப்பாற்கடலைக் கடைந்தபோது, கடைகின்ற தயிர் மத்துக்குத் தயிர்கடை கயிறாக இருந்தது, வாசுகி யென்னும் பெரும் பாம்பு. அது கடைகின்ற வேகம் பொறாது நஞ்சை உமிழ்ந்தது. அந்நஞ்சினது கடுந்தாக்குதலால் திருமாலின் வெண்ணிறமாறிக் கருநிறமாயிற்று. அந்நிறம் மாறிச் செந்நிறம் பெறவேண்டிக் காஞ்சியிற் சென்று வீரட்டாகாரம் என்னும் திருப்பதியை யடைந்து சிவபெருமானை வழிபட்டுத் தன் குறையிரப்பச் சிவபெருமான் திருமாலுக்குச் செவ்வண்ண நிறம் பெற அருளினாரென்பது. இந்நூலில் குறிக்கும் வரலாறாகும். அதைக்கொண்டு 'மேலையுருச் சிவந்தென்ன' என்றார். (க00)

அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

நாவலோர் புனைந்துரைக்கு நலமுழுதும்
அமைந்துவட நாகஞ் சூழ்பொன்
நாவலோ எனவியப்ப வளர்செந்நெல்
அரிபருவ நாடித் தெண்ணீர்
நாவலோன் உளங்களிப்பப் படியெடுக்குங்
குண்டைநகர் உழவர் போல்வார்
நாவலோ எனவிளிப்பத் தொழுவரெலாம்
நயந்தெய்தி வினையின் மூள்வார்.

(பொ - ரை.) கற்றுவல்லோர் அழகுபடுத்திக் கூறுகின்ற வளங்கள் யாவும் சேர்ந்து, வடபாலுள்ள மேருமலையைச் சூழவுள்ள நாவலந்தீவோ எனக் கண்டோர் வியந்து கூற வளர்கின்ற செந் நெற்கதிரை அரிகின்ற பருவத்தை ஆராய்ந்து, தெளிந்த நீர்சூழ்ந்த திருநாவலூரராகிய ஆளுடைய நம்பிகள் மனமகிழ நெல்லளந்து கொடுத்த குண்டையூர்க் கிழாரைப்போல, நாவலோ என்று அழைக்க

மருதநில வாணரெல்லோரும் விரும்பிச் சேர்ந்து தம் தமக்குரிய நெல்லரிகின்ற தொழிலில் முயற்சி செய்வாரானூர்.

(வி - ரை.) நாவலோ என்பது நெல்லரிதற்கு மள்ளர்களை அழைக்கும் குறியீட்டுச் சொல். இது, குழூஉக் குறியின்பாற் படும். இதனை,

[1]'காவல் உழவர் களத்தகத்துப் போரேறி,
நாவலோஓ என்றழைக்கும் நாளோதை'

என்னும் முத்தொள்ளாயிரச் செய்யுளானும் அறிக; செந்நெல், விளைவுமல்கிக் கிடப்பதை நாவலந்தீவுக்கு உவமை கூறினூர். நாவலந்தீவு சாம்பூனதம் என்னும் பொன்னுடைமையால், அதன் நிறத்தைக்கொண்டு உவமை கூறினூர் எனக் கொள்க. (க0க)

கலிவிருத்தம்

ஒருவ ருக்கொரு செல்லலுற் றுலஃது
அருகு ளார்க்கும் அடுப்பது திண்ணமே
கருவி மள்ளர் கதிர்க்குலை தன்னெடும்
பருமென் பூக்களும் பற்றி அரிகுவார்.

(பொ - ரை.) ஒருவர்க்கு ஒரு துன்பம் வரின், அத்துன்பம் அடுத்துள்ளவர்கட்கும் வருவது உறுதிப்பாடாகும்; அதுபோல, அரிவாள் கொண்ட மள்ளர்கள், கதிர்முற்றிய நெல்லின் குலைகளோடும், பெரிய மெல்லிய மலரையுடைய தாமரை ஆம்பல் முதலிய கொடிகளையும் கையாற் பிடித்து அரியத் தொடங்குவார்கள்.

(வி - ரை.) [2]'வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனம் தீப்பட்டக் கால்'

என்னும் கருத்தைத் தன்னகத்தே கொண்டது, இச்செய்யுள். செல்லல் - துன்பம். அடுப்பது - வருவது. திண்ணம் - உறுதி. நெற்கதிர்களை அரிந்து அரியாக்குவோர், அதனோடு பற்றிப்படர்ந்துள்ள மலர்க்கொடிகளையும் அரிவது, ஒருவர்க்கு ஒரு கேடுறின் அவரைச் சேர்ந்தோர்க்கும் தவறுமல் வரும் என்பதை அறிவுறுத்தும் என எடுத்துக்காட்டி நிறுவுவதால் இது, எடுத்துக்காட்டுவமையணி. (க0உ)

1. முத்தொள்ளாயிரம்: கூ௫. 2. நாலடியார்: கஅ0.

அரிவர் சேர்ப்பர் அடுக்குவர் சிக்கென
வரிவர் சென்னியில் வைப்பர் களஞ்செலப்
புரிவர் பொன்னங் கிரியெனப் போர்செய்வர்
பிரிவர் மீள்வரிப் பெற்றியர் எங்கணும்.

(பொ-ரை.) *மள்ளர்கள், நெற்கதிர்களை அரிவார்கள். அரிந்தவற்றைத் திரள்திரளாகச் சேர்த்துச் சேர்த்தவற்றை ஒன்றின்பின் ஒன்றாக அடுக்கி, அடுக்கினவற்றை விரைந்து கட்டி, அவற்றைத் தலைமேல் சுமந்து, அவற்றைப் போடு தற்குக் களஞ்சென்று (அவற்றைப் போகட்டு) மேருமலை யென்னும்படி போராக்குவார்கள். பின்னர் அங்கிருந்தும் பிரிந்து திரும்புவர்; எல்லா இடத்தும் இன்ன தன்மையரே யாவரும்.*

(வி-ரை.) *அரிவர் சேர்ப்பர் அடுக்குவர் முதலியன: முற்றெச்சங்கள். களமர்கள், கதிரரிந்து களத்திற் கொடுபோய்ச் சேர்த்துப் போர்செய்தலைப் படிப்படியாகக் கூறினர். வரிதல்—கட்டுதல். பொன்னங்கிரி-பொன்மலை; அஃதாவது மேருமலை. பெற்றியர்-தன்மையர். எங்கணும்-வயல்கள்தோறும் என்னும் பொருட்டு.* (௧0௩)

சிறைசெய் தீம்புனல் நாட்டிறை செற்றமுன்
சிறைய ரிந்தவ ரைகளைச் சீற்றத்தாற்
சிறைசெ யக்கரு தித்தன் நிலத்தொரு
சிறைவைத் தாலெனப் போர்கள் சிறக்குமால்.

(பொ-ரை.) *இனிய நீரினை நிறைத்து வைக்கின்ற மருதநிலத்துக்குத் தலைவனாகிய இந்திரனானவன், சினங்கொண்டு முற்காலத்தில் சிறகுகளைக் களைந்த மலைகளைப் பின்னரும் சினத்தினால் சிறைசெய்ய எண்ணி, தன் நிலத்தில் ஒரு பக்கத்து வைத்திருப்பதை யொப்ப, நெற்போர்கள் சிறப்புற விளங்கும்.*

(வி-ரை.) *மருதம், வயலும் வயல்சார்ந்த இடமும் ஆகும். 'வேந்தன் மேய தீம்புனல் உலகம்' என்றார் தொல்காப்பியரும். ஆகலான், 'தீம்புனல் நாட்டிறை' என்றார். முற்காலத்தில் மலைகள் யாவும் சிறகு கொண்டு பறந்து பற்பல நாடுகளையும் அழித்தழி*

ணுல் அதை இந்திரன்பால் யாவரும் முறையிட அவ் விந்திரன் அருளிரக்கங் கொண்டு அவைகளின் சிறகை யரிந்து பறந்துசெல் லாவாறு செய்தான் என்பது வரலாறு. இதனை, 'மலைச்சிற கரிந்த வச்சிர வேந்தன்' என்றார், இளங்கோவடிகளும். நெற்கதிர்ப் போர்கள் பல இடங்களிலும் திரள்திரளாக அடுக்கி வானுறக் கிடக்குங் காட்சி மலைகளின் தோற்றம்போல் இருத்தலின் 'சிறை யரிந்த வரைகளை.........சிறை வைத்தாலெனப் போர்கள் சிறக் கும்' என்றார். இஃது இல்பொருள் உவமை இன்பந் தோன்ற நின்றது. (௧௦௪)

வெற்பெ லாமண் ணின் வீழ்த்துவ லாரிதன்
ஒப்பில் ஊர்தியை ஏவியோ றுத்தல்போற்
பற்பல் போர்கள் சரித்துப்ப கட்டினம்
முற்பி ணைத்துந டத்துவர் மொய்ம்பினோர்.

(பொ - ரை.) வலிமையுடைய மள்ளர்கள், இந்திரனானவன் மலைகளை யெல்லாம் நிலவுலகின்மேல் விழும்படி போகட்டு, தன் ஒப்பற்ற ஊர்தியாகிய மேகத்தை ஏவித் தண்டஞ் செய்து அடித்தலைப் போல, போட்ட பல நெற் போர்களை அவிழ்த்து அடித்து உதறி எருமைக் கடாக்களை முன்பு ஒன்றோடொன்று தளைத்துப் பிணையலடிப்பாரானார்கள்.

(வி - ரை.) வலாரி-வலன் என்னும் அசுரனைக் கொன்றதனால் இந்திரனுக்கு வந்த காரணப் பெயர். நெற்போர் வைத்த மள்ளர்கள், கதிர்களைப் பிரித்தெடுத்துக் கதிர்களை அடித்து, அதன் வைக்கோலை உதறி எருமைக்கடாக்களைப் பிணைத்து அதன்மீது நடக்கவிட்டுத் துவைத்து நெல்மணிகளை உதிர வைப்பர்; இத் தன்மையை மலைச் சிறகரிந்த இந்திரன், தன் ஊர்தியாகிய மேகத்தினால் தண்டித்தலாகக் குறித்தார். இதனை, 'நீணிறக் கரும்பகட்டினால் துவைத்து வைகிக்கி' என்றார், நைடத நூலாசிரியரும். (௧௦௫)

நெற்ப லாலத்தின் நீங்கிய தோவெனப்
பற்பல் கால்முகங் கோட்டின பார்ப்பபோற்
பொற்ப வாயினிற் பூங்கதிர் கவ்வுபு
சொற்ப கட்டினஞ் சுற்றியு முக்குமால்.

(பொ - ரை.) நென்மணிகள் வைக்கோலைவிட்டு நீங்கி விட்டதா என்று பலகாலும் தம் முகத்தைச் சாய்த்துப் பார்ப்பனபோல, பொலிவு பெறத் தம் வாயினால் அழகிய நெற்கதிர்களைக் கவ்வி நெற்கதிர்களை எருமைக் கடாக்கள் சுற்றிச் சுற்றி உழக்காநிற்கும்.

(வி - ரை.) பலாலம் - வைக்கோல். எருமைக்கடாக்கள் பிணையலில் சுற்றிச்சுற்றி வரும்போது, வாயாற் கவ்வியெடுத்து வைக்கோலைத் தின்பது, அவை, கதிரினுள்ள நெல்மணிகள் வீழ்ந்ததா எனக் கருதித் தம் முகத்தைச் சாய்த்துப் பார்ப்பதாகக் குறித்துத் தற்குறிப்பேற்ற அணி நயம் பொதுள அமைத்துத் தந்தார். (௧0௬)

உடலின் ஆவிபி ரிந்தென ஊழ்வினைத்
தொடர்பு நீங்குவ தொப்பத் தொகுத்தநெற்
படலை வையினின் நீங்கப்ப கட்டினம்
அடைய வுந்தொடர் நீங்கிய கனுமால்.

(பொ - ரை.) ஒருவன் உடலின் நின்று உயிர் நீங்க, அவ் வுயிரைச் சூழ்ந்த ஊழ்வினைப்பயனாகிய தொடர்பு நீங்குவதுபோல, கதிரில் பொருந்திய நெல்லின் திரள், வைக்கோலின் நின்றும்போக, எருமைக்கடாக்களின் கூட்டங்கள் முழுவதும் அப் பிணிப்பிலிருந்து விடுபடா நிற்கும்.

(வி - ரை ) முன் செய்த வினைப்பயனால் உயிர்கள் பல் வகைப் பிறவியெடுத்துத் திராத சுழல்காற்றுற்ற செத்தை போல் பிறந்தும் இறந்தும் உழல்வதாகும். உயிர்கள் வினைக்களவாக இன்பத் துன்பங்களை எய்தும்: வினை நீங்கின் இருவினைக் கொள்கலனாக இருந்த உயிர் உடலைவிட்டு நீங்கும் என்பது, நம் சைவசமய முடிபு. ஆகலான், பிணையலில் வந்த எருமைகள். நெற் கதிர் மணிகள் உதிர்ந்தவுடன் மள்ளர்களால் பூட்டிலிருந்து அவிழ்த்து விடப்படுவதை, 'தொடர்பு நீங்குவதொப்ப' என உவமை கூறினர்.

பகடு - எருமைக்கடா. தொடர் - பிணையல். ஆல்: அசைச் சொல். இது எடுத்துக்காட்டு உவமையணி. (௧0௭)

வைய கற்றி வளியெதிர் தூற்றலும்
பொய்ய கன்றவர் ஐம்பொறி போதல்போற்
கைய கன்று கழிவைப் பொடியொடும்
ஒய்யெ னப்பதர் அப்புறத் தோடுமால்.

**(பொ - ரை.)** *வைக்கோலி லிருந்து நெல்லைப் பிரித் தெடுத்துக் காற்றின் எதிரே தூற்றுதலும், உலகக் கட்டி னின்றும் நீங்கிய பெரியோர்களுடைய ஐந்து பொறிகளும் தன் கீழான தன்மை ஒழிந்துபோவதுபோல, நெற்களி லிருந்தும் பிரிந்துசென்ற வைக்கோலின் பொடிகளுடன் விரைந்து நெற்களின் பதர்கள் அப் புறத்தே போகாநிற்கும்.*

(வி - ரை.) *உலகம் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றமாகிய ஐவகை உருவில் நிற்றலால் புலன்நீங்கவே அதன்வழிச் செல் லும் பொறிகளும் ஒழிதலினால், 'பொய்யகன்றவர் ஐம்பொறி போதல் போல்', என்றார்.* (௧0அ)

அறத்து நூல்வழி ஆற்றுவ ஆற்றியத்
திறத்தின் எஞ்சிய செந்நெற் குவையெலாம்
குறித்தெ டுத்துநெற் கூடுய்த் தறச்செயல்
மறப்பி லாதவ ளக்குடி எங்கணும்.

**(பொ - ரை)** *அறநூல்கள் கூறுகின்ற நெறிப்படி தாம் கொடுப்பனவற்றைக் குறைவின்றிக் கொடுத்து, அவ் வழியிற் கொடுத்ததுபோக எஞ்சிய செந்நெற் குவைகளை யெல்லாம் குறியிட்டு அக்குறியினின்றும் எடுத்து, நெற் கூட்டில் நிறைத்துவைத்து செல்வம் பொருந்திய குடி மக்கள், எவ்விடத்தும் தாம் செய்கின்ற அறச்செயலி னின்றும் மறவாமல் நடப்பார்கள்.*

*(வி - ரை.) ஆற்றுவ - செய்வன: பன்மை. நெற்கூடு - நெற் குதிர்; களஞ்சியமுமாம். வளக்குடி - செல்வமிக்க குடிமக்கள் ஆகுபெயர்.* (௧0௯)

குறைய வித்தின கொண்டு குடியெலாம்
நிறயச் சாலிநி ரப்புவ பூம்பணை

இறைய ளித்த இருநாழி நெற்கொண்டே
அறமெ லாநிறை விக்கும் அமலைபோல்.

**(பொ - ரை.)** *மலர்களையுடைய வயல்கள், குடிமக்கள் யாவரும் மிகச் சிறு அளவினதாக முன்பு விதைத்த நெல் முளையைக் கொண்டு சிவபெருமான் கொடுத்தருளிய இரு நாழி நெல்லைக்கொண்டே முப்பத்திரண்டு அறங்களையும் முற்றுவித்த உமையம்மையாரைப்போல, ஒன்று நூறாக நெற்களை விளைவித்து நிரம்பச் செய்யும்.*

(வி - ரை) *சிவபெருமானார் ஈந்தருளிய இருநாழி நெல்லைக் கொண்டு முப்பத்திரண்டு அறங்களையும் முற்றுவித்த உமையம்மையாரைப் போல, வயல்கள் தம்மிடத்து விதைத்த நெற்கள் குறைந்த அளவின ஆயினும் ஒன்றுக்கு நூறுமடங்கு மிகுதியாக நெல்லை விளைத்துக் கொடுக்கும் என்றது, அறந் திறம்பியா நாட்டில் வசையிலா வண்பயன் குன்றும். இஃது அறத்தை வளர்த்து அருங்கலைச் செல்வத்தையும் ஒப்புகின்ற உயரிய நாடாகலான் நன்கு விளைவு மல்கியதென நாட்டின் சிறப்பைக் குறிப்பால் உணர்த்தினார். இது அம்மை செய்த அறத்தை எடுத்துக்காட்டியுரைத்தமையால் எடுத்துக்காட்டுவமையணி.* (௧௩௦)

கொடுப்ப கொண்டுபெ ருக்கிக்கொ டுத்தலால்
அடுத்த வாணிகர் போலும கன்பணை
உடுத்த சோலைகள் உம்பர் நடவுணீர்
மடுப்ப தென்ன வளர்ந்தெழுந் தோங்குமால்.

**(பொ - ரை.)** *இடமகன்ற வயல்கள், தம்மிடம் விதைத்த சிற்றளவு நென்முளையைக் கொண்டு ஒன்று பலவாகப் பெருக்கிக் கொடுத்தலினால், ஆக்கம்பெறச் செய்யும் தொழிலில் அடுத்த வணிகர்க்கு ஒப்பத் தோற்றமளிக்கும், அம் மருதநிலத்தைச் சேர்ந்த சோலைகள், தேவ உலகத்துத் தெய்வத்தன்மை பொருந்திய கங்கைநீரை வாய்மடுத்து உண்ணுதலைப்போல மேல்நோக்கி வளர்ந்தெழுந்து ஓங்கி வளராநிற்கும்*

(வி - ரை) *வணிகர்கள் சிறுமுதல் வைத்துப் பெரும் பொருள் திரட்டுதல்போல, சிற்றளவினதான நெல்முளை*

கொண்டு பேரளவிற்றான நெல்லை வயல்கள் தருவதாகக் குறிப் பிட்டார். வளத்தால் மரங்கள் வளர்தலை, வானக் கங்கை யாற்றை உண்ணச் சென்றிருப்பதாகத் தற்குறிப்பேற்றம் கொடுத்தார். அகன்-இடம் அகன்ற. பணை-வயல் உடுத்த-சூழ்ந்த. உம்பர்-மேலிடம்; வானம் (கககூ)

கலிநிலைத்துறை

கொண்டல் உகுக்கும் ஆலிநி கர்ப்பக்

விண்டு முகைக்கும் பைங்கமு கெங்கும்

விளையாட்டு

வண்டலர் கொங்கைக் கிடையிள நீர்மற்

றவர்காணது

அண்ட மிசைக்கொண் டேய்தி அளிக்கும்

(பொ - ரை.) மேகங்கள் சிந்துகின்ற மழைத்துளியை யொப்பக் குளிர்ச்சிவாய்ந்த பாளைகள் விடுபட்டு அரும்பா நின்ற பசிய கமுகுகளினிடந்தோறும் வளராநின்ற தென்னை மரம், அவ்விடத்து விளையாட்டுத் தொழிலையுடைய மங்கை யர்களின் கொங்கைகளுக்குத் தோற்றுப்போன இளநீரை அவர்கள் அறியாமல் வானத்தின்மேற் கொண்டுபோய் அவைகளைப் பாதுகாத்து வளர்க்கும்.

(வி - ரை) மேலோங்கி வளர்ந்த தென்னமரங்கள், குரும்பை விட்டு இளநீராக வளர்ச்சி பெறுதலை, கமுகந் தோட் டத்தில் விளையாடுகின்ற பெண்களின் கொங்கைகட்கு இணை யாகாமல் தோற்றுப் போயிருப்பதற்கு அஞ்சி, அவர்கள் காணு மல் இளநீர்களை மேலே தூக்கிச் சென்று அங்குப் பாதுகாத்து வள்ர்க்கும் என, இயற்கையாகத் தென்னை காய்த்துக் குலைகுலை யாகக் கொண்டு நிற்பதைக் குறித்தலால், தற்குறிப்பேற்றம் தந்து இன்பந்தரும் அணியாகக் கொள்க.

கொண்டல்-மேகம். ஆலி - மழைக்கட்டி; இதனை ஆலங் கட்டி என வழங்குப உலகவழக்கத்தில். அது பனிக்கட்டி. கமுகம் பாளை வெண்ணிறமாகச் சிறு சிறு உருவமாக இருத்த லால் மழைக்கட்டி அல்லது மழைத் துளிக்கு உவமமாகக் கூறினர். (ககஉ)

செற்றெயில் வென்றார் தேர்மிசை மேற்போக்
கெனமென்பூத்
துற்றபொ தும்பர்த் துறையின் இனத்தாற்
செருவேற்றுப்
பற்றிய வாவி நீங்குபு பைந்தேன்
அடைகீறி
உற்றெழு வாளை பொருதுயிர் விண்டார்
கதிகாட்டும்.

**(பொ - ரை.)** *பகைவர் மதிலைத் தகர்த்து வென்ற அரசர்கள், தம் தேரின்மேல் விதானம் (மேற்கட்டி) போல மென்மையான பூங்கொத்துக்கள் நெருங்கிய சோலையிடங் களில், தம் இனத்தோடு போர்செய்து தாம் இருந்த தடாகத்தினின்றும் துள்ளி மேலெழுந்து (பக்கத்து மரங் களிலுள்ள) பசிய தேனடையைக் கிழித்து மேலெழுந்த வாளை மீன்கள் தமக்குள் போர்செய்து இறந்து வீரசுவர்க்கம் புகும் போர்வீரர் தன்மையைக் காட்டாநிற்கும்.*

(வி - ரை.) *செற்றெயில் என்பதை எயில்செற்று என மாறிக் கூட்டுக. பகைவர் மதிலை வளைத்து வென்ற வெற்றி வேந்தர் தம் தேர்களில் மேற்கட்டிகள் கட்டியிருப்பது போலத் தோற்றமளிக்கின்ற பூங்கொத்துக்கள் தொங்குகின்ற சோலை என்க. மேற்கட்டி துணிகளில் பூவேலை செய்து கட்டியிருக்கும் ஆடை. இதனை, 'நீலவிதானத்து நித்திலப் பூம் பந்தர்க்கீழ்' என்றார் இளங்கோவடிகளும். வாளைமீன்கள் குதிகொண்டு ஒன்றோடொன்று போர் செய்து இறந்துபோகுந்தன்மை போர் வீரர்கள் போர் செய்து வீரசுவர்க்கம் புகுந்தன்மையைக் காட்டும் என, வீரமேம்பாடும், அதனாற் பெரும்புகழ் பெறும் அவர்தம் சிறப்பும் வருணனையில் வைத்து விளக்கிக் கூறினார்.* (கக௩)

போதுகள் மேய நெடுங்கய மேவு
புனிற்றுக்கார்
மேதியை ஆயிடை வாளைவெ குண்டு
விசும்பேறிப்

பாதிவெ ரிந்புறம் உட்குழி யக்குதி
பாய்ந்தாடி
மீதுயர் திண்கரை ஏறவு கைக்கும்
வியப்பிற்றல்.

**(பொ - ரை.)** *மலர்கள் செறிந்த பரந்த தடாகத்தில் சென்ற இளமை பொருந்திய கருநிற எருமைகளை அவ் விடத்திலுள்ள வாளைமீன்கள் சினந்து வானத்தின்மீது தாவி அவற்றின் முதுகின்மேல் பாதிப் பக்கம் நீருள்ளே அமிழக் கீழே குதித்துக் கலக்கி, மேலே உயர்ந்த வலிய அத் தடாகக் கரையில் ஏறும்படி செலுத்துகின்ற வியப்புச்செயலை யுடையது.*

(வி - ரை.) *எருமை மாடுகள் தாம் இருக்கும் தடாகத்தைக் கலக்கி வீழ்தலைக்கண்ட வாளைமீன்கள் சினந்தெழுந்து வானத்தில் தாவி அவ் வெருமைகளின் முதுகின்மேல் மோதி அது அஞ்சி வெளியேறும்படி செய்யும் தன்மையன. இதனால் தமக்கு இடர் செய்த எருமைக்குத் தாம் இடையூறு செய்தன என்னும் கருத்துக் காண்க.* (கக௪)

சுவையொளி யூறொலி நாற்றமென் ஐந்தின்
தொடர்பற்றிக்
கவர்படு நெஞ்சில் திரைதிரை தோறுங்
கடைநீர்நாய்
துவளவெ ழுர்பா முறைமுறை கீழ்நீர்ச்
சுழல்காட்சி
எவருமி றும்பூ துறவுள ஏரித்
தடமெங்கும்.

**(பொ - ரை.)** *சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று கூறப்படுகின்ற ஐம்புலன்களின் தொடர்ச்சியைப் பின் பற்றிப் பிளவுபட்ட மனத்தைப்போல, அலைகள்தோறும் அவற்றினிடமகப்பட்ட நீர்நாயானது உடல் துவள மேலெழும்பி முறை முறையாக நீரினது கீழேபோய் மணம்*

பொருந்திய தடாகமெங்கும் சுழல்கின்ற காட்சி யாவரும் வியக்கத் தக்கனவாகவுள்ளன.

(வி - ரை.) ஐம்புலன்களின் வயப்பட்ட மனம் அதன்வழிச் சிக்குண்டு மீளமுடியாதவாறு உழலுதல்போல, அலையிலகப் பட்ட நீர்நாய் அலைமோதிச் செலுத்தும் வழிச் சென்று அலையு மென நீர்வளத்தையும் பெருக்கையும் சிறப்பித்துக் கூறினர். இது எடுத்துக்காட்டி விளக்குதலால் எடுத்துக்காட்டுவமை யணி. (கக௭)

கரைத்துறு தண்பூங் காஞ்சிகள் சாகைக்
கரமோச்சி
விரைத்தக ருப்பைத் தைவரு தோற்றம்
விரிதார்வண்டு
இரைத்தெழு திண்டோட் கேள்வரொ டூடும்
இளையார்மேல்
நிரைத்தமர் செய்வான் வேள்சிலை பற்றும்

(பொ - ரை.) கரையிற் பொருந்திய தண்ணிய மலர் களையுடைய காஞ்சிமரங்கள் தம் கிளைகளாகிய கைகளை நீட்டி மணம் வாய்ந்த கரும்புகளைத் தடவுகின்ற தன்மை, மலர்விரிந்த மாலைகளில் வண்டினங்கள் ஒலித்துப் பறந்து எழுந்து வலிமைபெற்ற தோள்களையுடைய தம் கணவரோடு பிணக்கங்கொண்ட பெண்களின்மீது, மன்மதனனவன் போர்தொடுத்தற்கு வரிசைப்படுத்தி வில்லையேந்தி நிற்கின்ற தன்மையை யொத்திருக்கும்.

(வி - ரை.) இதன்கண், காஞ்சிமரத்தை மன்மதனாகவும், கரும்பை அவன் வில்லாகவும், தடவுதலைப் பிடித்தலாகவும் கூறினர். பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனோடு ஊடல் கொள் ளுதல் இயற்கை. மருதநிலத்தின் ஊடலும் ஊடல் நிமித்தமு மாகிய நிகழ்ச்சியை உவமமாகக் காட்டிக் கூறினர், இதுவும் மருத நிலமாகலான். (ககஅ)

மேதகு செவ்வணி தாங்கினர் செல்லுமின்
னன்னரும்
தீதற வெள்ளணி பூண்டுசெல் சேடியர்

போதலும் மீடலு மாய்ப்பொலி வீதிகள்
எங்கெங்கும்
காதல்செய் சேரிம டந்தையர் உள்ளங்
கவல்விக்கும்.

**(பொ - ரை.)** *மேன்மை பொருந்திய செவ்வணி தாங்கிச் செல்லும் மின்னலைப் போன்ற தோழிப்பெண் களும் குற்றமற்ற வெள்ளணியணிந்து செல்லும் பாங்கியர் களும், எவ்விடத்தும் போதலும் திரும்புதலுமாகி விளங்கு கின்ற வீதிகள், (தத்தம் தலைவர்கள் மேற்) காதல்கொண்ட சேரிப் பரத்தையருடைய மனத்தைக் கவலைக்குள்ளாக்கும்.*

(வி - ரை.) *இதிற் பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனை நோக்கிச் சேரிப் பரத்தையர் வருந்துகின்ற மருதத்திணை ஒழுக் கத்தைக் கூறினார் எனக் கொள்க.* (கஎ)

தசும்புறழ் கொங்கையொ டெம்பெரு மான்மகிழ்
தண்பாசூர்
விசும்பை உரிஞ்சு மதிற்றிரு வல்லம்

அசும்பு தடம்பொழில் ஏனைய வைப்பும்
அனந்தஞ்சூழ்
பசும்பணை மாமரு தத்தெழில் யார்பகர்
கிற்பாரே.

**(பொ - ரை.)** *குடத்தைப் போன்ற கொங்கைகளை யுடைய உமையம்மையாரோடு எம்பெருமான் மகிழ்ந்தமரும் குளிர்ச்சி பொருந்திய பாசூரும் வானத்தைத் தடவு மதில் சூழும் திருவல்லமும் மணத்தையுடைய செந்தேன் துளிக் கும் பரந்த சோலை சூழ்ந்த மற்றைத் தலங்களும் அளவில்*

லாது சூழ்ந்த பசிய வயல்சூழ்ந்த பெரிய மருதநிலத்தின் பொலிவை எடுத்துக் கூறும் வல்லமையுடையார் யாவர்? (ஒருவருமில்லை யென்றபடி.)

(வி - ரை.) தசும்பு - குடம். உறழ் ; உவமவுருபு. கவரி போன்ற செந்நெற் கதிர்கள் முற்றி விளையும் சிறப்புத்தோன்ற 'பசும்பணை' எனவும், அதனால் காண்போர் கண்கட்கு அழகுக் காட்சி தந்து இன்பந்தருதல் தோன்ற 'மருதத்தெழில் யார் பகர்கிற்பார்' எனவும் கூறினர். இதுவரை மருதநிலச் சிறப்பைக் கூறினர். (கக அ)

நெய்தல்

கொச்சகக்கலிப்பா

அம்மருத வைப்பினை அடுத்தகழி நெய்நல்
மம்மர்விட வாலமர னுக்குநவு மாற்றல்
நம்மினமெ னப்பொய்ம்மொழி நாடியுரை கைதை
சும்மையவ ளக்கரொடு சூழ்ந்துறவு கொள்ளும்.

(பொ - ரை,) அந்த மருத நிலத்தையடுத்த உப்பங் கழி சூழ்ந்த நெய்தல்நிலமானது மயக்கந்தருகின்ற நஞ்சினைச் சிவபெருமானுக்குத் தந்த தன்மையினால் பொய்ச் சொல்லை ஆராய்ந்து கூறிய தாழைகள் நம் இனமென்று பேரொலியையுடைய அக் கடலோடு அதனைச் சூழ்ந்து உறவுகொண்டு நிற்கும்.

(வி - ரை.) ஒரு காலத்தில் சிவபெருமானுடைய அடியையும் முடியையும் தேடமுற்பட்டனர் திருமாலும் நான்முகனும். பிரமன் அன்ன வடிவெடுத்து வானமுகடுவரை பறந்துபோய்த் தேடியும் சிவபெருமான் திருமுடியைக் காணற்கியலவில்லை. அப்பால் தாழை மலர் இறைவன் திருமுடியிலிருந்து வந்ததை நான்முகன் கண்டுதான் சிவபிரான் திருமுடிகண்டதாகத் திருமால் பால்வந்து கூறுமாறு வேண்ட, தாழை அவ்வாறே பொய்ம்மையாகச் சான்று கூறிற் றென்பது அருணாசல புராணவரலாறு ஆகலான், 'பொய்ம்மையுரை நாடியுரை கைதை' என்றார்.

கழி-உப்பங்கழி. உறவு பூண்பார் ஒத்த பண்புடையாரன்றே! அம்முறையில் இறைவனுக்கு நஞ்சைக்கொடுத்துத் தீமை செய்தது நெய்தலாகிய கடல் தாழை, சிவபிரான் பெருமை குறையத்

திருமுடி கண்டதாகப் பொய் கூறிற்று ஆகவே, தீமைப் பண்புடைய இவ்விரண்டும் குணத்தால் நட்புக் கொண்டன என்பது குறிப்பு தாழை நெய்தனிலக் கருப்பொருள். அது, கடற்கரை ஓரங்களில் தோன்றி வளர்வது இயல்பு. அதனை, 'கைதை அளக்கரொடு சூழ்ந்துறவு கொள்ளும்' என இறும்பூதுறக் கூறினர். (கககூ)

கண்டல்மட லேறவலர் தூற்றுகமழ் புன்னை
உண்டுநறை காலுமளி ஒத்துடன் இசைக்கும்
வண்டுளர் அரும்புவிரி நெய்தல்மண மிசையும்
குண்டுகழி மேய்பறவை நோக்கிமகிழ் கூரும்.

**(பொ - ரை.)** *தாழையானது மடல்விட அலர் தூற்றுகின்ற நன்மணங் கமழும் புன்னைமரங்கள் சிந்துகின்ற தேனினை உண்டு வண்டுகள் ஒன்றுபட்டுப் பாடாநிற்கும்; வண்டுகள் கிண்டுகின்ற மலரரும்புகள் விரிந்த நெய்தல் மலர் மணத்தை வீசும்; ஆழமுள்ள உப்பங்கழிகளில் மேய்கின்ற பறவைகள் அதைக்கண்டு மகிழ்ச்சிகொள்ளும்.*

**(வி - ரை.)** *களவுப் புணர்ச்சியில் தலைவியால் இன்பந் துய்க்கின்ற தலைவன், பாங்கியால் தன்குறையை எடுத்துக் கூறியும் கேட்காவிட்டால் பனங்கருக்கால் செய்த குதிரை மீதேறித் தலைவி பெயர், தன் பெயர் எழுதிய படத்தைகேந்தித் தலைவியைப் பெறுவதென்பது அகப்பொருள் நூலார் கண்டமுறை. தாழைகள் மடல்விடுதலை, மடலேறுதலாகக் குறித்தார். அதற்கேற்ப, புன்னைமரங்கள் மலர்களை உதிர்த்தலை அலர்தூற்றுதலாகவும், வண்டுகள் பாடுதலை, அதற்கு ஒத்துரைப்பதாகவும், வண்டுகள் கிண்டுகின்ற நெய்தல் அரும்பு மலராக மலர்ந்து மணங் கமழுதலை மணமிசைய ஏற்றுக் கொண்டதாகவும், பறவைகள் மகிழ்ந்து இரைகொள்ளுதலை, அந்த மணங்கண்டு மகிழ்ச்சி கொள்ளுவதாகவும் குறித்தார்.* (௧௨0)

கண்டுமொழி யாரவய வத்தெழில்க வர்ந்து
தெண்டிரைய ளக்கரின் ஒளித்ததுதெ ளிந்து
கொண்டதுறை யோர்கடல்கு ளிப்பர்துகிர் சங்கம்
வண்டரளம் வாரிமட வாரெதிர்கு விப்பார்.

**(பொ - ரை.)** *கற்கண்டைப்போல் இனிய சொற்களையுடைய மங்கையர்களின் உறுப்புகளின் அழகைக் கவர்ந்து*

பவளமும் சங்கும் முதிர்ந்த முத்துக்களும் தெளிந்த அலை களையுடைய கடலிற்போய் ஒளிந்திருத்தலை, வளப்பம் பொருந்திய அந்நிலத்துப் பரவர் தெளிந்து கடலிற் குளித்து அவைகளைத் தம் பெண்களுக் கெதிரே குவிப் பார்கள்.

(வி - ரை) பெண்களின் உறுப்புக்களில் பவளம் சங்கு முத்து இவை முறையே இதழ், கழுத்து, பற்களுக்கு உவமங் கூறுவது மரபு; எனவே பரதவர் இவைகளை வலைகொடு அரித்துவந்து தம் மனைவிமார் முன் குவித்தலை, அவர்களின் மேற் கண்ட, உறுப்புகளின் அழகைக் கவர்ந்து கொடுபோய்க் கடலில் ஒளித்திருப்பதைக் கண்டு அங் களவு கொண்டவைகளைப் பிடித்துக் கொணர்ந்து ஒப்புவித்ததாகத் தற்குறிப்பேற்றஅணி பெற அமைத்தார். (கஉக)

எம்முடைய றுப்பெழிலை வவ்வினிர்கள் என்றுக்
கொர்மைமுலை வம்பணிப ரத்தியர்வெ குண்டு
விம்முவளை சேல்பவளம் வெண்டரள மற்றும்
அம்மபிறர் கொள்ளவிலை ஆற்றிமகிழ் கூர்வார்.

(பொ - ரை.) எம்முடைய உறுப்பினழகைக் கொள்ளை கொண்டுவிட்டீர்களென்று திரண்ட கொங்கைகளிற் கச் சணிந்த அந்நிலப் பெண்கள் சினந்து, ஒலிக்கின்ற சங்கை யும் சேற் கெண்டை மீனையும் பவளத்தையும் வெண்ணிற முத்தினையும் மற்றவற்றையும் பிறர் கைக்கொள்ள விலைக்குக் கொடுத்து மகிழ்ச்சி மிகுவார்கள்.

(வி - ரை.) நுளைச்சியர் தம் கணவன்மார் கொடுத்த பவள முதலியவற்றை விலைக்குக் கொடுத்து மகிழ்தலை, எங்கள் உறுப் புக்களின் அழகைக் கவர்ந்தீர், எமக்கு உதவீர் என, அவர்கள் கருதி விற்பதாகக் கூறலால் இது, தற்குறிப்பேற்றமும், எதிர் நிலையும் கொண்ட கலவையணியாகக் கொள்க. அம்ம: வியப் பிடைச்சொல். (கஉஉ)

கண்ணெழில்க வர்ந்தகடல் மீன்களையு ணக்கும்
உண்ணமிழ்தம் அன்னமட வார்பறவை ஒப்பும்
பண்ணிசைம டுப்பவிழை பவ்வமும் அருக்கன்
விண்ணெழுப கற்பொழுதின் மெல்லெனவொ லிக்கும்.

(பொ - ரை.) தம் கண்களின் அழகைக் கொள்ளை கொண்ட கடல்மீன்களை உலர்த்துகின்ற பருகுகின்ற அமிழ்தத்தை யொத்த பெண்கள், பறவைகளை ஓட்டுகின்ற பண்ணின் இசையை விரும்பிய கடலும் கேட்க, ஞாயிறு வானத்தெழுந்த பகற்காலத்தில் மெல்லென ஒலிக்கா நிற்கும்.

(வி - ரை.) கடல் பகற்பொழுதில் இரைச்சல் குறைந்தும், இரவுப்பொழுதில் இரைச்சல் மிக்கும் ஒலிப்பது இயற்கை. ஆதலால், அதன் நிலையை, பகற்பொழுதில் மெல்லெனக் கடல் முழக்கஞ் செய்தலைத் தற்குறிப்பேற்றமாக, பெண்களின் பறவை ஓட்டுகின்ற பண்போன்ற குரலைக்கேட்டு மெல்லெனப் பகற்பொழுதில் ஒலிப்பதாகக்குறித்தார். (கஉரு)

தணர்ந்தவர்கள் ஆருயிர்வ ருத்தவிறல் சாற்றி
மணந்தழுவு தும்பைமலர் சூடியடல் மாரன்
அணங்கமர்செய் காலமென ஓர்ந்துமுர சாழி
இணங்குறவி ராப்பொழுதின் மிக்கொலியெ ழுப்பும்.

(பொ - ரை. )பிரிந்த காதலர்களின் நிறைந்த உயிரை வருத்துதற்கு வெற்றியை யுடைய மன்மதன் தன் வெற்றியைக் கூறி மணமிக்க தும்பை மலர்மாலையைச் சூடி, வருத்துதலைச் செய்கின்ற போர்செய்யுங்காலம் இதுவென்றுணர்ந்து, அம் மன்மதனது முரசமாகிய கடலானது பொருந்த இரவுப்பொழுதில் மிக்க ஆரவாரத்தை யெழுப்பி முழங்கா நிற்கும்.

(வி - ரை.) கடல் இரவுப் பொழுதில் மிக முழக்கஞ் செய்தலை, மன்மதன், பிரிந்த காதலரின் ஆருயிரை வருத்த வெற்றிசாற்றி முழக்கஞ் செய்தலாகக் குறித்தார். (கஉசு)

வீழ்ந்தவர்த ணத்தலின்வி ழிப்புனல் உகுத்துத்
தாழ்ந்தழுதி ரங்குமட மாதர்தமை நோக்கி
ஆழ்ந்தகழி மாதுளுடன் நின்றழுவ தென்னைச்
சூழ்ந்துபுன் அரற்றுமலர் தேத்துவிது விக்கும்.

**(பொ - ரை.)** தம்மால் விரும்பப்பட்ட கணவர்கள் பிரிதலால், கண்களில் நீரைச் சிந்தி, துன்பத்திலழுந்தி அழுது இரங்காநின்ற மடமைத்தன்மையுடைய பெண்களை நோக்கி, ஆழமுடைய கழியென்னும் பெண்ணும் சேர நின்று அழுதல்போல, பறவைகள் சூழ்ந்து ஒலிசெய்ய மலர்கள் தேன்துளியைச் சிந்தும்.

(வி - ரை.) பொருள்வயிற் பிரிந்த கணவர் வரக் காலந் தாழ்த்தவழிக் காம மிக்கூர்தலால் தலைவி வருந்துதலை, 'அழு திரங்கு மடமாதர்' என்றார். மாலைப்பொழுதில் பறவைகள் ஒலிப் பதும் மலர்கள் தேன் சொரிதலும், இயற்கை; அதனைக் கழி யானது பெண்கள் இரங்குதலைக்கண்டு தானும் இரங்கியழுத லாகக் குறித்தார். (கஉ௫)

நலம்பயில்பொ ருட்குமலி வங்கமிசை நண்ணும்
புலம்பர்வரு கின்றவழி நோக்கினர்பு லம்பி
இலம்படும டந்தையர்கள் இன்னுயிர்த ளிர்ப்ப
அலம்புகுளிர் பூந்திவலை வீசுமலை வாரி.

**(பொ - ரை.)** நன்மை பொருந்திய பொருள் தேடுதற் பொருட்டாகத் தொழில் நிரம்பிய கலத்தின்மேற் செல்லும் நெய்தல்நிலத் தலைவர் வருகின்ற வழியை நோக்கி வருந்தித் துன்பம் மிகுகின்ற பெண்கள், அலைகளையுடைய கடல், இனிய உயிர் வாட்டம் நீங்கும்படி ஒலிக்கும் குளிர்ச்சி யுள்ள நீர்த்துளிகளைத் தூற்றாநிற்கும்.

(வி - ரை.) புலம்பர்-நெய்தல் நிலத் தலைவர். தம் கணவர் பிரிவு பொருது அழுகின்ற மங்கையர்கட்கு, கடல் தன் அலையால் நீர்த்துளிகளைச் சிதறி ஆற்றுதல் செய்யும் எனத் தற்குறிப் பேற் றம் தந்துரைத்தார். (கஉ௬)

புன்புறம தத்தரும் வியந்துபுகழ் செய்ய
என்பையொரு பெண்ணெனவி யற்றுநகர் ஒற்றி
நன்பதிமு தற்பலவு டுத்தநனி நெய்தல்
தன்பெருமை யாவரள விட்டறித ரத்தோர்.

(பொ - ரை.) புல்லிய புறச் சமயத்தோரும் வியப்புக் கொண்டு புகழ்ந்து பேச, எலும்பைப் பெண்ணுருவாகச் செய்த திருமயிலாப்பூரும், திருவொற்றியூரும் ஆகிய நல்ல திருப்பதியும் முதலான பல தலங்கள் புறத்திற் சூழ்ந்துள்ள பெருமை வாய்ந்த நெய்தல்நிலத்தின் சிறப்பை வரையறுத்து அறியும் தகுதியுடையோர் எவர்? (ஒருவருமில்லை என்றபடி.)

(வி - ரை.) திருமயிலாப்பூரில் சிவநேசச் செட்டியாருக்குப் பூம்பாவை யென்னும் பெயருடைய மகள் பிறந்து கன்னிப் பருவமுற்றனராக, திருஞான சம்பந்தர் ஞானப்பாலுண்டு இறைவன் திருவருள் பெற்ற வரலாற்றைக் கேட்டுணர்ந்து அப் பெண்ணையும் தம் செல்வத்தையும் கையுறையாக்கக் கருதினர். இவ்வாறாக ஒரு நாள் அப் பெண் பூஞ்சோலையில் மலர் கொய்யச் சென்ற காலை நாகப்பாம்பு தீண்டி இறந்தனர் அதுகண்ட செட்டியார் அப்பெண்ணை எரியூட்டிச் சாம்பரான பின் அவர்தம் எலும்பைப் பொறுக்கி ஒரு குடத்திற் நிரப்பி வைத்திருந்தனராக, ஒருநாள் தலங்கள்தோறும் வணங்கிவந்த ஆளுடையபிள்ளையார், திருவொற்றியூருக்கு எழுந்தருளி வந்து இருத்தலைக் கேள்வியுற்றுச் சென்று வணங்கித் திருமயிலாப்பூருக்குப் பிள்ளையாரை அழைத்து வந்து வரலாற்றைக்கூறி, பூம்பாவை உடலெலும்பை நிறைவித்த குடத்தையும் கொணர்ந்து வந்துரைக்க, பிள்ளையார்ப் பெருமான், மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலை' என்று தொடங்கும் திருப்பதிகம் ஓதி, இறந்த காலத்துக்குப் பின் வளர்ச்சியுற்ற நிலை பிறழாது பெண்ணுருவாக்கிக் கொடுத்தன ரென்பது திருத்தொண்டர் புராண வரலாறாகும். திருமயிலாப்பூரும் திருவொற்றி யூரும் கடலும் கடல் சார்ந்த நெய்தல் நிலப் பகுதியாகலான் இடத்துநிகழ் பொருளின் தொழிலை இடத்தின் மேலேற்றி 'என்பை ஒரு பெண்ணென இயற்றுநகர் ஒற்றி' என்று வியப்புறக் கூறினர். (கஉஎ)

## திணைமயக்கம்

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

**திருத்தொண்டை நன்னாட்டு நானிலத்தைத்**
**திணைவளமுந் தெரித்துக் காட்ட**
**மருத்தொண்டை வாய்ச்சியர்சூழ் குன்றைநகர்க்**
**குலக்கவியே வல்லான் அல்லாற்**

**கருத்தொண்டர் எம்போல்வார் எவ்வாறு**
**தெரிந்துரைப்பார் கலந்தார்க் கின்ப**
**மருத்தொண்ட ரணியிலவை ஒன்றேடொன்**
**றியைந்தனவும் ஆங்காங் குண்டால்.**

**(பொ - ரை.)** அழகிய நல்ல தொண்டை நாட்டி லுள்ள மருத முதலாவுள்ள நான்கு நிலங்களுள் அடங்கிய ஐந்து நிலங்களின் வளங்களையும் விளக்கி உணர்த்திக் காட்டு தற்கு, மணமிக்க கோவைக்கனி போன்ற வாயையுடைய பெண்கள் சூழ்ந்துள்ள குன்றத்தூரில் தோன்றியருளிய சிறந்த கவிஞராகிய சேக்கிழார் பெருமானே வல்லவரல் லாமல் பிறப்பால் அடிமை கொள்ளப்பட்டவராகிய எம்மைப் போன்றவர்கள் எவ்வகையில் தெரிந்து சொல்கின்ற வன்மை யுடையவ ராவர்? தன்னிடத்துச் சார்ந்து வாழ்வோர்க்கு இன்பத்தையூட்டுகின்ற ஒள்ளிய நிலவுலகில் அந்நிலங்கள் ஒன்றேடொன்று தம்முட் கலப்புற்றுத் தலைமயங்குதலும் அவ்வவ் விடங்களில் உள்ளனவாகும்.

(**வி - ரை.**) நால் நிலம்: முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன. ஐந்திணை-ஐந்துவகை ஒழுக்கம். அன்றி ஐவகை நிலக் கருப்பொருள்களுமாம் குலக்கவி-கற்றோருள் திருவருள் கைவரப் பெற்ற நல்ல கவிஞரும் மாண்பு. சேக்கிழார் பெருமான் திருத் தொண்டர் புராணத்துள், திருக் குறிப்புத் தொண்டர் வரலாற் றில் மெய்ம்மையாகத் தொண்டை நாட்டின் சிறப்பை விரித்துக் கூறினராதலால் அம் மெய்ம்மைப் பண்பு தமக்கில்லையென அவை யடக்கியலாகக் 'குன்றை நகர்க் குலக் கவியே வல்லான்' என்றார். ஆல்; அசை. (கஉஅ)

**வரைப்பிண்டி மலர்தூவி வனப்பலர்**
**செதிர்சொரிந்த மலருள் மூழ்கி**
**நிரைக்கும்பூங் கணைதூவி மதனெம்மான்**
**விழிநெருப்புள் நிற்றல் காட்டும்**
**வரைத்துன்று கறிக்கொடிபோய்க் கடுக்கைமிசை**
**மரகதத்தோ ரணம்போல் தாவி**
**நிரைக்கிளியை வாரணமும் எதிர்நடப்பப்**
**பொருநர்நெடுங் கயிறு காட்டும்.**

**(பொ - ரை.)** *குறிஞ்சி நிலத்திலுள்ள அசோக மலரைச் சிந்தி முல்லை நிலத்திலுள்ள முள் முருக்குகள் தம் எதிரே சொரிந்த மலருள் முழுகுதலால் மன்மதனுைவன் தன் வில்லில் வரிசைப்படுத்திய மலரரும்புகளைச் சிந்தி எம் பெருமானுகிய சிவபெருமான் நெற்றிக்கண் கக்கிய நெருப்பில் நிற்றலை அவ்வசோகு காட்டாநிற்கும்; அக் குறிஞ்சி நிலத்தில் நெருங்கிய மிளகுக் கொடிசென்று கொன்றை மரத்தின் மீது மரகத தோரணம்போல் படர்தலால் வரிசையாகக் கிளியும் கானுங்கோழியும் தம்முள் மாறுபட்டு அதில் நடக்க, கழைக்கூத்தாடிகள் ஒருவர்க் கொருவர் தம் எதிரே நடந்து செல்கின்ற நீண்ட கயிற்றின் தன்மையை அக் கொடி காட்டா நிற்கும்.*

**(வி - ரை.)** *இதில் குறிஞ்சி நிலத்துக்கும் முல்லை நிலத்துக்கும் திணைமயக்கங் கூறியவாறு. அசோகு மிளகு கிளி: குறிஞ்சி நிலக் கருப்பொருள்கள். முள்முருக்கு கொன்றை கானுங்கோழி: முல்லைநிலக் கருப்பொருள்கள். இவை ஒன்ருேடொன்று சார்ந்து கலந்து திணைமயக்கமானமை உணர்க.* *(கஉகூ)*

**சுற்றெல்லா மலர்முல்லை தழைந்துபெருந்**
**தூறுசெய அதன்கீழ் எண்கு**
**பற்றிநுழைந் துறங்கநடு வளர்கொன்றை**
**மிசைக்கறிதாய்ப் படருந் தோற்றம்**
**உற்றரக்கன் வெள்ளிமலை யெடுத்தநாள்**
**வெரீஇத்தழுவும் உமையா ளோடும்**
**கற்றைவார் சடைப்பெருமான் நின்றநிலை**
**காட்டுவதும் உண்டால் அங்கண்.**

**(பொ - ரை.)** *சுற்றுப்புறங்க ளெங்கும் மலர்ந்த முல்லைக்கொடிகள் நெருங்கிப் பெரிய தூறு செய்யவும், அப்பற்றையின் கீழிடத்தைக் கரடிகள் தமக்குப் பற்றுக் கோடாகப் பற்றி நுழைந்து படுத்துறங்க அதன் நடுவில் வளர்ந்த கொன்றையின்மேல் மிளகுக் கொடி தாவிப் படர் கின்ற காட்சியானது இராவணன் புகுந்து வெள்ளி மலையை*

யெடுத்த காலத்தில் அஞ்சித் தழுவிய உமையம்மையோடும் நீண்ட திரளான சடையை யுடைய சிவபெருமான் நின்ற நிலைமையைக் காட்டுவதும் அவ்விடத்து உள்ளது.

(வி – ரை.) இதில் மலர்ந்த முல்லைச் செடியைக் கைலைமலை யாகவும், கரடியை இராவணனாகவும், கொன்றையைச் சிவபெரு மானாகவும், மிளகுக் கொடியை உமையம்மையாராகவும் உருவகித்துக்கூறி முல்லைக்கும் குறிஞ்சிக்கும் திணைமயக்கங் கூறிய வாறு காண்க. (கூ௦)

தாம்பயிலும் வரைக்கிளைத்த செயலைமலர்
கவர்மாரன் தன்மேற் சீறி
ஆம்பலினங் கழனியிற்போ யவன்சேமச்
சிலைக்கரும்பை அழித்துண் டார்க்கும்
பூம்படுகர்ப் பகட்டினங்கள் வெகுண்டெழுந்து
மலைச்சாரற் புனிற்று வாழை
தேம்பயில்செந் தினையனைத்தும் அழித்துழக்கி
மேய்ந்துவக்கும் செவ்வித் தோர்பால்.

(பொ - ரை.) யானைக் கூட்டங்கள் தாம் வாழ்கின்ற மலையில் தோன்றிய அசோகின் மலரைத் தனக்கு அம்பாகக் கொள்ளை கொள்ளும் மன்மதன்மேற் கோபங்கொண்டு மருதநிலத்திற் சென்று அம் மன்மதன் சேமமில்லாகிய கரும்பினை அழித்து உண்டு முழங்கும்; ஒரு பக்கத்தில் மலர்களையுடைய அம் மருதநிலத்திலுள்ள எருமைக் கூட்டங்கள் சினங்கொண்டெழுந்து மலைச்சாரலிலுள்ள இளமை பொருந்திய வாழையையும் இனிமை பொருந்திய சிவந்த தினைப்பயிர் யாவையும் அழித்துச் சிதைத்து மேய்ந்து மகிழும் தன்மையை யுடையது.

(வி - ரை.) இதில் குறிஞ்சி நிலத்துக்கும் மருதநிலத்துக்கும் திணைமயக்கங் கூறப்பட்டதறிக. என்னை?, அசோகு யானை தினை வாழை குறிஞ்சிநிலக் கருப்பொருள்கள்' கரும்பு எருமை மருத நிலக் கருப்பொருள்கள். யானை, இயற்கையாகக் கரும்பை உண்ணுதலை மன்மதன் கைக் கரும்பை வெகுண்டு உண்பதாகத் தற்குறிப் பேற்றந் தந்துரைத்தார். (கூக)

வரைக்குறக்கன் னியர்புனத்துக் குருகோட்டுங்
கவண்மணிக்கல் மருதத் தெண்ணீர்த்
திரைக்கயத்துத் திடர்செய்ய அந்நிலத்துச்
சிறுமகார் சினமீக் கொண்டு
விரைத்தகுழற் பேதையர்கள் வண்டலாட்
டயர்துறையின் மேவிப் பந்து
நிரைக்கழங்கும் அவரறலப் பறித்தெறிந்து
நீர்ச்சுனையைத் தூர்ப்பார் அங்கண்.

(பொ - ரை.) குறிஞ்சிநிலத்திலுள்ள குறப்பெண்கள், தினைப்புனத்தில் தினைக்கதிர்களைக் கவர வருகின்ற பறவைகளை, ஓட்டும் கவணில் வைத்தெறிந்த இரத்தின மணிகளாகிய கற்கள், மருதநிலத்தின்கணுள்ள தெளிந்த நீர் திரைத்தலையுடைய தடாகத்தை மேடாகச் செய்ய, அம் மருதநிலத்திலுள்ள அச் சிறுவர்கள் சினமிகுந்து, மணம் பொருந்திய கூந்தலையுடைய குறிஞ்சிநிலச் சிறுமியர்கள் விளையாடுகின்ற துறைகளைச் சேர்ந்து பந்தினையும் வரிசையையுடைய அம்மனையையும் அச் சிறுமியர் அலறப் பறித்து வீசி நீர்வடிவான சுனையை அவ்விடத்துத் தூர்ப்பார்கள்

(வி - ரை.) சுனை குறிஞ்சிநிலக் கருப்பொருள். கயம் மருதநிலக் கருப்பொருள் இதனால் குறிஞ்சிக்கும் மருதத்துக்கும் [illegible] மயக்கங் கூறியது காண்க. (கஅ உ)

தாமுமொரு பயப்படார் பயப்படுவார்
தம்மையுந்தம் போற்செய் வார்போற்
காமரளி நுகராமற் கழிப்பூமேல்
அடுக்கலுறுங் கணிதே னூற்றும்
ஆமிதனை அறிந்துவெகுண் டெழுந்தென்ன
அணிவேங்கைக் குடுமி தன்னை
நாம நீள் கடல்பவளக் கரநீட்டிப்
பற்றியிடு நலமும் ஓர்பால்.

**(பொ - ரை.)** தாமும் ஒரு பயன்படார், பயன்படு வோரையும் தம்மைப்போற் பயன்படாமற் செய்கின்ற உலோபர்களைப் போல, விருப்பஞ் செய்கின்ற வண்டுகள் நுகராமல் கழிகளிலுள்ள பூக்களின்மேல் மலைகளில் இருக்கின்ற வேங்கைமரங்கள் தேனைச் சொரியா நிற்கும்; ஆகின்ற இதனை அச்சத்தைத் தருகின்ற நீண்ட கடலறிந்து சினந்தெழுந்தாற்போல அழகிய அவ் வேங்கை மரத்தின் உச்சியைப் பவளக்கொடியாகிய கையை நீட்டிப் பற்றியிழுக்கும் வளமும் ஒரு பக்கத்தில் உள்ளதாகும்.

(வி - ரை.) இதனால் நெய்தல் நிலத்துக்கும் குறிஞ்சிநிலத்துக்கும் மயக்கங் கூறப்பட்டது. வேங்கைமலர் வண்டுண்ணாததாதலால், அம் மலர் வண்டுகள் உண்ணுங் கழியிலுள்ள மலர்களின் மேல் தேனைச் சிந்தி அம் மலர்களையும் வண்டுகள் உண்ணாவாறு செய்ததென்பார், 'தாமுமொரு பயப்படார் ........தம் போற் செய்வார் போல்' என்றார். கடல்படு பொருளாகிய பவளக்கொடி வேங்கை மரத்தின் உச்சிவரை படர்ந்திருத்தலை, வேங்கையின் செயல்கண்டு கடல் வெகுண்டு வேங்கையைப் பற்றியிழுப்பதாக இறும்பூதுறக் கூறினர். (கரு)

அலைக்காக மலைச்சாரற் பலாச்சுளையைக்
கவ்வியெழுந் தரக்கர் கோமான்
சிலைத்தாச ரதிமனையைக் கொண்டகன்று
லெனவங்கஞ் சேரு மந்நாள்
நிலைப்பான மதிலிலங்கை மிசைத்தாவும்
அனுமனைப்போல் நீள்வால் மந்தி
மலைப்பானின் றலைத்தோணி பாய்ந்துழக்கி
மீண்டெய்தும் வாழ்வும் அங்கண்.

**(பொ - ரை.)** நெய்தல்நிலத்திலுள்ள நீர்க்காக்கை மலைச்சாரலிலுள்ள பலாவின்சுளையை வாயிற் கௌவி மேலெழுந்து இராவணனுனவன் வில்லையுடைய இராமபிரான் மனைவியாகிய சீதையைக் கவர்ந்து இலங்கைக்குச் சென்றது போல மரக்கலத்தையடையும்; அக் காலத்து அச் சீதையைத் தேடி அழிவில்லாத மதில் சூழ்ந்த இலங்கை நகரின்

மேல் மயேந்திரகிரியினின்று தாவிப்பாயும் அநுமானைப் போல நீண்ட வாலையுடைய குரங்கு மலையில் நின்று நெய்தல் நிலத்துள்ள தோணிமேற் பாய்ந்து கலக்கித் திரும்பிப் பின்னர் மலையை யடையும் காட்சியும் அவ்விடத்துள்ளது.

(வி-ரை.) இதனால் நெய்தலுக்கும் குறிஞ்சிக்கும் திணை மயக்கங் கூறப்பட்டதறிக. (கங-ச)

இடைச்சியர்பால் நடைகற்பச் செல்வதென
வயல்மேவும் எகினம் எல்லாம்
படைத்தவளம் பாடியிற்போ யான்பாலை
வாய்மடுத்துப் பையுள் நீங்கும்
மடைத்தலைசூழ் வயல்மகளிர் மொழிபயிலப்
போவதென வனத்துள் வாழும்
பெடைக்குயில்போய்ப் பணைக்கமுகின் கனிதொண்டைக்
கனியென்னப் பேணும் ஓர்பால்.

(பொ-ரை.) இடைச்சியருடைய நடையைக் கற்கும் பொருட்டாக முல்லை நிலத்துக்குச் செல்வதுபோல, வயலிற் பொருந்திய அன்னங்கள் யாவும் வளப்பம் பொருந்திய முல்லை நிலத்திற்போய் பசுவின் பாலினைப் பருகித் தம் பசித் துன்பத்தினின்று நீங்கும்; நீர்மடைகள் சூழ்ந்த மருதநிலத் திலுள்ள பெண்களின் சொற்களைக் கற்கச் செல்வது போல முல்லைநிலத்தில் வாழும் குயிற்பெடை சென்று அம்மருத நிலத்திலுள்ள கமுகின்கனியைக் கோவைக்கனியென்று ஒரு பக்கத்தில் நின்று விரும்பா நிற்கும்.

(வி-ரை.) இதில் முல்லை மருதம் குறிஞ்சி ஆகிய மூன்று நிலங்கட்கும் திணைமயக்கங் கூறப்பட்டதறிக. (கங-இ)

கொடும்பரவர் கழியுழக்கக் குதித்தெழுமீன்
ஆய்ச்சியர்பாற் குடத்துள் வீழ்ந்தங்கு
அடும்பயத்தோ டலமருமற் றவர்கடையுந்
தயிரோதைக் கலமந் தோடி

**ஒடுங்குமுயல் கைதையினுள் அடங்கியங்கட்**
**கடலொலிகேட் டுள்ள மாழ்கும்**
**கடுங்கருமத் தொடரந்தோ யாங்குறினும்**
**விடாதென்னக் காட்டும் ஓர்பால்.**

**(பொ - ரை.)** *கொடுந் தொழிலையுடைய பரதவர் வலை வீச உப்பங் கழியைக் கலக்கக் குதித்து மேலெழுந்தமீன் முல்லை நிலத்திலுள்ள ஆய்ச்சியர் நிறைத்த பாற்குடத்தில் வீழ்ந்து அங்குக் காய்ச்சா நிற்கும் பாலோடு சுழலாநிற்கும்; அவ் வாய்ச்சியர் கடையும் தயிர் ஓசைக்குச் சுழன்றோடி அம் முல்லை நிலத்திலொடுங்கிய முயல், நெய்தல் நிலத்தி லுள்ள தாழைக்குள் அடங்கி, அவ்விடத்துக் கடலி னொலியைக் கேட்டு மன மயங்காநிற்கும்; கடுமைபொருந் திய கருமத்தொடர்பு ஐயோ தன்னைச் செய்தோன் எவ் விடத்திருந்தாலும் அவனை விடாது பற்றுதல்போல ஓர் பக்கத்தில் காட்டாநிற்கும்.*

**(வி - ரை )** *இதில் நெய்தல் நிலத்திற்கும் முல்லைநிலத்துக் கும் திணைமயக்கங் கூறப்பட்டது. முயல் தயிரோசைக்குப் பயந்து தாழைக்குள் பதுங்கியிருப்ப அவ்விடத்துக் கடலோசை எழுந்து ஒலித்தலால் அஞ்சும். இது 'வினைசெய்தவனை வினை அவன் எங்குச் செல்லினும் பற்றுநிற்கும் என்பதை எடுத்துக்காட்டினார். இது,*

> *'எனைப்பகை உற்றாரும் உய்வர் வினைப்பகை*
> *வீயாது பின்சென் றடும்'*

*என்னும் திருக்குறளானும் அறியற்பாலது.* (கடு௬)

**இடுகுமிடைக் கடைசியர்கள் களைந்தெறிந்த**
**நறுங்கமலம் இரைக்கு முந்நீர்ப்**
**படுதிரைமேல் வயங்குதலும் கடல்முளரி**
**பூத்ததெவன் பாரீர் என்பார்**
**உடைதிரைநீர்க் கடல்கிளைத்த துகிர்க்கொடிபோய்ப்**
**பழனமிசை யொளிரக் கண்டோர்**
**கடிவயலுந் துகிரீன்ற தென்னென்பார்**
**இப்பரிசு கவினும் ஓர்பால்.**

**(பொ - ரை.)** வருந்துகின்ற இடையையுடைய மருத நிலப் பெண்கள் களைந்தெறிந்த நன்மணங்கமழும் தாமரை யானது, நெய்தல்நிலத்தில் ஒலிக்கும் கடலிற் பொருந்திய அலைமேல் விளங்க அக்கடல் தாமரை பூத்தது என்ன காரணம் பாரீரென அந்நில மாக்கள் கூறுவார்கள்; கரை யோடு மோதி உடைபட்ட அலைகளையுடைய நீர்மயமாகிய கடலில் முளைத்த பவளக்கொடியானது படர்ந்து வயலின் மேல் தோன்றுநிற்க, அதைக் கண்டோர்கள் விளக்கம் பொருந்திய வயலும் பவளக்கொடியைப் பெற்றது யாது காரணம் என்பார்கள்; இத்தன்மை ஒருபக்கத்தில் அழகு செய்யாநிற்கும்.

(வி - ரை.) இதில் மருதநிலத்துடன் நெய்தல்நிலத்திற்குத் திணைமயக்கங் கூறப்பட்டதறிக. (கஅஎ)

**வரைப்புறத்துப் பசுங்கிளியுங் கான்குயிலும்**
**உடனுன்பால் மடுத்துப் புட்கள்**
**இரைத்தெழுபூம் பணைமருதச் சேக்கைமிசை**
**யெதிரெதிருற் றிசைகள் பாடும்**
**நிரைக்குடுமி வரைப்பகடும் வயற்பகடும்**
**கரும்பொடித்து நெரித்து மாந்தித்**
**திரைத்தடநீர்க் கான்யாற்றுத் திளைத்தாடி**
**உடனுறங்குஞ் செவ்வித் தோர்பால்.**

(பொ - ரை.) குறிஞ்சிநிலத்திலுள்ள பச்சைக் கிளி களும் முல்லை நிலத்திலுள்ள குயில்களும் ஒருசேர ஆவின் பாலினைப் பருகி, பறவைகள் ஒலித்தெழுகின்ற மலர்களை யுடைய வயலில் மருத மரத்தின்மீதுள்ள படுக்கையின் மேல் எதிரெதிரேயிருந்து இசைகள் பாடாநிற்கும்; ஒரு பக்கத்தில் உச்சி வரிசையையுடைய குறிஞ்சிநிலத்தி லுள்ள யானைகளும் மருதநிலத்திலுள்ள எருமைக்கடாக் களும் அந்நிலத்திலுள்ள கரும்பை ஒடித்துத் தம் வாயால் நெரித்துச் சுவைத்து, பெரிய அலைகளையுடைய நீர்வடி

வாகிய காட்டாற்றில் படிந்து விளையாடல் செய்து ஒருசேரக் கண் தூங்கும் தன்மையை யுடையது.

(வி - ரை.) இதில் குறிஞ்சி மருதம் முல்லைநிலங்கட்குத் திணைமயக்கங் கூறப்பட்டதறிக, (கரு அ)

புறவகத்த குமிழ்ம்போதுங் கழிக்கானற்
கைதைதரும் பொலங்கேழ்ப் பூவும்
தரைபொறுத்த வரைதோன்றித் தண்மலர்மேல்
இருபுடையுந் தாங்கி நின்றே
இறைவனுக்கா மலர்மோந்தாள் மூக்கரிந்து
சுரிகையுடன் ஏந்தி அந்நாள்
முறைநிறுத்த செருத்துணையார் நின்றநிலை
காட்டிவளமுகிழ்க்கும் ஓர்பால்.

(பொ - ரை.) ஒரு பக்கத்தில் முல்லை நிலத்திலுள்ள குமிழ மலரையும் இளஞ்சோலை சூழ்ந்த கழிகளிலுள்ள தாழைகள் தருகின்ற பொன்னிறம் வாய்ந்த மலரையும் நிலவுலகஞ் சுமந்த மலையானது தன்னிடத்து மலர்ந்த தண்ணிய காந்தள் மலர்மேல் இரண்டு பக்கமுந் தாங்கி நின்று சிவபெருமானுக்குச் சூட்டுகின்ற மலரினைமோந்து வழிபாட்டின் முறைமையினின்றும் வழுவிய அரசன் மனையாளின் மூக்கை யரிந்து அவ்வுடை வாளோடு தம் கையிலேந்தி அக்காலத்து வழிபாட்டு முறைமையை நிலைபெறச் செய்த செருத்துணை நாயனார் அன்பின் வழிபட்டு நின்ற நிலைமையைத் தெரிவித்து வளப்பம் ஊட்டா நிற்கும்.

(வி - ரை.) குமிழ் முல்லைநிலக் கருப்பொருள்; தாழை நெய்தல்நிலக் கருப்பொருள்; காந்தள் குறிஞ்சிநிலக் கருப்பொருள். இதனால் முல்லை நெய்தல் குறிஞ்சிநிலக் கருப்பொருள் ஒன்றோடொன்று மயங்குதல் கூறப்பட்டதறிக. (கருகூ)

விண்முட்டுங் குடுமிவரைத் திகிரிபடும்
வெண்முத்தும் வேலைச் சூழல்
மண்முட்ட நறும்புன்னை உகுமரும்பும்
தலைமயங்கி அவற்றுட் சேர்ந்த

**தண்முட்டை இதுவென்னப் பகுத்தறிய**
**வல்லாது தளர்வு கொண்டு**
**கண்முட்ட வளம்படைத்த வயலன்னம்**
**துயர்கூருங் காட்சித் தோர்பால்.**

**(பொ - ரை.)** *ஒரு பக்கத்தில் வானுலகத்தைப் பொருந்திய கொடுமுடியையுடைய மலையிலுண்டாகிய மூங்கிலில் தோன்றிய வெள்ளிய முத்தும், கடற்கரையின் நிலத்தில் பொருந்த நறுமணங் கமழுகின்ற புன்னைமரங்கள் உதிர்த்த அரும்புகளும் இடமயங்கிக் கிடத்தலினால் அவைகளோடு கலந்த குளிர்ச்சியுள்ள தம் முட்டை இதுவென்று பகுத்தறிய வல்லமை இல்லாமையால் தளர்ச்சி கொண்டு பார்ப்பவர் கண்கள் வழுக்க வளம்நிறைந்த வயல்களில் அன்னங்கள் துன்பமிகும் காட்சியை யுடையது.*

**(வி - ரை.)** *மூங்கில்: குறிஞ்சிநிலக் கருப்பொருள்; புன்னை நெய்தல்நிலக் கருப்பொருள்; அன்னம்: மருதநிலக் கருப்பொருள். மூங்கில் உதிர்த்த முத்தும் புன்னை தூற்றிய அரும்பும் அன்னம் ஈன்ற முட்டையும் கலந்து தலைமயங்கிக் கிடத்தலால் குறிஞ்சி நிலத்தோடு நெய்தலுக்கும் மருதத்துக்கும் மயக்கங் கூறப்பட்டதறிக.*

*அன்னம், மூங்கில் முத்தையும் புன்னை யரும்பையும் தன் முட்டையையும் வேற்றுமை காணாது மயங்குதலால்* **மயக்கவணி.**

*இதனை ஒப்ப மறைசையந்தாதியில்,*

*'கானவண் டலையினில் நத்தீனும் முத்தினைக் காமரன்னம்*
*தானண்டம் என்றணைக் கும்மறைக் காட்டுறை சங்கரனே'*

*என வரும் அடிகள் ஒப்பு நோக்கி மகிழற்பாலது.* *(கசo)*

**குறுஞ்சுனையிற் களிவண்டு சுழன்றாடுங்**
**கான்குயில்கள் குரைநீர்ப் புன்னை**
**தொறும்பொதுளுங் கருங்கொடிதன் குடம்பையிற்போய்க்**
**கருவுயிர்த்துச் சுலவி மீண்டு**

**நறும்பிரச மலர்க்காஞ்சிச் சினையேறி**
**ஒளியிருந்து நாடிக் காலம்**
**உறுந்துணையும் இனிதுறையும் உலவாத**
**வளங்காட்டி ஓங்கும் ஓர்பால்.**

**(பொ - ரை.)** ஒரு பக்கம் குறுஞ் சுனைகளில் கள்ளுண்டு களித்த வண்டுகள் சுழன்றாடும்; முல்லை நிலத்திலுள்ள குயில்கள், ஒலிக்கின்ற கடற்கரையிலுள்ள புன்னை மரங்கள் தோறும் நெருங்கிய கரியநிறக் காக்கையின் கூட்டிற் சென்று முட்டையை ஈன்று சுழன்று அங்கு நின்றும் திரும்பி நறுமணங் கமழும் தேன்சிந்து மலர்களையுடைய காஞ்சிமரத்தின் கிளையிலேறி ஒளித்திருந்து ஆராய்ந்து குஞ்சாகும் காலம் வாய்க்குமளவும் இனிதாக வாழும் கெடாத வளத்தைக்காட்டி உயர்ந்து தோன்றா நிற்கும்.

**(வி - ரை.)** இதில் முல்லை, நெய்தல், மருதம் இவற்றிற்கு மயக்கங் கூறப்பட்டது.

குயில் காக்கைக் கூட்டில் முட்டையிட்டுக் குஞ்சு பொரித்தலையும் பிற அதன் இயல்புகளையும் கீழ்வரும் சீவகசிந்தாமணிச் செய்யுளால் அறிக.

[1] வருந்தி யீன்றாள் மறந்தொழிந்தாள்
வளர்த்தாள் சொற்கேட் டில்கடிந்தாள்
முருந்தின் காறும் கூழையை
முனிவார் நின்னை என்முனிவார்
பொருந்திற் றன்றால் இதுவென்னாப்
பொன்று மளித்திவ் வுயிரென்னாய்
திருந்து சோலைக் கருங்குயிலே
சிலம்ப 'இருந்து கூவுதியால்'

களிவண்டு: முக்கால வினைத்தொகை. கான்-காடு. பிரசம்-தேன்.
(கசக)

[1] சீவகசிந், கனகமாலை: க0௫.

**கறிக்கொடியும் துகிர்க்கொடியும் நெடுவயலைப்**
**பசுங்கொடியும் கமழ்தேன் மௌவல்**
**வெறிக்கொடியும் நாற்றிசையும் தாய்ப்படர**
**நடுவளர்ந்த விரைக்கு ராமேற்**
**கிறிக்கொடிய பெருங்காற்றாற் பல்காலும்**
**அசைபாவைக் கிளர்ச்சி வாள்கண்**
**மறிக்கொடியும் கூத்தியர்செய் கயிறுவிசி**
**கழைக்கூத்தின் வயங்கும் ஓர்பால்.**

**(பொ - ரை.)** *ஒரு பக்கத்தில் மிளகுக்கொடியும் பவளக்கொடியும் நெடிய வயலையின் பசிய கொடியும் தேன் கமழுகின்ற மல்லிகையின் மணமிக்க கொடியும் நான்கு திசைகளிலும் தாவிப்படர நடுவே வளர்ந்த மணமிக்க குராமரத்தின்மேல் கிறியென்னும் ஒலிக்குறிப்பையுடைய கொடிய பெரிய காற்றினால் பலகாலும் அசைகின்ற அக் குராவின் காயாகிய பாவையின் தோற்றம் கண்ணாகிய மானுக்கு வாளானது தோற்கின்ற கழைக்கூத்தர்கள் ஆடுங் கயிறு கட்டிய கழைக்கூத்தைப்போல் விளங்கும்.*

**(வி - ரை.)** *கிறி என்பது மரக்கிளைகள் ஒன்றோடொன்று உராய்தலால் உண்டாகும் ஒலி. இஃது இக்காலத்துக் 'கிறிச்' என்று வழங்குகின்றது.*

*இதில் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் ஆகிய ஐவகை நிலத்திற்கும் மயக்கங் கூறப்பட்டமை அறிக. வயலை வசலை எனவும் பசலை எனவும் வழங்கும்.* *(கசஉ)*

**இனையநா ளிலமடுத்த வளாகமெலாம்**
**பெருங்குடிகள் இயல்பின் ஓங்கித்**
**தினையளவு முறைபிறழாத் தொண்டைநாட்**
**டணிமுழுதுந் தெரித்துக் கூறக்**
**கனைதிரைநீர்க் கடலாடை நிலவரைப்பின்**
**யாருளரோ கற்ப நாட்டும்**
**தனைநிகர்பா தலதலத்தும் அன்னதே**
**யெனிற்பிறிது சாற்று மாறென்.**

**(பொ - ரை.)** இத்தகைய வளங்களையுடைய மருதம் முதலிய நால்வகை நிலங்களும் சூழ்ந்த இடப்பரப்புகளில் எல்லாம் செல்வம் மிக்க குடிகள் முறைதவறாது மேம்படுதலினால் தினையளவும்கூட மனுநெறியினின்றும் தவறாத தொண்டைநாட்டின் சிறப்பு முழுதும் ஆராய்ந்து கூறுதற்கு ஒலிக்கின்ற அலைகளையுடைய நீர் வடிவமாகிய கடலை ஆடையாகவுடைய நிலவுலகில் எவருள்ளனர்? கற்பக நாடாகிய வானுலகத்தினும் தனக்குத்தானே ஒப்பாகிய கீழுலகத்தினும் அத்தன்மைத்தானால் வேறே எடுத்துச்சொல்லும் வகை யாது?

**(வி - ரை.)** நால்நிலம்: "முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன. வளாகம்-பரப்பு. முறையென்பது அவ்வந் நிலத்து ஒழுக்கம். இடத்து நிகழ்பொருளின் தொழிலை இடத்தின் மேலேற்றி 'முறைபிறழாத் தொண்டைநாடு' என்றார். தினை என்பது சிறிய அளவைக் குறிக்கஎடுத்துக்காட்டும் ஓர் அளவைப் பெயர். பேரளவுக்குப் பனையை யெடுத்துக்காட்டுவது ஆன்றோர் மரபு. இதனை,

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்."

என்னும் திருவள்ளுவப் பயனானும் அறிக. (கசரு)

எந்நாட்டுப் பெருவளனும் எவ்வெவர்கோட்
பாடுகளும் இயம்ப வல்ல
பொன்னாட்டுப் பொன்செருக்கும் பன்னாக்குப்
பணிச்செருக்கும் போக்கும் இந்த
நன்னாட்டைப் புலவரெலாம் தொண்டைநா
டெனவுரைப்பர் ஞால மங்கை
தன்னாட்போ தனையமுகக் கனிவாயாங்
காரணத்தின் சார்பாற் போலும்.

**(பொ - ரை.)** எந்த நாட்டினுமுள்ள அளவற்ற வளங்களையும் எவரெவர் தழுவிய கொள்கைகளையும் எடுத்துக்கூறவல்ல பொன்னுலகத்துள்ள வியாழனின் இறுமாப்

பையும் பல நாவினையுடைய ஆதிசேடன் செருக்கையும் போக்குகின்ற இந்த நல்ல நாட்டினைக் கல்வியில் மிக்க அறிவையுடையவரெல்லாம் தொண்டை நாடென்று சொல்வர்; நிலமகளுடைய அன்றலர்ந்த தாமரைமலர் போன்ற முகத்திலுள்ள கோவைக்கனிபோன்ற வாயாகிய காரணத் தாற்போலும்.

(வி - ரை.) எவற்றையும் ஆய்ந்து அளவுபடுத்திச் சொல்லும் ஆற்றல் வாய்ந்தோன் வியாழன் பல நாக்கு உடைமையால் மிக விரித்துச்சொல்ல வல்லான் ஆதிசேடன். இவர்தம் செருக் கொழிய அறிவாற்றலும் சொல்லாற்றலும் மிக்க நாடு 'தொண்டைநாடு' என்பாராய்ப் 'புலவரெலாம் தொண்டை நாடென உரைப்பர்' என்றார். ஆன்றோரும், 'தொண்டை நன்னாடு சான்றோருடைத்து' என்பதறிக. இதனால் மேலுலகத்தும் கீழுலகத்தும் அறிவினும் சொல்லும் திறத்தினும் இந்நாட்டுக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லையென்றபடியாம் (கசச)

சலதியுடைச் சேயிழைக்குத் தமிழ்நாடே
மதிமுகமாத் தமிழ்நாட் டுள்ளும்
அலர்புகழ்த்தண் டகநாடே கனிவாயா
அதனுள்ளுஞ் சாதி பேதம்
குலவுமா ருயிர்க்கெல்லாம் தத்தமது
மரபொழுக்கங் குடங்கை சேரா
மலகமெனத் தேற்றுதலின் நாவெனலாம்
காஞ்சிநகர் வண்மை சொல்வாம்.

(பொ - ரை.) கடலை ஆடையாகவுடைய நிலமகளுக்குத் தமிழ்மொழி வழங்குகின்ற நாடே திங்களை யொக்கும் முகமாகவும், அத்தமிழ் நாட்டுள்ளும் பரந்த புகழையுடைய தண்டகநாடே கோவைக் கனியையொத்த வாயாகவும், அத் தண்டக நாட்டுள்ளும் பல்வகை மரபு வேறுபாடுகளாக விளங்காநின்ற அரிய உயிர்களுக்கெல்லாம் தம்தம் மரபினையும் ஒழுக்கத்தினையும் உள்ளங்கையிலுள்ள நெல்லிக்கனி போலத் தெளிவித்தலால் நா என்று சொல்லப்பெறுகின்ற காஞ்சி நகரத்தின் வளப்பத்தை இனி எடுத்துக்கூறுவாம்.

(வி - ரை.) கடல், உலகினைச் சூழ்ந்திருத்தலால் உலகை நிலமகளாகவும் கடலை ஆடையாகவும் கூறுவது கவிகளின் மரபு. இதனை,

'நீராருங் கடலுடுத்த நிலமகள்' என்பார், மனோன்மணீய ஆசிரியர் சுந்தரம்பிள்ளை. பண்டைக்காலத்துச் சான்றோரும்,

1"அலைநீ ராடை மலைமுலை ஆகத்து
ஆரப்பேர் யாற்று மாரிக் கூந்தல்
கண்ணகன் பரப்பின் மண்ணக மடந்தை."

என்று கூறுதல் கொண்டும் அறியப்பெறும்.

இதில் உலகமகளுக்கு முகம் தமிழ்நாடு; அம் முகத்திற்கு வாய், தண்டகநாடு; அதனை உள்ளங்கை நெல்லிக்கனியெனத் தெளிவித்தலால் நாவு, காஞ்சிபுரம்; அதன் சிறப்பை இனி எடுத்துக்கூறுவாம் எனத் திருநாட்டுப் படலத்தை முற்றுவித்து, திருநகரப்படலச் சிறப்புக் கூறுதற்குத் தோற்றுவாய் கூறினர்.

(கசரு)

## திருநாட்டுப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—களஉ

1. சிலப். ரு: க-ங.

# திருநகரப் படலம்

## அறுசீரடி ஆசிரிய விருத்தம்

**கச்சிமா நகரோர் தட்டும்**
**கடவுளர் உலகோர் தட்டும்**
**வைச்சுமுன் அயனுர் தூக்க**
**மற்றது மீது செல்ல**
**நிச்சய முறுகித் தாழ்ந்து**
**நிலமிசை விழுமிவ் வூரை**
**இச்சகத் தூர்க ளோடும்**
**எண்ணுதல் மடமைப் பாற்றே.**

**(பொ-ரை.)** *பெருமை பொருந்திய கச்சித் திரு நகரத்தை ஒரு தட்டிலும் வானுலகத்தை ஒரு தட்டிலும் வைத்து முன்பு பிரமனுர் நிறுத்துப்பார்க்க, அவ்வானுலகம் கனமில்லாமையால் மேலே செல்ல, உறுதியாகக் கனமுடைமையினுல் முறுகித்தாழ்ந்து நிலவுலகத்தின் மீது வீழ்கின்ற இவ்வூரினை இந்நிலவுகிலுள்ள நகரங்களோடும் இந் நகரத்தையும் ஒன்ருகக் கருதுதல் அறியாத்தன்மையை யுடையது.*

*(வி - ரை ) காஞ்சி நகரம், வானுலகம் ஆகிய இரண்டின் கனத்தையும் கனமில்லாத தன்மையையும் அறிதற்குப் படைப்புக் கடவுளாகிய பிரமன் துலாக்கோலில் இட்டுத் தூக்கியபோது காஞ்சிநகர் கனமுடைமையால் கீழிறங்கியதென்றும், வானுலகம் கனமின்மையால் மேலே சென்றதென்றும் காரணங்காட்டிக் கூறினுர். இதனை,*

> *" தூக்கின், மெலியது மேல்மேல் எழச்செல்லச் செல்ல*
> *வலிதன்றே தாழும் துலைக்கு"*

*என்பதால் தெளிக. வைத்து, வைச்சு என்பது போலி. நிச்சயம்- உறுதிப்பாடு.* (க)

கவினெலாம் திரட்டிக் காஞ்சிக்
 கடிநகர் ஆக்கிக் கஞ்சத்
தவிசினேன் அதன்பால் நுட்பச்
 தொழில்செயச் சார்ந்த காலைப்
புவியிடைக் கழிந்த சேடம்
 பொற்பவே றெடுத்து விண்ணாடு
அவிர்தரச் செய்தான் போலும்
 அன்றிவே றுரைப்ப தென்னே.

**(பொ - ரை.)** *செந்தாமரை மலரை இருக்கையாக வுடைய பிரமன், அழகையெல்லாம் ஒன்றுபடுத்திக் காஞ்சியென்னும் காவல்வாய்ந்த நகரமாக ஆக்கி, அதனிடத்து நுட்பமாகிய தொழிலைச் செய்யத் தொடங்கிய காலத்து, நிலவுலகில் கழிந்த எச்சத்தை அழகுமிக வேறேயெடுத்து வானுலகு விளங்க அமைத்தான் போலும்! இது அன்றி வேறு எடுத்துக் கூறுவது யாதுளது?*

**(வி - ரை.)** *பிரமனனவன் அழகைத்திரட்டிக் காஞ்சி நகரத்தை நுட்பமில்லாததாக முன்னர் உண்டாக்கிப் பின்னர் நுட்பமாக அந்நகரைச் சித்திரிக்கப் புகுந்ததிலிருந்து கழித்த மிச்சத்தைக்கொண்டு வானுலகைப் படைத்தனன் எனக்கூறி, நகரத்தின் மேன்மையை விளக்குதற்கு 'செய்தான் போலும் அன்றி வேறுரைப்பதென்னோ?' என்றார்.* (உ)

ஆதிநாள் முக்க ணெம்மான்
 அயன்தனைப் படைத்து வேதம்
ஓதுவித் தருளி னேக்கி
 உலகெலாம் படையென் றேவும்
போதிது பார்த்திவ் வாறு
 படையெனப் புகன்று வைத்தான்
ஈதெனல் ஆகுங் காஞ்சி
 என்னுரை அளவைத் தாமே.

**(பொ - ரை.)** *முன்னாளில் மூன்று கண்களையுடைய எம்பெருமானாகிய சிவபெருமான் பிரமனைப் படைத்து,*

மறைகளை ஓதுவித்து அருளாற பார்த்தருளி உலகங்களை யெல்லாம் நீ படைப்பாயாக என்று ஏவியகாலத்தில், இதைப் பார்த்து இவ்வாறாகப் படையென்று சொல்லிவைத்தான்; அஃது இதுதான் என்று சொல்லப்படும் காஞ்சி நகராயிற்று என் சொல்லினளவில் அடங்கியதோ? (இல்லையென்றபடி.)

(வி - ரை.) சிவபெருமான் உலகைப் படை என்று பிரமனுக்குக் கூறிய காலையில் இக் காஞ்சிநகரைப் பார்த்து இதைப்போல் படைக்க என்று கூறினா ரென்றமையால் இந்நகரம் உருவினும் திருவினும் தனக்கு ஒப்பற்றதெனக் கூறியவாறும். (ந)

இந்நகர் நோக்குந் தோறும்
இமையவர் தமது நாடு
நன்னரென் றிருந்த தம்மைத்
தாங்களே நாணி வைவர்
முன்னொரு சமயந் தன்னைப்
பொருளென முற்றி நின்றோர்
பின்னர்வான் சைவம் எய்தப்
பெறினவர் பேசு மாபோல்.

(பொ - ரை.) முன்பு ஒரு சமயத்தையே பொருளென்று அன்புமுறுகி நின்றவர், பின்பு சிறந்த சைவசமயத்தை அடையப்பெற்றால் அவர்கள் பின்னர்த் தாம் முன் கைக்கொண்ட சமயத்தை இகழ்ந்து பேசுமாறுபோல, தேவர்கள் இந்தத் திருநகரைப் பார்க்குந்தோறும் தமது பொன்னாடு நல்ல நாடென்று செருக்குக்கொண்டிருந்த தங்களைத் தாங்களே நாணி வைவார்கள்.

(வி - ரை) பின் இரண்டடிகள் உவமையாக வந்தமையால் முதற்கண் வைத்துப் பொருள் கூறப்பட்டது. சைவசமயத்தைச் சார்ந்தோர் பின்னர் வேற்றுச்சமயத்தைச் சிறந்ததாகக் கருதாராதலால் 'பெறினவர் பேசுமாபோல்' என்றார். இதனால் சைவ சமயத்துக்கு ஏற்றங்கூறித் தமது குறிக்கோளை ஆசிரியர் நிறுவினாராவர். (ச)

நீடுமிந் நகர மன்னி
நெடுந்தவ முயல்வோர் வான
நாடர்தம் பதமுங் கஞ்சன்
நாரணன் வலாரி வைப்பும்
பாடிரி கான்ற சோருக்
காண்பதிப் பதியின் வண்மை
கோடியில் ஒருகூ றெவ்வா
அவையெனக் குறித்தே யன்றே.

(பொ - ரை.) *செல்வமிக்க இந்நகரில் தங்கி மிக்க தவத்தைச் செய்கின்ற பெரியோர், மற்றைத் தேவர்களுடைய பதவியையும் பிரமன் திருமால் இந்திரனாகிய இவர்கள் உலகத்தையும் பெருமையினின்று நீங்கிய கக்கப்பட்ட சோறாகக் காணுதல், இக் காஞ்சிநகரத்தின் வளமையில் கோடியில் ஒரு பங்கேனும் அப்பதவியும் உலகங்களும் ஒவ்வா என்று கருதியே அல்லவா?*

(வி - ரை.) *இக்காஞ்சித் திருநகர் வீடுதரும் தலமாதலால் வீட்டை விரும்பித் தவஞ்செய்வோர்கள் பரலோக இராகம் உடையராயிருப்பராதலால் "பாடிரி கான்ற சோருக் காண்பது" என்றார். வானுடர் முதலியோர் பதங்கள் நிலையற்ற போகத்தைத் தருவன ஆதலால் இக் காஞ்சிக்குக் 'கோடியில் ஒரு கூறெவ்வா' என்றார். இதனால் காஞ்சிநகரின் சிறப்புக் கூறியவாறாம். (ஒ)*

*புறநகர்—சோலை*

எழுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

சுரும்புகா லுழக்க முகையுடைந் தலர்ந்து
துளித்ததீஞ் சுவைமதுப் பிலிற்றும்
அரும்பெறற் சோலை மீமிசைக் கருவி
முகிற்குழா மடர்வபாட் டளிக்கு
விரும்புதே னளியாக் கற்பக நாட்டை
வெல்லுவான் வருவதோர்ந் தஞ்சித்
தரும்புகழ் வலாரிநீயூர்தியைச் செலுத்தித்
தடுத்திடை மடக்குதல் மானும்.

**(பொ - ரை.)** வண்டுகள் காலால் உழக்க அரும்புக ளானவை உடைந்து மலர்ந்து இனிய சுவைமிக்க தேனைச் சிந்தும் பெறுதற்கரிய சோலையின்மேல் தொகுதியாகிய மேகக்கூட்டங்கள் நெருங்குதல், இசைப்பாட்டையுடைய வண்டுகளுக்கு யாவரும் விரும்புகின்ற தேனைக் கொடாத வானுலகத்தை வெல்லவருதலை ஈட்டிய புகழினையுடைய இந்திரன் தெரிந்து அச்சம் மிகுந்து தனது ஊர்தியைச் செலுத்தி இடையில் தடுத்து மடக்குதலையொக்கும்.

**(வி - ரை.)** சோலை, தன்பால் வந்தடைந்த எவ்வகை உயிர் கட்கும் தண்ணிய நிழலும் கனியும் மெல்லிய தென்றற்காற்றுந் தந்து உதவுதலால் 'அரும்பெறற் சோலை' என்றார். மேகக் கூட் டங்கள் சோலைமேற் படிந்திருத்தலை சோலைகள் வெல்லுதற்கு மேலோங்கி யெழுதலைக்கண்டு இந்திரன் தன் ஊர்தியாகிய மேகத் தைக்கொண்டு தடுத்தலாகத் தற்குறிப்பேற்ற அணி தோன்றக் கூறினார். (சு)

நறவமூற் றெடுப்பச் சிறகர்வண் டிமிரும்
நளிபொழில் இடும்பைகூர்ந் தழகு
குறைபடப் பொதிந்த குயின்களை வல்லே

நிறைபுனல் தடத்துப் பிறழ்தருங் கிழமை
நெட்டிள வாளைமீன் தனக்குத்
துறைதொறும் கைம்மா றெனக்கனி செழுந்தேன்
சொரிவன நெடுமரப் பொதும்பர்.

**(பொ - ரை.)** தேன் ஊற்றெடுக்கச் சிறகுகளையுடைய வண்டுகள் இசைபாடுகின்ற மலர்ச் செறிவினையுடைய சோலை கள் துன்பங்கூர்ந்து தன் அழகு குன்ற அதன்மீது படிந்த மேகங்களை மேலே விரைந்து குதித்தெழுந்து உதைத்து உதைத்துப் போக்கி நீர்நிறைந்த தடாகத்தில் மீண்டு வீழ்ந்து பிறழும் உரிமையையுடைய நீண்ட இளமைவாய்ந்த வாளைமீனுக்கு நீண்ட மரங்களையுடைய அச்சோலைகள் நீர்த்துறைகள்தோறும் அதற்குக் கைம்மாறு செய்வது போலக் கனிகளையும் செழித்த தேனையும் சிந்தாநின்றன.

(வி - ரை.) மலர்களையுடைய சோலைகளின் பொலிவு குன்ற மூடிய மேகத்தின்மேல் வாளை மீன்கள் மேலே குதித்துக் கலக்க, அச் சோலைகள் அக் கலக்குதலால் தேன் சிந்துதலை, சோலைகள் வாளைமீன்கள் தமக்குச்செய்த உதவிக்குக் கைம்மாறு செய்தலாகத் தற்குறிப்பேற்றந் தந்து கூறினர். (எ)

வண்டலாட் டயரும் வாள்மருள் நெடுங்கண்
மங்கையர் நெரிசுரி கூந்நற்
கொண்டலைக் காணுந் தொறுந்தொறும் அவர்தம்
கோமளச் சாயலுக் குடைந்து
தொண்டுபூண் டெதிர்நின் றுடுவ தேய்ப்பத்
தோகைமா மயில்நடங் குயிற்றும்
தண்டளிர் துவன்றிப் புதுநறுத் துளிக்கும்
ததைமலர்ச் சாகையம் பொதும்பர்.

(பொ - ரை.) குளிர்ந்த தளிர்களால் நெருங்கப்பட்டுப் புதிய தேனைச்சிந்தும் பொலிவமைந்த மலர்கள் நெருங்கிய கிளைகளையுடைய அழகிய பொழில்களில் விளையாடுகின்ற வாள் மயங்கும் நீண்ட கண்களையுடைய பெண்களது நெரிந்த கடைகுழன்ற மேகமாகிய கூந்தலைக் காணும் போதெல்லாம், அப் பெண்களுடைய மென்மைவாய்ந்த சாயலுக்குத் தோற்று அடிமைபூண்டு எதிரேநின்று ஆடுதலையொப்பத் தோகையையுடைய பெருமைவாய்ந்த மயில்கள் நடனம் ஆடாநிற்கும்.

(வி - ரை.) மயில்கள் சோலைகளிற் பெண்களின் கூந்தலை மேகமாகக் கருதி ஆடுதலை, அப்பெண்களின் சாயலுக்குத் தோற்று வேறுபோதற்கு இடமின்மையால் அடிமைப்பட்டு ஆடியதாகக் குறித்தார். தொறும் தொறும் என்னும் அடுக்கு பன்மைப் பொருள் குறித்து நின்றது. (அ)

வாம்பெருந் திரைய தடம்புடை உடுத்த
வளம்பொழிற் சாகைகள் தோறும்
தீம்புனல் குடையும் மாதரார் முன்றுட்
செறித்தபட் டாடைபொன் னணிகள்

**பூம்புனல் அகத்தில் தோன்றலும் இளையோர்**
**புனலர மகளிரென் றஞ்சிக்**
**கூம்பிய கரத்தர் அந்நலார் நகைப்பக்**
**குலைமிசை நோக்கிவெள் குவரால்.**

(பொ - ரை.) *தாவுகின்ற பெரிய அலைகளையுடைய தடாகங்களின் அருகே சூழ்ந்த வளப்பம் வாய்ந்த சோலையின் மரக்கிளைகள் தோறும் இனிய நீரில் நீராடும் பெண்கள் முன்னாளில் நெருங்கச் சேர்த்த பட்டாடையும் பொன் அணிகளும் பொலிவமைந்த அத் தடாகப் புனலில் தோன்ற, இளமை பொருந்திய ஆடவர், அவ்வெதிர்த் தோற்றங்களை நீரர மகளிரென்று கருதி அச்சமிகுந்து தலைமேற் குவித்த கையையுடையவர்களாகப் பெண்கள் அவரொடு கரைமேல் நின்று நோக்கிப் புன்னகை செய்ய அவ் ஆடவர்கள் நாணங் கொள்வார்கள். ஆல் : அசை.*

(வி - ரை.) *கரத்தர்: முற்றெச்சமாக வந்தது. மரக்கிளைகளில் போட்ட பெண்களின் பட்டாடைகளும் பொன் அணிகளும் தடாகத்தில் எதிர்த்தோற்றமளித்தலை ஆடவர் நீரர மகளிர் என்று மயங்குதலால் மயக்கவணி. குலை-செய்கரை.* (கூ)

**கொங்கவிழ் பொதும்பர்க் கொழுமுகை உடைந்து**
**குளிர்மதுச் சொரிதலின் ஆழ்ந்த**
**பங்கயச் சேக்கை மீமிசை எகினம்**
**பைப்பய மேனிவந் தெழுவ**
**பொங்குவெம் பாவக் கருமுருட் டமணற்**
**புணரியுட் சிலையுடன் அமிழ்ந்தும்**
**எங்கள்வா கீசர் அஞ்செழுத் தருளால்**
**எழுந்துமேல் வயங்குதல் மானும்.**

(பொ - ரை.) *மகரந்தம் பரவிய சோலைகளில் கொழுத்த அரும்புகள் நெகிழ்ந்து குளிர்ந்த தேனைச் சிந்துதலினால் அத்தேனது பெருக்கினால் அழுந்திய தாமரையாகிய படுக்கையின்மேல் அன்னங்கள் மூழ்கி மெல்ல*

மெல்ல மேலே கிவந்தெழுதல், மிக்க கொடிய பாவச்செயலை யுடைய கருநிற முருடராகிய சமணரால் கடலில் கட்டி விடப்பட்ட கல் தூணோடு ஆழ்ந்த எங்கள் வாகீசராகிய திருநாவுக்கரசர் ஐந்தெழுத்து மந்திர மொழியால் எழுந்து மேலே தோன்றுதலை ஒத்திருக்கும்.

(வி - ரை.) திருநாவுக்கரசரைச் சமணர்கள் கோட்பாட்டினால் கல்லிற்கட்டிக் கடலிற் போட்ட காலையில் 'சொற்றுணை வேதியன்' என்னும் பதிகம் ஓதி அக்கல்லே தெப்பமாகக்கொண்டு கரையேறிய வரலாற்றை, தாமரை மலரின்மீது அன்னங்கள் தேன் பெருக்கின்மேல் கிவந்தெழுதற்கு ஒப்புரைத்தார். (௧0)

யானைக்கூடம்

கலிவிருத்தம்

முறைமுறை பனைக்கைநீர் முகந்து வாய்மடூஉ
நிறைதடம் குறைதடம் ஆக்கும் நீண்டவெண்
பிறைமருப் பொருத்தல்மா மதப்பெ ருக்கினுற்
குறைதடம் நிறைதடம் ஆக்குங் கொள்கைத்தே.

(பொ - ரை.) நீண்ட வெண்ணிற இளம்பிறையை யொத்த கொம்பினையுடைய ஆண் யானைகள் முறைமுறையாகப் பனந்துண்டை யொத்த தம் துதிக்கையினால் நீரினை மொண்டு வாய்மடுத்து நீர்நிறைந்த தடாகங்களை நீர் குறைந்த தடாகங்களாகச் செய்யாநிற்கும்; பெரிய மதப் பெருக்கினால் நீர் குறைந்த அத்தடாகங்களை நீர் நிறைந்த தடாகங்களாகச் செய்யுங் கொள்கையையுடையன.

(வி - ரை.) யானை பருகுதலால் நீர் நிறைந்த தடாகம் குறைபடுமெனவும், யானை மதப்பெருக்கினால் குறை தாடகம் நிறை தடாகமாகுமெனவும் கூறுதலால் யானைமிகுதி கூறியவாறறிக. (௧௧)

தாமுறை இடந்தரி யலர்கட் கீந்தவர்
தாமுறை இடங்களில் தங்கி லைக்குலம்
தாமுறப் பரிவருத் தனைசெய் வேழங்கள்
தாமுறை முறைதிரி தண்டம் எண்ணில.

(பொ - ரை.) தாம் வாழ்கின்ற காட்டிடத்தைப் பகைவர்கட்குக் கொடுத்து அப்பகைவர் வாழும் இடங்களில் தம் யானைக்கூட்டங்கள் தாம் வாழ இடமாற்றம் செய்யும் யானைகள் முறை முறையாக உலவுகின்ற யானை செல்லும் வழிகள் அளவற்றனவாகும்.

(வி - ரை.) யானைகள், காடாகிய இழிந்த பொருளைக் கொடுத்து நாடாகிய உயர்ந்த பொருளைப் பெறுவதாக மாற்றுநிலையணி தோன்றக் கூறினார். (கஉ)

மழைப்புனல் தங்கள்மேல் ஊற்று மாமுகில்
உழைச்செல வெகுண்டெதிர் இறைப்ப தொப்பநீள்
புழைக்கையில் நிறையநீர் முகந்து போர்மதத்
தழைச்செவிக் கரிகள்விண் தலத்து வீசுவ.

(பொ - ரை.) போர்த்தொழிலையும் மதப்பெருக்கையுடைய செவிகளையும் உடைய யானைகள், மழைநீரைத் தங்கள்மேற் பெய்யும் பெரிய மேகத்தினிடத்தில் செல்லத் தாம் கோபித்து எதிரே நீர் இறைத்தலைப்போல, நீண்ட பொருந்திய துதிக்கைகளால் நீர்நிறைய மொண்டு

(வி - ரை.) தழை முதனிலைத் தொழிற்பெயர். தமக்கு இடையூறு செய்த மேகத்துக்கு யானைகள் இடையூறு செய்தலாகக் குறித்தார். (கங)

கறையடிச் சுவடெனும் கனக வட்டில்கள்
நிறையவாக் கியமத நீரைச் செல்வர்போற்
சிறையளிக் குலமெலாம் தெவிட்ட உண்டுவாழ்ந்து
அறைபெரு வளத்தன ஆம்பல் வீதியே.

(பொ - ரை.) யானை செல்லும் வீதிகள் உரலையொத்த தம் கால்களின் சுவடென்னும் பொன்வட்டில்களில் நிறைய வார்த்த மதநீரை, செல்வர்களைப்போலச் சிறகினையுடைய வண்டின்கூட்டங்களெல்லாம் தெவிட்ட உண்டு வாழ்ந்து ஒலிக்கின்ற பெரிய வளத்தையுடையன.

(வி - ரை.) யானைகள் செல்லும் வீதிகளில் அவற்றின் காற்சுவடு தோய்ந்த இடங்கள் தோறும் மதநீர் பெருகியிருக்க அங்கே அந் நீரை உண்டு வண்டுகள் முழங்கிச் செல்வர்போல் இன்பமாக வாழும் என வீதியின் சிறப்புக் கூறினர். (கச)

**கொடையினிற் கீழ்ப்படும் கொண்டல் யாவையும்**
**தடைபடச் சிறையிலிட் டாங்குச் சார்கடு**
**நடையிரு முறச்செவி நான்ற வாய்க்களிறு**
**அடையவும் பிணித்தன அளவில் கூடமே.**

**(பொ - ரை.)** அளவில்லாத யானைக்கூடங்கள் கொடையினால் தமக்குக் கீழான மேகங்கள் யாவற்றையும் தடைப் படும்படி சிறைப்படுத்தினற்போல, பொருந்திய விரைந்த நடையையும் இரண்டு முறங்களை யொத்த காதுகளையும் தொங்கி அசைகின்ற வாயையுமுடைய யானைகளை ஒரு சேரக் கட்டின.

(வி - ரை.) நகரில் வாழ்வோர், தம் கூடங்களில் (யானைக் கொட்டிலில்) யானைகளைக் கட்டியிருத்தலைத் தம் கொடைக்குப் புறங்கொடுத்த மேகங்களைச் சிறைவைத்ததாகக் குறித்தார். (கரு)

தேரைப்பந்தி

**கரியுமிழ் விலாழியும் காய்சி னக்கடும்**
**பரியுமிழ் விலாழியும் பாய்ந்து சேறுசெய்**
**தெருவெலாம் அந்நலார் சீற டிச்சுவடு**
**உருகெழு தாமரைத் தோற்றம் ஒக்குமே.**

**(பொ - ரை.)** யானை உமிழ்கின்ற வாய்நுரையும் காயும் சினமும் கடுநடையுமுடைய குதிரைகள் உமிழ் கின்ற வாய் நுரையும் எங்கும் பாய்ந்து சேறாகும் தெருவெல்லாம் தோய்ந்த அந்நகரிலுள்ள பெண்களின் சிற்றடிச் சுவடானது வடிவமிக்க தாமரை மலரின் பொலிவினை ஒத்துத் தோன்றும்.

(வி - ரை ) இதில் யானை குதிரைகளின் வாய்நீர்ப் பெருக்கினால் சேறான தெருக்களில் பெண்கள் நடந்த காற்சுவடானது,

தாமரைமலரின் பொலிவை ஒத்துத் தோன்றுமென்றமையால் அந்நகரிலுள்ள பெண்கள் பெண்மை இயற்கை மிக்க அழகுள்ளாரென்றபடியாம். (கசு)

சுலவுகொய் யுளையடிச் சுவடு தோறுமேற்
கலனையின் உக்கசெம் மணிக திர்ப்பன
பலசுடர்த் தகழிகள் பரப்பி வைத்தெனக்
குலவுநல் வளத்தன குந்த வீதியே.

(பொ - ரை.) குதிரைகள் செல்லும் வீதிகள், கொள்ளிவட்டமாகச் சுழன்று செல்லும் குதிரைகளின் காற்சுவடுகள் தோறும் அக்குதிரைகளின் மேலுள்ள கலனையினின்றும் சிதறிய சிவந்தநிற மாணிக்கங்கள் விளங்குதல், பல விளக்குகளைப் பரப்பி வைத்தாற்போல விளங்குகின்ற நல்ல வளங்களையுடையன.

(வி - ரை.) குதிரையின் காற்சுவட்டைத் தகழியாகவும் சேணத்தினின்றும் சிதறிய மாணிக்கங்களை விளக்குகளாகவும் ஒப்புமைக்கூட்ட உவமையணி நயந்தோன்றக் கூறினார். (கஎ)

மல்லரை மயில்களை வான ரங்களைப்
புல்லிய முயல்களைப் பொருச ரங்களை
வல்லவா புறக்கொடை கண்ட வான்கதிப்
பல்லியற் புரவியின் பந்தி ஆயிரம்.

(பொ - ரை.) மல்லர்களையும் மயில்களையும் குரங்குகளையும் அற்பத்தன்மையுடைய முயல்களையும் போர்செய்தற்குரிய அம்புகளையும் (வெல்லுதல்) வல்லபடி அவற்றை முதுகுகண்ட பெரிய கதிகளையுடைய பல நல்லிலக்கணம் வாய்ந்த குதிரையின் பந்தி (வரிசை)கள் எண்ணிறந்தன.

(வி - ரை.) ஆயிரம் என்பது அளவற்றன என்பதைக் குறித்து நிற்கும் குறிப்புச்சொல். போரில் பொருது போர்வீரர்களை வெல்லுதல் வன்மையுடைமையால் குதிரைகளின் வலிமையும். மயிலும் வானரமும் விரைவில் மேம்பட்டன ஆதலால் அவற்றினும் விரைவுள்ள குதிரைகளின் விரைந்த செலவும் குறிப்பாராய்ப் 'புறக்கொடை கண்ட...புரவி' என்றார். புறக்

கொடை - புறங்கொடுத்தல். அஃதாவது புறமுதுகிட்டோடித் தோல்வி யடைதல் என்னும் பொருளது. (கஅ)

தேர்நிலை

மதக்கரி தனைமுயல் வயங்கொள் காதையைப்
புதுக்கவிங் கிருளொளிப் பொலிவைப் பற்றியீர்த்து
அதிர்ப்பதென் றுளங்கொளக் கரிய வாங்குர
கதத்தொகை பற்றுபொற் றேர்க ணக்கில.

(பொ - ரை.) மதத்தையுடைய யானையை முயல் வெற்றிகொண்ட பழைய கதையைப் புதுப்பித்தற்கு மிக்க இருளானது ஒளிமிகுதியைப் பற்றியிழுத்து ஒலிக்கின்ற தெனக் கண்டோர் கருத, கரிய நிறத்தையுடையனவாகிய குதிரையின் கூட்டங்கள் பிடித்திழுக்கின்ற பொன்னாற் செய்த தேர்கள் அளவில்லாதன.

(வி - ரை.) யானையை முயல் வெற்றிகொள்ளும் இடம், பொதுவிடங்களில் ஒன்று. இது பழங்காலத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி. யானையைக் கோழி வென்றதாக வரலாறு கூறுவர் இளங்கோவடிகள். அது,

[1]'முறஞ்செவி வாரணம் முன்சமம் முருக்கிய
புறஞ்சிறை வாரணம்'

என்பது. இதுபோற் கொள்க. இருள் ஒளியைப்பற்றி இழுத்தல் போலக் கருங்குதிரைகள் பொன்தேரைப்பற்றி இழுத்துக் கனைத்தன எனக் குதிரைகளின் நிறமும் பேராற்றலும் புலப் படுத்துக் கூறினர். (கசு)

எரிமணிச் சோதியுள் மூழ்கி யீர்த்துச்செல்
பரிகளைக் காண்கிலர் பார்த்துச் சூரனார்
திருவுடை யிந்திர ஞாலத் தேர்கொலென்று
உருகெழச் செல்லுதேர் உலப்பில் வீதியே.

(பொ - ரை.) நெருப்புப்போல் விளங்கும் மாணிக்கத் தின ஒளியினுள்ளே மூழ்கி இழுத்துச் செல்லுகின்ற

1. சிலப், க0: உசஎ-அ.

குதிரைகளைக் காணாமல் தேரினைக்கண்டு சூரபன்மன் நடாத்திய அழகுமிக்க இந்திரசாலத்தேரோ என்று கருதுமாறு அச்சம் மிகச் செல்லுகின்ற தேர்கள் நீங்காத வீதிகள் உள்ளன.

(வி - ரை.) சூரபன்மன் வீரவேள்வி செய்து சிவபெருமான் பால் பல்வகை வரங்களையும் பெற்று இந்திரசாலத்தேரையும் பெற்றனன் என்பது கந்தபுராண வரலாறு. இந்திரசாலம் கண்களுக்குத் தோன்றி மறைவது. இக்குதிரைகளும் தேரின் பொன்னொளியால் மறைவதால் அச் சூரபன்மன் தேரோவென ஐயுறற்கிடனானதென்க. இந்திரசாலம்: இந்திர ஞாலமென வந்தது போலி. (உ0)

## வீரர் இருக்கை

**நால்வகை நிலையினாற் பயிலும் நாமவில்**
**வேல்வளை பலகைவாள் கற்கும் விஞ்சையர்**
**கோலவான் விஞ்சையர் குழாங்கள் நோக்குபு**
**சால்பினை வியத்தகு தலைமைப் பாலரே.**

(பொ - ரை.) பைசாசம் முதலிய நான்கு வகைகளின் நிலைமையினால் அச்சந் தருகின்ற வில் வேல் சக்கரம் கேடகம் வாள் இவைகளை யேந்திக் கற்கும் வித்தை பயில்வோர் ஆகிய வீரர்கள், அழகிய வானுலகிலுள்ள வித்தியாதரர் கூட்டங்கள் பார்த்துத் தம் தன்மையை வியக்கத்தக்க தலைமைத் தன்மையுடையோராவர்.

(வி - ரை.) பைசாச முதலிய நால்வகை நிலைகளாவன: பைசாசம், மண்டிலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என்பன. பைசாசமாவது: ஒருகால் நிலைநின்று ஒருகால் முடக்கி அம்பெய்தல்; மண்டிலமாவது: இரண்டு கால்களும் பக்கத்தில் வளைய மண்டலித்து (வட்டமிட்டு) எய்தல்; ஆலீடமாவது: வலக்கால் மண்டலித்து இடக்கால் முன்வைத்தெய்தல்; பிரத்தியாலீடமாவது: வலக்கால் முன்வைத்து இடக்கால் மண்டலித்தெய்தல். இவ்வாறு போர் செய்யும் வீரர் நிலைகண்டு வித்தியாதரர் வியப்புற்றனர் என்க. நோக்குபு: செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (உக)

**கிம்புரி புரசைகள் கிடுகு கூவிரம்**
**அம்பொனிற் கலனைகுப் பாயம் ஆதிய**

**வெம்படை யேனவும் வேறு வேறுசெய்**
**பம்பிய வினைஞர்வாழ் இடம்பல் லாயிரம்.**

**(பொ - ரை.)** *யானைக்கொம்பின் பூணும் யானைகளின் கழுத்திடு கயிறுகளும் தேரின் மரச்சுற்றுகளும் தேர்க் கொடிஞ்சிகளும் அழகிய பொன்னாலான கலனைகளும் சட்டைகளும் முதலாகிய கொடிய ஆயுதங்களும் அவை யொழிந்தனவும் வெவ்வேறாகச் செய்யும் நெருங்கிய ...யோர் வாழ்கின்ற இடங்கள் அளவற்றன.*

(வி - ரை.) *இவை புறநகரிலுள்ளோர் செயல்கள். இனி இடை நகரின் தன்மைகளை விளக்கமுறக் கூறுவர்.* (உஉ)

**நடைநக முதலிய உலவு நாமநீர்ப்**
**புடைநகர் வளமிது புகன்றும் திங்களேர்**
**உடைநக மழைநிகர் ஓதி யார்பயில்**
**இடைநகர் வளமினி இயம்ப லுற்றதே.**

**(பொ - ரை.)** *யானைகள் முதலியன வாழ்கின்ற அச்சத்தைத்தரும் நீர்ப்பெருக்குச் சூழ்ந்த புறநகரின் வளப்பம்; இதனை எடுத்துக்கூறினோம். இனி நாம் எடுத்துக் கூறத் தொடங்குவது, பாதிப்பிறைபோலும் அழகு பொருந் திய நகத்தினையும் மேகம் போன்ற கூந்தலையுமுடைய பெண்கள் வாழ்கின்ற இடைநகரின் வளமாகும்.*

(வி - ரை.) *நகம்-மலை. மலைபோன்ற தோற்றமுடைத் தாய் நடந்து வருகின்ற தன்மையினால் யானையை 'நடை நகம்' என்றார், 'வருங்குன்றம் ஒன்றுரித்தோன்' என்புழிப் போல. நாமம்-அச்சம்.* (உங)

*இடைநகர்*

அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

**குடமுலைக் கெதிரென் றேதுங்**
**குரும்பையை வெகுண்டு மின்னார்**
**பொடியிடி உலக்கை மீப்போய்ப்**
**புடைத்தன மீளா முன்னம்**

**முடிமிசை அதிரத் தாக்கிச்**
**சிந்துமுப் புடைக்காய்த் தெங்கீங்கு**
**இடரிடர்க் கெதிர்செய் வோரின்**
**வியத்தக எங்கும் ஓங்கும்.**

**(பொ - ரை.)** *தம்முடைய குடத்தைப் போன்ற கொங்கைகட்கு எதிரென்று சொல்லப்படுகின்ற தென்னங் குரும்பையை, மின்னலையொத்த பெண்கள் சினம் மிகுந்து சுண்ணப்பொடி இடிக்கின்ற உலக்கையை மேலோச்சச் சென்று மோதித் திரும்புதற்கு முன்னரே அப்பெண்களின் தலைமீது அதிரத்தாக்க உதிர்க்கின்ற இளநீரையுடைய தெங்குகள், இந்நிலவுலகில் துன்பஞ்செய்வோர்க்கு எதிர்த் துன்பஞ் செய்வோரைப்போல வியக்குமாறு எல்லா இடங் களிலும் மிக்கு விளங்கும்.*

(வி - ரை.) குரும்பை - தென்னம்பிஞ்சு. மின்னார் - மின் னலை யொத்த பெண்கள். மீ-மேல். முப்புடைக்காய்-மூன்று பக்கங்களினும் புடைப்பினையுடைய காய், தேங்காய். மணப் பொடியை இடிப்போர், உலக்கையை மேலெடுத்தோச்ச அது குரும்பையைத் தாக்க உடனே தெங்கு அப்பெண்கள் தலையில் மோதும்படி இளநீரை உதிர்த்தல், தமக்குத் துன்பஞ் செய் வோர்க்கு எதிர்த்துன்பஞ் செய்வோரின் செயலை ஒத்திருப்பதாக எடுத்துக்காட்டி உலகியலை விளக்கினார். (உச)

**கோல்வளை கறங்கக் கொங்கை**
**அசைதரக் குலையக் கூந்தல்**
**மேலணி கலக லென்ன**
**வியர்வெழ உயிர்ப்பு நீள**
**வால்வரிப் புனைபந் தாடும்**
**மாதரார் செயல்காண் தோறும்**
**கால்வரி கழலி னார்க்குக்**
**காமமீக் கூரும் மாதோ.**

**(பொ - ரை.)** *அழகிய வளைகள் ஒலிக்கவும், கொங்கை கள் குலுங்கவும், தமது கூந்தல் அவிழ்ந்து தொங்கவும், தமது மேலணிந்த அணிகள் கலகலென்று ஒலிக்கவும்,*

வியர்வை தோன்றவும், பெருமூச்சு மிக்கெழவும், வெள்ளிய வரிந்து புனைந்த பந்து விளையாடும் பெண்களது செயலைக் காணுந்தோறும் காலிற் கட்டிய வீரகண்டையையுடைய ஆடவர்க்கு (அவர்கள்பால்) காம மீதூராநிற்கும்.

(வி - ரை.) கறங்கல், அசைதல், குலைதல், கலகலெனல், வியர்வெழல், உயிர்ப்பு நீளுதல் முதலியன மகளிர் பந்தாடுங்கால் நிகழும் அவர்தம் மெய்க்கண் உண்டாம் வேறுவேறான செயல்களைக் குறித்து நின்றன

இவ்வாறே சிலப்பதிகார வாழ்த்துக் காதைக் கந்துக வரியில்,

[1] 'பொன்னிலங்கு பூங்கொடி பொலஞ்செய்கோதை வில்லிட
மின்னிலங்கு மேகலைகள் ஆர்ப்ப ஆர்ப்ப எங்கணும்
தென்னன் வாழ்க வாழ்கவென்று சென்றுபந் தடித்துமே
தேவரார மார்பன் வாழ்க என்றுபந் தடித்துமே'

என வருமாற்றால் கண்டின்புறுக. (உ௬)

தமதுரு நிறத்தை வவ்வும்
தருக்கறிந் தொறுப்பார் போலத்
தமனியம் தகர்த்த சுண்ணம்
ஒருவர்மேல் ஒருவர் வீசத்
தமனியச் சுண்ணம் எங்கும்
பரந்தன தவழ்த லாலே
தமனிய உலகந் தன்னை
அசிப்பன தடந்தேர் வீதி.

(பொ - ரை.) பொன்னானது தனது உருவின் பொலிவைக் கொள்ளைகொள்கின்ற செருக்கையறிந்து ஒறுப்போர்போல, அதனை உடைத்த சுண்ணப்பொடியை ஒருவர்மேலொருவர் வீசி விளையாட, அப் பொற்சுண்ணமானது எங்கும் பரவித் தவழ்தலினால் பரந்த தேர் செல்லும் தெருக்கள் பொன்னுலகை நகையாடுதலை ஒத்

(வி - ரை.) தமனியம்-பொன். பரந்தன: முற்றெச்சம். ...ல் மகளிர் சுண்ணப்பொடி இடித்து அதனை ஒருவர்மேலொரு

1. சிலப், உ௯: உ௦.

வர் எறிந்து தூவி விளையாடுதலைக் கூறிச் செல்வச் சிறப்பை விளக்கினார். வீதிகளிற் பொற்சுண்ணம் பரவித்தவழ்தலை பொன்னுலகத்தை நோக்கி நகையாடுதலாக வியப்புறக் கூறினார். (உசு)

எரிமணி சோதி கால
இருள்வர வறியா மாடத்து
அரிவையர் கூந்த லூட்டும்
அகிற்புகை நாகத் தெய்திப்
பெரிதிருள் விளைப்ப நோக்கும்
பெற்றியோர் தட்டு மாறு
மரீஇயின உலகம் என்னே
யெனமனம் மருள்வர் அம்மா.

**(பொ - ரை.)** *நெருப்புப்பொறியை யொத்த மாணிக்க மணிகள் ஒளியைக் கக்குதலினால் இருள் வருகையை அறியாத மேன்மாடத்தில் பெண்கள் கூந்தலுக்கு ஊட்டுகின்ற அகிலின் புகையானது விண்ணுலகத்தையடைந்து மிகவும் இருளை உண்டாக்க, அதனைப்பார்த்த இயற்கைத்தன்மை யுடைய தேவர்கள் நமது பொன்னுலகமும் நிலவுலகமும் நிலைமாறிப்பொருந்தின இது யாது காரணமென்று மனம் மயங்குவார்கள். அம்மா : வியப்பிடைச்சொல்.*

**(வி - ரை.)** *மேன்மாடங்களில் இருளே வாராதவாறு மாணிக்கமணிகள் இருளையோட்டுதல் என்றமையால் செல்வத்தால் மாளிகைகள் மாணிக்கத்தையே கொண்டு இழைத்தமை விளக்கி நகரச்சிறப்புக் கூறினார். மங்கையர் கூந்தலுக்கு ஊட்டும் நறும்புகை விண்ணுலகு சென்று இருளைப் பரப்பினமையால் தேவருலகு இருள் மூடியமை கூறித் தேவர்கள் மருட்சி கொள்வதாகக் குறித்து மயக்கவணி இன்பம் பெறவைத்தார்:* (உஎ)

மாற்றவள் பூசை யாற்றி
வரம்பெறு முறைமை கேளா
ஏற்றமார் கங்கை யாளும்
கம்பர்பால் வரத்திற் கெய்திச்

**சாற்றருங் கச்சி மூதூர்**
**வலங்கொளும் தகைமைத் தாய**
**ஆற்றல்சால் அகழி ஆழம்**
**அகலமார் அளக்க வல்லார்.**

**(பொ - ரை.)** *தன் சக்களத்தியாகிய உமையம்மை பூசனைசெய்து வரம்பெற்ற முறைமையைக் கேள்விப்பட்டு உயர்வுகொண்ட கங்கைமாதும் திருவேகம்பரிடத்துத் தானும் வரம்பெற அடைந்து, சாற்றுதற்கு அரிய காஞ்சி யாகிய பழமையாகிய ஊரினை வலஞ்செய்கின்ற தன்மையை ஒத்துள்ளதான வலிமைமிக்க அகழியின் ஆழத்தையும் அக லத்தையும் அளவிட வல்லவர் எவர்?*

**(வி - ரை.)** *காஞ்சித் திருநகரினை அகழி புடை சூழ்ந்திருத் தலை, உமையம்மை காஞ்சியிற் சிவபெருமானை வழிபாடு செய்து வரம்பெற்றதைக் கேள்விப்பட்டுக் கங்கையும் வரம்பெறுதற்கு அந் நகரில் வந்து வலஞ்செய்தலை ஒக்குமெனத் தற்குறிப் பேற்ற அணி இன்பந்தோன்றக் கூறிச் சக்களத்திப் பகைமை எவரை யும் விடாதெனக் உலகியல்புரைந்து வியப்புச்சுவை பெறவைத் தார்.* (உஅ)

**நெடிபடு பொதும்பர் சூழ**
**நிரைதிரைக் கரத்தாற் செம்பொன்**
**தடமதில் பொதியப் புல்லும்**
**தண்கிடங் கிறைவர் ஏவக்**
**கடல்களே வளைய நோக்கிக்**
**கம்பரை இறுகப் புல்லும்**
**சுடர்மணிக் கங்கை மானும்**
**துளித்தநீர் தழும்பு மானும்.**

**(பொ - ரை.)** *வண்டுகள் பொருந்திய சோலைகள் புறத்திற்சூழ வரிசைப்பட்ட அலையாகிய கைகளினால் சிவந்த பொன்னால் அமைந்த பெரிய மதில்களை இறுகத் தழுவுகின்ற குளிர்ச்சிமிக்க நீர்க்கிடங்கு, சிவபெருமான் ஆற்றுமல் ஏவக் கடல்களே தன்னைச்சூழ வளையப்பார்த்துத்*

திருவேகம்பரை இறுகப்புல்லுகின்ற விளங்குகின்ற மணிக் கற்களையுடைய கங்காதேவியை ஒக்கும்; அவ்வகழிமதில் மேல் துளித்த நீரானது தழும்பினையொக்கும்.

- ரை.) பொன்மதிலைச் சிவபெருமானாகவும், நீர்க் கிடங்கை அகழியாகவும், புறத்திற் சூழ்ந்த சோலையைச் சிவபெருமான் ஏவிய கடல்களாகவும், அகழி தன் அலைகளால் மதிலைத் தழுவுதலை அக் கடலுக்கு அஞ்சிக் கைகளால் தழுவுவதாகவும், அம்மதிலின்மேல் துளித்த நீர்த்துளியைச் சிவபெருமான்மேல் தழும்பிய தழும்பாகவும் கூறி, இந்நகர்க்கண் அம்மை ஆற்றிய தவச்சிறப்புத் தோன்றுமாறு அமைத்த ஆசிரியரின் சதுரப்பாடு வியந்து போற்றற்குரியது. (உகூ)

**திரையெறி தரளம் பாங்கர்த்**
**திரண்டுவா லொளிகள் வீசிக்**
**குரைபுனல் குளிக்கும் வேழக்**
**குழாத்தைவெண் கயமாச் செய்யக்**
**கரைமிசைக் காண்போர் என்னே**
**இம்மையே கடவுள் தன்மை**
**புரைதபத் தருமித் தீர்த்தம்**
**எனஇறும் பூது கொள்வார்.**

**(பொ - ரை.)** அலைகள் ஒதுக்குகின்ற முத்துக்கள் பக்கத்தில் திரண்டு வெள்ளிய கதிர்களை வீசி ஒலிக்கின்ற நீரில் குளிக்கும் கருநிற யானைகளை வெள்ளை யானையாகச் செய்தலால் கரையில் நின்று காண்போர் இஃதென்ன வியப்பு! இப்பிறப்பிலேயே குற்றந்தீரத் தெய்வத்தன்மையை இத்தீர்த்தந் தாராநிற்குமென்று வியப்படைவார்கள்.

(வி - ரை.) அலைகளால் ஒதுக்கப்படுகின்ற முத்துக்களின் வெண்ணிற ஒளியினால் அகழியில் நீராடியெழுந்த யானைகள், தம் கருநிறமாறி வெண்ணிறமாகத் தோன்றலினால் அவற்றைக் கண்டோர், மற்றைத் தீர்த்தம் மறுபிறப்பில் தெய்வத்தன்மையைத் தருவது; இத்தீர்த்தம் இப்பிறப்பிலேயே தெய்வத்தன்மையைத் தந்தது என வியந்தனர் என்பது இத்தீர்த்தத்தின் சிறப்புக் கூறியவாறாம். (௩0)

கடம்படு களிநல் யானை
குண்டகழ் கலக்கிக் கொட்பத்
தடங்கரை யேறற் கார்த்துத்
தாட்டொடர் பிணித்துப் பாகர்
இடம்பட இருபால் ஈர்ப்ப
இருங்கடல் அமுதம் உண்ணத்
தொடங்குநாட் சிலம்பு நட்டுச்
சுராசுரர் கடைதல் மான.

**(பொ - ரை.)** *மதத்தினால் மிக்க செருக்கினையுடைய நல்ல யானை ஆழ்ந்த அகழியைக் கலக்கிச் சுழலுதலினால் அது பெரிய கரையில் ஏறுதற்குக் காலிற் சங்கிலி பூட்டிப் பிணித்து யானைப்பாகர்கள் இருபாலும் பரவி நின்று இழுத்தல், பெரிய கடலில் அமுதம் உண்ணும்படி தொடங்கிய நாளில் மந்தரமலையை நாட்டித் தேவர்களும் அவுணர்களும் இருபக்கமும் நின்று கடைதலை யொப்பத் தோன்றும்.*

**(வி - ரை.)** *ஈர்ப்ப: இழுத்தல் என்னும் பொருட்டு. தோன்றும் என்னும் வினைமுற்றுப்பயனிலை தொக்குநின்றது.*

நவமணி கொழித்துப் பொங்கு
நளிதிரை அகழி நாப்பண்
கவளமாக் கடத்த யானைக்
கணஞ்சுலாய் உழக்குங் காட்சி
உவர்படாப் பௌவ மீதென்
றுவந்துவந் தெழிலி தெண்ணீர்
சுவறவாய் மடுப்பக் கொட்குந்
தோற்றமே அனைய தம்மா.

**(பொ - ரை.)** *மாணிக்கம் முதலிய ஒன்பதுவகை மணிகளையும் கரையிற் கொழித்துப் பொங்குகின்ற செறிந்த அலைகளையுடைய அகழியின் நடுவில் கவளங்கொள்ளுகின்ற பெரிய மதத்தையுடைய யானையின் கூட்டங்கள் சுழன்று கலக்குகின்ற தோற்றம், மேகங்களானவை உப்பற்ற கடல்*

இதுவென்று மகிழ்ந்துவந்து தெளிந்த நீர்வற்றப் பருகச் சுழலும் தோற்றத்தை ஒத்திருந்தது. அம்மா: வியப் பிடைச்சொல்.

(வி - ரை.) அகழியின் நடுவில் நிற்கின்ற யானைகளின் தோற்றம், மேகங்கள் வந்து நீர்வற்றப் பருகுதலை ஒத்திருந்தது என, யானை மிகுதி கூறினர். (௩௨.)

இத்தகை அகழி என்னும்
இதுவுமோர் கடலே யாக
அத்தினல் இரட்டி என்று
நேழெனை அறைவர் மேலோர்
தத்தலைக் கடைக்கால் வட்டச்
சலதியும் இஃது மன்றச்
சுத்தநீர்க் கடலென் றெண்ணி
ஒருமையில் தொகுத்தார் போலும்.

(பொ - ரை.) இத்தன்மையையுடைய அகழியென் னும் இதுவும் ஒரு கடலாய் இருக்க, அதனால் அறிவின் மேலோர் தூயநீர்க்கடல் இரட்டைப்பட எட்டென்று கூறாது உவர்க்கடல் முதலியவற்றோடு கூடி. ஏழ் என்று கூறுகிற்பர்; ஏழென்னும் ஈற்றிலுள்ள தாவிப்பரவும் அலை களையுடைய வட்டமாகிய நன்னீர்க்கடலும் இவ்வகழியும் உறுதியாகத் தூயநீராதலால் தூயநீர்க் கடலென்று கருதிச் சாதியொருமையால் தொகுத்து ஏழென்று வைத்தனர் போலும்.

(வி – ரை.) இவ்வகழி, தூயநீர்க்கடல் போன்று இடமகன் றிருத்தலால் இதையும் சேர்த்துக் கடல் எட்டென்று கூறாது ஏழென்று கூறுவது, சாதியொருமையாற் கூறினர்போலும், எனக் கூறி இவ்வகழியின் பெருமை தோன்ற வைத்தார். (௩௩)

புடைபயில் பொதும்பர்த் தேனும்
புனல்மலர்த் தேனும் பாய்ந்து
விடையவர்க் குமையாள் ஆட்ட
வருமது வேலை ஒக்கும்

**குடநிகர் செருத்தல் மேதி**
**கொட்புறச் சொரிந்த பாலால்**
**உடைதிரை அகழி தீம்பால்**
**அளக்கரும் உற்றால் ஒக்கும்.**

**(பொ - ரை.)** *கரையோடு மோதியுடைந்த அலையை யுடைய அகழியானது, பக்கத்தில் அமைந்த சோலையில் உள்ள தேனும் நீரில் மலர்ந்த பூக்களிலுள்ள தேனும் பாய்தலால், எருதுவாகனத்தையுடைய இறையவர்க்கு உமையம்மை ஆட்டவரும் மதுக்கடலை ஒத்துத்தோன்றும்; குடத்தையொத்த மடியினையுடைய எருமைகள் விழுந்து சுழலச் சொரிந்த பாலினால் இனிய பாற்கடலும் அங்கு வந்து சேர்ந்தால் ஒக்கும்.*

**(வி - ரை.)** *சோலையிலிருந்து சொரிந்த தேனும் நீரில் மலர்ந்த மலர்த்தேனும் பாய்தல், உமையம்மை இறைவர்க்கு ஆட்டிய தேன் அபிடேகத்தை ஒத்திருந்தது; எருமைகள் சொரிந்த பால்பெருக்கம்' பாற்கடல் அங்கு வந்திருத்தலை ஒத்திருந்தது. இதனால் தேன் பெருக்கும், பாற்பெருக்கும் கூறியவாறறிக.* (௩௯)

**பழமுதற் பொருள்கள் விற்கும்**
**பாவையர் நாளும் அந்திப்**
**பொழுதினக் கலன்க ழீஇய**
**வண்டலாற் புனற்கி டங்கு**
**வழிபடும் உமையாள் எந்தைக்**
**காட்டுமா லியங்கள் ஒன்றும்**
**கழிவுறு சூழத் தேங்கிக்**
**கிடந்ததே கடுக்கும் மன்னே.**

**(பொ - ரை.)** *நீர்மயமாகிய அகழிக்கிடங்கு, பழ முதலிய பொருள்களை விற்கின்ற பெண்கள், எந்நாளும் அந்தி நேரத்தில் அப்பொருள்கள் கொண்ட கூடைகளைக் கழுவுதலினால் வந்த சேற்றோடு கலந்திருத்தல் யாவரும் வழிபாடு செய்து வணங்குகின்ற உமையம்மை இறைவர்க்கு*

*ஆட்டிய நிர்மாலியங்கள் சிறிதும் நீங்காது தேங்கிக்கிடத்தலை ஒக்கும்.*

**(வி - ரை.)** *பழமுதலிய பொருள்களை விற்கின்ற பெண்கள் மாலைப்பொழுதில் அக் கூடைகளைக் கொணர்ந்து கழுவுதலால் சேறடைந்த அகழியை உமையம்மை சிவபெருமானுக்குத் திருமஞ்சனமாட்டிய தீர்த்தம், நிர்மாலியங்களோடு தேங்கிக்கிடப்பதை யொத்திருக்குமென உவமை இன்பந்தோன்றக் கூறினார்.* (௯௫)

பாசடைக் கவயம் போர்த்துப்
பகைஞரோ டிகலித் தானும்
பூசலை விளைப்ப அன்னோர்
கணைபொரு புழைகள் தோறும்
தேசுற எழுந்த சோரி
ஆமெனச் செய்ய கஞ்ச
மூசுவண் டயின் ஆர்ப்ப
மொய்த்துள தகழித் தெண்ணீர்.

**(பொ - ரை.)** *அகழியிலுள்ள தெளிந்த நீரானது, பசிய இலையாகிய கவசத்தைப் போர்த்துப் பகைவரோடு பகைத்துத் தானும் போர்த்தொழிலைச் செய்ய அப் பகைவர்கள் அம்பு தொளைத்த தொளைகள் தோறும் ஒளிமிகத் தோன்றிய குருதியாமென்று சொல்லச் சிவந்த தாமரை மலரில் மொய்த்த வண்டுகள் அச் சோரியில் மொய்த்த ஈயைப்போல் ஒலிக்க நெருங்கியுள்ளது.*

**(வி - ரை.)** *பாசடை-பசியஇலை. கவயம்-கவசம். பூசல்-போர். பகைவர் அம்பு தொளைத்த தொளைவழியே சோரும் செந்நீர், தாமரையாகவும், தாமரையில் மொய்த்த வண்டுகள் செந்நீரில் மொய்க்கும் ஈயாகவும் உருவகஞ் செய்தார்.* (௯௬)

அணிமலர் அழகே நோக்கி
அகழியுள் இழிகின் றோரும்
திணியுமுட் கொடுமை நோக்கிச்
சேயிடை விலகு வோரும்

கணிகையர் கோல நோக்கிக்
காதலித் தகப்பட் டோரும்
பிணியுமுட் கருத்து நோக்கி
வெரீஇப்பெயர்ந் தகல்கின் றோரும்.

**(பொ - ரை.)** *அழகிய தாமரைமலரின் அழகொன்றையே பார்த்து அகழிக்கிடங்கில் இறங்குவோரும், நெருங்கிய முள்ளினது கொடுமையை நோக்கி இறங்காமல் தூரத்தில் விலகுகின்றவரும், விலைமாதர்களின் அழகொன்றையே நோக்கி விரும்பி அவர்தம் மயக்கவலையில் சிக்கினோரும் தம்மை மீளாது கட்டுகின்ற அவர்களின் உட்கருத்தை நோக்கி அச்சங் கொண்டு அந்நிலையினின்று நீங்குகின்றவரும் ஆனார்கள்.*

(வி - ரை.) *இதிற் கணிகையர் காதல் வலையிற் சிக்குண்ட ஆடவர் நிலைகுறித்து விளக்கமுறக் கூறினார். இழிகின்றோர், விலகுவோர், அகப்பட்டோர், அகல்கின்றோர் ஆகிய எழுவாய்க்கு ஏற்ற ஆனார்கள் என்னும் பயனிலை தொக்குநின்றது. வருவித்துரைக்கப்பட்டது.* (௩௭)

*மதில்*

கலிநிலைத்துறை

கம்பையைத் தடுத்த பின்பு
கம்பனார் அழைத்தலும்
பம்பியார்த் தொருங்கு பௌவம்
ஏழுமுற்று மாறுணர்ந்து
அம்பை அண்ட பித்திகாறும்
ஆக்குமாத் நடைபெற
வம்பலர்க் கிடங்கு சூழ்ந்த
மல்லனெச்சி ஓங்குமே.

**(பொ - ரை.)** *கம்பையாற்றைத் தடுத்த பின்னர்த் திருவேகம்பர் அழைக்கவும் நெருங்கி ஒலித்து ஒருங்கு சேரக் கடல்கள் ஏழும் சேரும் வகையையுணர்ந்து, (அவற்றைத் தடுத்தற்கு) உமையம்மை அண்டப்பித்திகை வரை*

யும் சமைத்த பெரிய ஒரு தடையையொப்ப, மணமிக்க மலர்களையுடைய அகழிசூழ்ந்த வளமிக்க மதில்கள் உயர்ந்திருக்கும்.

(வி - ரை.) கம்பை - காஞ்சியிலுள்ள கம்பையாறு. பம்பி - நெருங்கி. பௌவம் — கடல். அம்பை - அம்மை: எதுகைநோக்கி இறுதி மகரஐகாரம் பகரமாயிற்று. வழக்கில் அம்பாள் என வழங்குதல் காண்க. (௧௮)

திருக்கி ளர்ச்சி யிற்செருக்கு
தேவநாடு பாதலத்
தருக்குநோக்கி வெஞ்சினம் தலைக்கொள்
காஞ்சி அவ்வலி
முருக்கஎண்ணி முன்புபோய் வளைப்ப
மூண்டென
மருக்கி டங்கும் இஞ்சியும்
வியத்தகும்வ ளத்தவே.

(பொ - ரை.) காஞ்சிநகரானது செல்வமிகுதியினால் செருக்குக்கொண்டுள்ள தேவருலகையும் பாதலத்தின் இறுமாப்பையும் பார்த்துக் கொடிய சினம்மிகுந்து அவற்றின் வலிமையைக் கெடுக்க எண்ணி முன்புபோய் வளைக்க ஏவிப் போர்த்தொழிலில் அவற்றோடு மூண்ட தன்மையைப் போல், மணமிக்க அகழியும் மதிலும் வியக்கத்தகும் வளத்தினையுடையன.

(வி - ரை.) அகழியானது ஆழ்ந்து வளைந்தும் மதில் ஓங்கி வளைந்தும் இருத்தலை, தேவருலகமும் நாகருலகமும் செல்வத்தால் நம்மையொத்த நாடுகள் வேறில்லையென்று செருக்குக் கொண்டிருத்தலைக் காஞ்சி நகரறிந்து அவற்றின் செருக்கை ஒழித்தற்கு முறையே மதிலையும் அகழியையும் முன்பு ஏவிய தன்மைபோல் இருந்ததெனத் தற்குறிப்பேற்றம் தந்துரைத்தார். (௧௯)

கிடங்கின்எல்லை காண்ப தன்று
கீழுமேலும் ஆகநீள்
விடங்கர்தாள் அணிந்த விண்டு
நோக்கமே வியன்மதில்

தடங்கொள்எல்லே காண்ப துந்த
லைவர்தஞ்ச டைத்தலை
இடங்கொள் வெண்ட லையலாமல்
ஏவர்காண வல்லரே.

**(பொ - ரை.)** *கிடங்கின் அளவினை யாவருங் காண்ப தல்ல, பாதலத்தின் கீழும் வானுலகத்தின் மேலுமாக உயர்ந்த இறைவருடைய திருவடியில் அணிந்த திருமாலின் திருக்கண்ணே காண்பது; விசாலமுள்ள மதிலினது எல்லை யைக் கண்டறிவதும் இறைவரது சடாமுடியைத் தனக்கு இடமாகக் கொண்ட வெள்ளிய தலைமாலையே யல்லாமல் காணவல்லவர் யாவர்?*

**(வி–ரை.)** *திருமால் சக்கரம்பெற ஆயிரத்தெட்டுத் தாமரை மலரிட்டு வழிபாடுசெய்ய ஒருநாள் ஒரு தாமரைமலர் குறையத் தம் கண்ணையே பிடுங்கி வழிபாடு செய்தனர் என்பது கூர்ம புராணவரலாறு. அதனுல் தாமரை மலர் பூத்துள்ள தடாகத்தை இவ்வகழிக்கிடங்கின் ஆழத்தை அறிதற்கு 'விண்டுநோக்கமே... மதில் தடங்கொள் எல்லை காண்பதும்' என்ருர். தாருகாவன முனிவர் இறைவனை அழித்தற்கேவிய வெண்டலையை இறைவர் அணிந்தனராதலால் மதிலின் எல்லையை அறிதற்குப் பிறரால் இயலாது 'வெண்டலையலாமலேவர் காணவல்லரே' என்ருர். இதனுல் அகழியின் ஆழமிகுதியும் மதிலின் உயரமிகுதியும் விளக் கியவாறறிக.* (௬0)

கச்சிவாணர் சென்னி தாள்கள்
காணமுன்ப றந்தகழ்ந்து
அச்சழிந்த மால்வி ரிஞ்சர்
அன்றுசென்ற எல்லைகள்
நிச்ச யிப்ப அவ்வளவும்
ஏகவைத்த நீள்குறி
நொச்சி யுங்கி டங்குமென்ன
நோக்குவார்க்கி லங்குமே.

**(பொ - ரை.)** *காஞ்சிநகரில் எழுந்தருளிய இறைவ ருடைய திருமுடியையும் திருவடிகளையும் காணும்பொருட்டு*

முன்பு பறந்தும் தோண்டியும் உருவழிந்த பிரமனும் திரு மாலும் அக்காலத்தில் சென்ற எல்லைகளை, இக்காலத்துள் ளாரும் உறுதிகொள்ள அவ்விருவரும் பறந்தும் இடந்தும் சென்ற எல்லையளவுஞ் செல்ல அளவறுத்துவைத்த நீண்ட குறிகளே, மதிலும் அகழியுமென்று கண்டோர் கூறப் பார்ப்போர்க்கு விளங்கித் தோன்றும்.

(வி - ரை.) மதிலும் அகழியும் மிகவும்-உயர்ந்தும் மிகவும் ஆழ்ந்தும் இருத்தலை, முற்காலத்தில் பிரமனும் திருமாலும் முடி அடிகாண அன்னமும் பன்றியுமாகப் பறந்தும் இடந்தும் சென்ற எல்லைகளை இக்காலத்தாரும் உறுதிகொள்ளப் படைத்துவைத்த அடையாளங்கள் ஆமெனத் தற்குறிப்பேற்ற அணி தோன்றக் கூறினர். (சக)

இடித்தகழ்ந்து தம்மி ருக்கை
யெற்றிநீர்க்கி டங்கினில்
வெடித்தெழுந்து தாவு வாளை
மீனைமீண்டு ருவகை
அடுத்துவிக்க உண்டு தேக்கி
அம்பரத்து மீனையும்
தடுத்துவென்றி கொள்ள உள்ள
சார்மதிற் பொறிக்குலம்.

(பொ - ரை.) தமது இருக்கையை யிடித்துத் தோண்டி மோதி நீர்மயமான கிடங்கினின்று மேலே தாவிய வாளை மீனைத் திரும்பிமீள அவ்வகழியிலடையாத வண்ணம் அம் மதிலைச் சார்ந்த பொறியினது கூட்டம், அதனையடுத்து விக்கலுறும்படி உண்டு தேக்கெறிந்து வானத்துள்ள நாள் மீனையுந் தடுத்து வெற்றி கொள்ளுமாறு உள்ளன.

(வி - ரை.) இதில் மதிலினுள்ள பொறிகளின் தன்மையை வாளைமீன்கள் துள்ளி வருவனவற்றை உண்டு தேக்கெறிவதாகக் குறித்தார். (சஉ)

உடல்படைத் தியக்க வோர்தி
மித்தனுண் டெனக்கொளத்
திடம்வ லித்த சான்றதா
யவனர்தாட்செ யப்படும்

தொடர்பு டைப்பொ றிக்குலம்
சுழன்றெழும்வி ழும்பகை
மிடல்கெ டத்தெ றிக்குமோடு
மீளுமின்ன நீரவே.

**(பொ - ரை.)** *தேவர் மக்கள் முதலியோர்க்கு உடலைத் தந்து அவற்றைச்செலுத்த ஒரு நிமித்தகாரணமாகிய இறைவன் உண்டென்று கண்கூடாகக்கொள்ள வற்புறுத்திய சான்றாகச் சிற்பிகள் தம் முயற்சியால் செய்யப்படுகின்ற மதிலோடு தொடர்புடைய பொறியினங்கள் சுழன்றெழாநிற்கும்; வீழாநிற்கும்; பகைவரது வலிமைகெட அதட்டும்; ஓடும்; திரும்பும்; இன்னதன்மையுடையனவா யுள்ளன.*

**(வி - ரை.)** *முன்னர்க்கூறிய பொறிகள் பகைவர் எதிர்த்தால் ஆற்றுகின்ற தொழிற்றிறங்களைப் பொதுப்படக் கூறினார். யவனரை நிமித்த காரணமாகவும், சிவபெருமான் உலகை ஆக்குதற்குச் சத்தி துணைக்காரணம் ஆதல்போல, யவனர் பொறிகள் செய்தற்கு முயற்சி துணைக்காரணமாகவும் அவற்றால் உடலாகிய காரியம் புலனாதல்போலப் பொறிகள் புலனாகும் காரியத்தைக் கூறினார். இதனை,*

[1]"*காரிய கார ணங்கள் முதல்துணை நிமித்தம் கண்டாம்*
*பாரில்மண் திரிகை பண்ணும் அவன்முதல் துணைநி மித்தம்*
*தேரில்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக*
*ஆரியன் குலால னும்பின் றாக்குவன் அகில மெல்லாம்.*"

*எனவரும் சிவஞானசித்தியார்த் திருவிருத்தத்தால் அறிக.* (௩௯)

பொ றிக்குலம் எதிர்த்து
ளோர்த மைச்செகுத்து
இம்மெ னுமுன் வென்றி கொள்ளும்
ஈதுணர்ந்து தெவ்விர்காள்
அம்மவீண் டுறேன்மி னென்று
கையெடுத் தசைப்பபோல்
அம்மதில் தலைத்துகிற் கொடிநு
டங்கு மாலரோ.

1. *சிவஞானசித்தியார், பிரமாணவியல: ௧அ.*

**(பொ - ரை.)** இந்த மதிலிலுள்ள பொறிக்கூட்டங்கள் தம்மோடு எதிர்த்த பகைவர்களை இம்மென்பதற்கு முன்னர்க் கொன்று வெற்றிகொள்ளாநிற்கும்; பகைவர்களே இதனை உணர்ந்து இவ்விடத்துக்கு வாராதீர்கள் என்று மேலே கையெடுத்தசைத்தல்போல, அந்த மதிலின் உச்சிமேல் கட்டிய துகிற்கொடிகள் துவளாநிற்கும்.

**(வி - ரை.)** மதிலின் முடிமீது கட்டிய துகிற்கொடிகள் அசைதலை, தன்மீதுள்ள பொறிக்கூட்டங்கள் தம்மோடு எதிர்த்த பகைவரை விரைந்து வெற்றிகொள்ளும்; 'பகைவரே வாராதீர்கள்' என்று கூறிக் கையெடுத்தசைத்துக் காட்டுதல் போன்றிருக்குமென ஒப்புரைத்தார். (சச)

### கலிவிருத்தம்

**வளமகன் திருநகர்க் கிழத்தி மாமைசால்**
**இளமுலை திளைப்பக்கார் எழினி சேர்த்துபு**
**தளர்வற நாட்டிய தம்ப மேயெனக்**
**கிளர்மதில் இடந்தொறும் செறியும் கேதனம்.**

**(பொ-ரை.)** செல்வமென்னும் ஓர் ஆடவன், பொலிவு பெற்ற காஞ்சி நகரமென்னும் தலைவியினது பேரழகமைந்த இளங்கொங்கைப் போகத்தை நுகர, பெரிய திரைச்சீலையைச் செறித்துக் குற்றமற நாட்டிய தூணென்று கண்டோர் கூறக் கொடிகள் விளங்கும் மதிலின் இடந்தோறும் நெருங்கித் தோன்றும்.

**(வி - ரை.)** மதிலினிடந்தோறும் கட்டிய கொடிகளைச் செல்வமென்னும் ஓர் ஆடவன் காஞ்சிநகர் என்னும் தலைவியின் போகம் நுகரத் திரைச்சீலையைச் சேர்த்து நாட்டிய தம்பத்தை ஒக்குமெனத் தற்குறிப்பேற்றம் தந்துரைத்தார். (சரு)

**நேமிமால் வரைமிசைக் கிளைத்து நீண்டவே**
**ஆமெனக் கொடிமிடை அம்பொன் மாமதில்**
**மீமிசைக் கோபுர மேலும் சேறலால்**
**யாமினிப் புகல்வதற் குவமை யில்லையே.**

(பொ - ரை.) பெரிய சக்கரவாள கிரியின்மேல் கிளைத்துயர்ந்த மூங்கில்கள் ஆம் என்று சொல்லும்படி கொடிகள் நெருங்கிய அழகிய பொன்னால் அமைந்த பெரிய மதிலின் மேலுள்ள கோபுரம், அப்பாலுஞ்சென்று உயர்ந்தோங்குதலினால் இனிமேல் யாம் அம்மதிலோடு ஒப்புச் சொல்வதற்கு வேறுவமையில்லை.

(வி - ரை.) மதிலின் மேலுள்ள கோபுரமென்றது மதிலின் வாயிலிலுள்ள கோபுரத்தினை. சக்கரவாளகிரி மதிலாகவும் அதில் உண்டாகியுள்ள மூங்கில்கள் மதிலிற்கட்டிய கொடியாகவும் கூறுதலால் ஒப்புமைக் கூட்டவணி. (சசு)

அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

மகதநா டென்னக் காஞ்சி
வைப்பினுங் குடைஞர் எய்தி
இகலற வளர்க்கும் எண்ணான்
கறத்தினுக் கிடர்செய் யாமைத்
தகையணங் குமையாள் வைத்த
தடைநிகர் மதிற்சீர் முற்றும்
புகரற இயம்பப் புக்காற்
புலவர்க்கும் உலப்பு றாதே.

(பொ - ரை.) மகதநாடுபோலக் காஞ்சிநகரத்திலும் இழிகுலத்தோர் சேர்ந்து பகையில்லாது வளர்க்கின்ற முப்பத்திரண்டறங்களுக்கு இடையூறு செய்யாமல் மிக்க அழகினையுடைய உமையம்மையார் செய்துவைத்த தடையை ஒத்த மதிலினது சிறப்பு யாவும் குற்றமற விளக்கிக் கூறமுற்பட்டால் அறிஞர்களாலுங்கூட இயலாது.

(வி - ரை.) புலவர் கல்வியறிவுடையோரன்றித் தேவர்களெனக் கொள்ளலுமாம். மகதநாட்டில் ஒன்பதாண்டு மழையின்றியிருந்தபோது அம்மை அங்கெழுந்தருளி முப்பத்திரண்டறமும் செய்தருளினர் என்பது இந்நூல் வரலாறு. அதைப்போல் இங்கும் அறஞ்செய்தமையால் இதன் சிறப்புக் கூற அடங்காதென்றார். மகதம், ஐம்பத்தாறு தேயங்களில் ஒன்று. (சஎ)

மிடைபுறத் தூர்க ளெல்லாம்
விண்ணவர் நகரா அங்கண்
புடைநக ரயனூ ராகப்
பூமகள் கொழுநன் றன்னூர்
இடைநக ராக மற்றை
யீசனூர் உலக மேயா
நடைபிற ழாத கீர்த்தி
படைத்தஉள் நகரஞ் சொல்வாம்.

(பொ - ரை.) புறத்து நெருங்கிய ஊர்கள் எல்லாம் தேவர்களின் நகரமாகவும், அவ்விடத்திலுள்ள புடைநகா பிரமன் நகராகிய சத்தியலோகமாகவும், திருமகள் கொழுநனாகிய திருமாலினது வைகுந்தமே இடைநகரமாகவும், அவ ரொழிந்த சிவபெருமானாரின் சிவலோகமேயாகச் செல்வம் ஒழுக்கம் முதலியவற்றில் குறையாத புகழ்வாய்ந்த அந் நகரின் அகநகர்ச் சிறப்பை எடுத்துக் கூறுவாம்.

(வி - ரை.) காஞ்சித் திருநகர்க்குச் சிவபுரம் என்னும் சிறப்புப் பெயருண்டு. அதனால் தேவருலகினைப் புறத்தூர்களாகவும், புறநகரினைச் சத்தியலோகமாகவும், இடை நகரினை வைகுந்தமாகவும் உருவக மாக்கிக்கூறினார். இதுபுருவக அணி. இந்நகரின் சிறப்புக் கருதிக் 'கீர்த்திபடைத்த உள்நகரம்' என்று நயம் பெறக் கூறினார். (சஅ)

அகநகர்—பரத்தையர் வீதி

அளிமத னூலின் ஆற்றல்
ஆடவர் தம்மோ டாடிக்
களிமனக் குள்ளால் தாங்கள்
விளைத்திடுங் கல்வி யெல்லாம்
தெளிதர மாடந் தோறுஞ்
சித்திரந் தன்னிற் காட்டி
இளையரை மயக்கிக் காமம்
ஏற்றுவோர் சேரி மல்கும்.

**(பொ - ரை.)** (எவ்வகை உயிர்கட்கும் காமத்தை) ஊட்டுகின்ற காமன் நூலிற் கூறிய முறையால் ஆடவர்களுடன் கலந்து களிப்பைத் தருகின்ற அறைக்குள் தாங்கள் விளைக்கின்ற கலவி முதலிய வேறுபாடுகளை யெல்லாம், மாடங்கள் தோறும் கண்டோர் அவ்வேறுபாடு தெரியச் சித்திரங்களால் உணர்த்திப் போகம் நுகரவரும் இளைஞர்களை ஆடை அணி முதலியவற்றால் மயக்கிக் காமமூட்டும் பரத்தையர் சேரிகள் எங்கும் நிறைந்து தோன்றும்.

(வி - ரை.) காமவின்பம்: கலவி, நகக்குறி, தாடனம், கரணம், சுவைத்தல், பற்குறி எனப்படும் அறுவகையில் ஆலிங்கனம் எனப்பெறும் கலவி முன்னுள்ளதாதலால், 'விளைத்திடுங் கலவியெல்லாம்' என்று அதனையே விதந்தெடுத்துக் கூறினர்.

(சக)

வரியளி முரலா வாடா
மாலைய இமையா நோக்க
தரைமிசைத் தோயாத் தாள
சித்திரந் தயங்கு காட்சி
வரைவிலா மகளிர் இன்னோர்
மாணலம் வேட்டு வானிற்
சுரர்களும் எய்திச் செவ்வி
பார்த்துறை தோற்றம் ஒக்கும்.

**(பொ - ரை.)** வரிகளையுடைய வண்டுகள் ஒலியாத வாடாத மாலைகளையுடையனவும், இமைக்காத கண்களையுடையனவும், நிலவுலகின்மேற் படிதலில்லாத கால்களையுடையனவுமாகிய சித்திரங்கள், சுவர்த்தலங்கள் தோறும் விளங்குந்தோற்றம், விலைமாதரது மாண்புபெற்ற அழகினை வானிலுள்ள தேவர்களும் விரும்பியடைந்து அவர்கள் அழகினைப் பார்த்து வாழ்கின்ற காட்சியை ஒத்துத்தோன்றும்.

(வி - ரை.) வரி - வண்டுகளின் உடல் மேலுள்ள கீற்று. சுவரில் சித்திரித்த சித்திரங்கள் இவ்வாறிருத்தலை, வண்டு மூசாத மாலையையும் இமைக்காத கண்களையும் நிலத்தில் தோயாத கால்களையும் உடைய தேவர்கள் இங்குள்ள விலைமாதர் போகத்தை விரும்பி விண்ணுலகினின்றுவந்து அம் மாதர்கள் செவ்வியை

நோக்கிக் காத்திருக்கும் தன்மைபோல என, **தற்குறிப்பேற்ற** அணி தந்து கூறினர். (௨௦)

**பூத்தபின் இராறு நாளுங்**
**கிழத்தியர்ப் புணர்ந்து தம்மை**
**நீத்தன ரெனுஞ்சீற் றத்தால்**
**நின்றஈ ரொன்பான் நாளும்**
**ஏத்துமா டவரைத் தங்கள்**
**இளமுலைத் துருக்கம் ஏற்றிப்**
**பாத்திரு நிதியம் எல்லாம்**
**பறித்தனர் கொள்ளை கொள்வார்.**

**(பொ - ரை.)** *பூத்து நீராடியபின் பன்னிரண்டு நாளும் தம் மனைவியரைச் சேர்ந்து தம்மைப் பிரிந்தன ரென்னும் சினத்தினால் கழிந்துநின்ற மற்றைப் பதினெட்டு நாட்களும் (அழகு செல்வம் முதலியவற்றால்) எல்லோரா லும் வணங்கப்படும் ஆடவரைத் தங்களின் இளமுலையாகிய கோட்டையிற் சிறைப்படுத்திப் பெரிய பொருள் முற்றும் அளவுசெய்து பறித்துக் கொள்ளை கொள்வார்கள்.*

(வி - ரை.) *பூத்தல் - பெண்கள் வீட்டுக்கு விலக்கமுற் றிருத்தல். துருக்கம்-கோட்டை. பாத்தல் - பகுத்தல்; அளவு படுத்தல்.* (௨க)

**கோலத்தின் இசையின் யாணர்க்**

**சீலத்திற் கல்விச் செய்கைத்**
**திறத்தினிற் பிறவாற் றானும்**
**ஞாலத்து மைந்தர் தம்மை**
**மருட்டிநற் பொருள்கள் வவ்விக்**
**காலுற்ற சாற்று வேழக்**
**கோதுபோற் கழிய நீப்பார்.**

**(பொ - ரை.)** *அழகாலும் இசையாலும் அழகிய கூத்தாலும் அபிநயத்தாலும் தமது ஒழுக்கத்தாலும்*

புணர்ச்சிச் செய்கையின் வேறுபாட்டாலும் இவையொழிந் தனவற்றாலும் உலகிலுள்ள ஆடவர்களை மயக்கி அவர்களி டத்திலுள்ள பொருள்களைக் கொள்ளைகொண்டு சாற்றினை முற்றும்நீக்கிய கரும்பின் கோதினைப்போலத் தம்மினின் றும் நீங்க அவர்களைக் கழித்துவிடுவார்கள்.

(வி - ரை.) தம் வலையிற் சிக்கிய ஆடவர்கள்தம் கைப் பொருள் வறந்துபோனபின் அவர்களைக் கைவிட்டுவிடுதல் பரத் தையர் இயல்பு. அதனால் 'நற்பொருள் வவ்வி.........கோது போற்களைய நீப்பார்' என்றார். (௯௨)

அலகினல் அறஞ்சூழ் காஞ்சி
அமர்பெருஞ் செல்வ ராயும்
குலமுறைச் சார்பால் வெந்நோய்க்
கோட்பட்டார் இழிஞ ரேனும்
சிலகொடுப் பனவுங் கொண்டு
சேர்ந்துபொய் வஞ்ச மெல்லாம்
நிலைபெற அடைத்து வைத்த
நெஞ்சினர் ஆகி வாழ்வார்.

(பொ - ரை.) அளவற்ற நல்ல அறம் சூழ்ந்த காஞ்சிநகரில் தங்கிய பெரிய செல்வர்கள், கொடிய நோயால் விழுங்கப்பட்டவராய் ஆராயும் குலமுறை முதலியவற்றால் இழிஞராக இருந்தாலும், சிலவற்றைக் கொடுப்பனவும் கைக் கொண்டு புணர்ந்து பொய்யும் வஞ்சமுமாகிய இவையெல் லாம் இடைவிடாது நிலைபெற்றோங்க அடைத்துவைத்த மனமுடையவராய் அப் பரத்தையர் வாழ்வார்கள்.

(வி - ரை.) பரத்தையர்க்கு இழிந்தோர், உயர்ந்தோர் என் னும் பாகுபாடு இல்லை; பொருள்கொடுப்போர் எவராயினும் அவருக்குத் தம் போகத்தை விற்றுண்பவர் எனப் பரத்தையர் இயல்பை விளங்க ஓதினார். (௯௩)

அலைவிழிக் கணிகை நல்லார்
ஆடவர் தமக்கு நல்கும்
இலைநிக ரெனுமின் பத்திற்
கின்பமுஞ் சமமாக் கொண்டு

**விலையென நிதியுங் கோடல்**
**வியப்பிற்றே யேற்ற மாக**
**மலைநிகர் தனங்கள் ஈந்தோர்**
**மலைநிகர் தனமுங் கொள்வார்.**

**(பொ - ரை.)** *காமுகரை வருத்துகின்ற கண்களையுடைய பரத்தையர், இளைஞர்க்குத் தாம் கொடுக்கின்ற ஒப்பில்லையென்னும் காமநுகர்ச்சிக்குத் தமக்கு அவர் தருகின்ற காமநுகர்ச்சியையும் ஏற்றக் குறைவில்லாமற்கொண்டு பொருளையும் விலையெனக் கொள்ளுதல் ஓர் வியப்புடையதே; மிகையாக மேருமலையையொத்த தமது கொங்கைப் போகத்தைத் தந்து மேருமலையை யொத்த பொருள்களையும் கொள்ளை கொள்வார்கள்.*

(வி - ரை.) *ஒரு பொருளை விற்போர் அதற்கு ஈடாக மற்றொரு பொருளைக் கொள்ளுதல் வணிக இயல்பு. பரத்தையர் விற்கின்ற உருவற்ற போகத்திற்கு விலையாக உருவுள்ள பொருளைக் கொள்ளுதலோடன்றித் தாமும் இன்பமடைவராதலால் 'விலையென நிதியுங்கோடல் வியப்பிற்று' என்றார். இதனானும் பரத்தையர் இயல்பு கூறியவாறும்.* (௯௪)

**தவமறைக் கிழவன் மாயன்**
**தாணுவென் றிவரும் இவ்வூர்க்**
**கவர்மனப் பரத்தை மாதர்**
**கண்வலைப் பட்டே யின்றும்**
**இவறிய அலரோன் மாலோன்**
**பித்தனென் றிப்பேர் பெற்றார்**
**சிவசிவ யாவ ரேயோ**
**அவர்திறத் தகப்ப டாதார்.**

**(பொ - ரை.)** *பிரமனும் திருமாலும் உருத்திரனும் என்று சொல்லப்பட்ட இவர்களும் இவ்வூரில் பிளவுபட்ட மனத்தையுடைய பரத்தையர்களின் கண்களாகிய வலையில் மிகவும் சிக்கியே இப்பொழுதும் விருப்பமிக்க அலரோனென்றும் மாலோனென்றும் பித்தனென்றும் இப்பேர்*

களைப் பெற்றார்கள்; சிவசிவ அப் பரத்தையர் திறத்தில் அகப்படாதவர் எவருளர்?

(வி - ரை.) மூன்று கடவுளர்க்கும் முறையே அலரோன், மாலோன், பித்தன் என்று பெயர் வழங்குவது இப்பரத்தையர் கண்வலைப்பட்ட காரணத்தால் எனத் தற்குறிப்பேற்ற அணி பெற அமைத்தார். அலரோன்—பழிச்சொல் பெற்றோன், பிரமன்; மாலோன்-திருமால், மயக்கமுற்றோன்; பித்தன்-மயக்கங்கொண்டவன்; உருத்திரன் என இருபொருள் நயங்காண்க தவ: மிகுதிப் பொருள்தரும் உரிச்சொல். தாணு-நிலைபெற்றோன், அறிவில்லாதவன்; ஈண்டு உருத்திரன். (௫௫)

விற்றிடும் அல்குல் தன்னை
மீளவுந் தமதே யாக்கி
மற்றைய நாளும் விற்கும்
வரைவிலார் வீதி யிச்சீர்
கற்றிலா வணிக மாக்கள்
ஆவணக் கவினை நோக்கிப்
பற்றுவெண் தரளக் கோவை
பந்தியாற் சிரிக்கு மன்றே.

(பொ - ரை.) முதல்நாளில் ஒருவனுக்கு விற்ற அல்குலையும் மீளவும் தமக்கே உரியதாக்கி வழிநாளும் வந்த மற்றையோர்க்கு விற்கும் பரத்தையரது வீதியானது, இவ் வாணிகத்தின் சிறப்பைக் கற்காத வணிகரது கடைவீதியின் பொலிவைநோக்கித் தொங்கவிட்ட வெள்ளிய முத்துக் கோவையின் வரிசையால் சிரிக்காநிற்கும்.

(வி - ரை.) பரத்தையர் வீதியிற்கட்டிய முத்துக்கோவைகள் வெள்ளிய ஒளிவீசுதலைப் பரத்தையர் செய்யும் வாணிகம் போல வணிகர் தாம் ஒருவர்க்கு விற்ற பொருளைத் தமக்குரித்தாக்கி மறுநாள் மற்றொருவனுக்கு விற்கும் வணிகத்தை அவர்கள் கற்காமையால் புன்னகை புரிதலையொக்குமென்றார். (௫௬)

இருமைவா ணிபத்திற் கூர்த்த
மதியரும் இறும்பூ தெய்த
அருவமாம் இன்பந் தன்னை
பிம்மியின் அளவு மேருது

உருவமாம் பொருளுக் கேற்ப
நிறுத்துவிற் றெழுக வல்ல
இருமனப் பெண்டிர் தம்முள்
தருக்கிவாழ் இருக்கை யீதால்.

(பொ - ரை.) *பெருமை பொருந்திய வாணிபத்தில் கூர்த்த அறிவுடையோரும் வியக்க அருவமாகிய இன்பத்தை ஓர் இம்மியளவும் ஏற்றமாகாது, உருவமுள்ள பொருளுக்குச் சமமாக நிறுத்து விற்று நடக்கவல்ல கவர்பட்ட மனத்தையுடைய பரத்தையர்கள் தங்களுக்குள் இறுமாந்து வாழும் பரத்தையர் சேரி இதுவாம்.*

(வி - ரை.) *இம்மி, மிகவும் சிறியவெண். இருமனப்பெண்டிர்-இரண்டு தன்மைகொண்ட மனத்தையுடைய விலைமகளிர். இதனை, 'ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒருகாலத்தேயுடைய மனம்' என்பர், பரிமேலழகியார். ஆல்: அசைநிலை.* (கூள)

*ஆவண வீதி*

இன்னவிங் குளவோ என்னக்
கடாதலும் இயம்பி யோர்கட்கு
அன்னவிங் குள்ள இல்லென்
றிறுத்தலும் அறியா தியாரும்
என்னவுந் தருதி ரென்ன
விலைகொடுத் தேற்ப ஈய
மன்னியெப் பொருளும் என்று
நிறையுமா வணம னந்தம்.

(பொ - ரை.) *இவ்விடத்து இப்பொருள்கள் உள்ளனவோ என்று ஒருவன் வினுதலும் அவ்வாறு வினவியார்க்கு அப்பொருள்கள் இவ்விடத்து உள்ளன, இல்லன என்று விடைதருதலும் அறியாமல் எவரும் எப்பொருளையும் கொடுப்பீரென்று விலைகொடுத்துவாங்கக் கொடுக்கப்பட்ட எவ்வகையான பொருளும் விலைபெற்று எக்காலத்தும் நிறைந்துள்ள கடைவீதிகள் அளவிறந்திருக்கின்றன.*

(வி - ரை.) இதில் கடை வணிகர் இயல்பு கூறப்படுகின்றது. வணிகரிடம் ஒருவர் சென்று நும்பால் இன்னபொருள் உண்டோ என வினவியபோது தம்பால் அப்பொருள் இலதாயின் அதற்கு இனமான பொருளைக்கூறி விடையிறுப்பர். இது சொல்லினும் ஊதியங்கொள்ளும் வணிகர் இயல்பு. இதனை, [1]"தம்பால் இல்லதில்லெனின் இனனாய், உள்ளது கூறியும் மாற்றியும் உள்ளது சுட்டியும் உரைப்பர் சொற்சுருங் குதற்கே" எனவரும் நன்னூல் நூற்பாவால் அறிக. (௩அ)

செய்வினை யனைத்தும் தன்பாற்
சேர்த்துவைத் துயிர்க்குப் பின்னர்
அவ்விறை யாணை யாற்றல்
அளித்திடு மாயை யேபோற்
கொய்வளம் வருவ முற்றுங்
கொண்டுபின் நாய்கர் மாறப்
பௌவநீர் உலகுக் கெல்லாம்
உதவுவ பைம்பொன் மாடம்.

(பொ - ரை.) உயிர்கள் செய்யும் வினைமுற்றும் தன்னிடத்துச் சேர்த்துவைத்துப் பின்பு அவ்வுயிர்கட்கு அவ்விறைவன் ஆணையின் வழியால் கொடுக்கின்ற மாயையைப் போலப் பொன்னாலான வணிகர் மாடங்கள் பிறர் ஈட்டிய வளங்களுள் தம்மிடத்தில் வருவன முழுமையுங்கொண்டு பின்பு வணிகர் விற்கக் கடல்சூழ்ந்த உலகத்திற்கெல்லாம் தாராநின்றன.

(வி - ரை.) கன்மமலம் உயிர்களிடத்து நன்மை தீமைகளைத் தோற்றுவித்தற்குத் துணைக்காரணமாய்த் தனுகரண முதலியவற்றைக் கூட்டுவித்தலினால், 'செய்வினையனைத்தும் சேர்த்துவைத்து' என்றார். (௩௯)

அணங்கனார் பரப்பி விற்கும்
அணிகிளர் கோங்கந் தாரிற்
சுணங்கினைக் கணியென் றஞ்சிச்
சுரும்பினம் உருமை நோக்கிப்

1. நன்னூல்: ௨௬௭.

பணங்கிளர் பாந்தள் அல்குற்
பாவைமீர் என்னே பொற்பூ
மணங்கமழ் கின்ற தென்பார்
ஆடவர் மருட்சி யெய்தி.

**(பொ - ரை.)** *தெய்வப் பெண்களையொத்த பெண்கள் தமது மார்பிற்சார்த்திப் பரப்பிவிற்கும் அழகால் விளங்கும் கோங்கமலராலாகிய மாலையினிடையில் தோன்றும் அவர்கள் மார்பின் தேமலை, வேங்கைமலராலாகிய மாலையென்றஞ்சி வண்டின் கூட்டங்கள் சாராமையை நோக்கி, ஆடவர்கள் மயக்கமிகுந்து பாம்பின் படம்போல் விளங்கும் அல்குலையுடைய பெண்காள்! இம்மாலையிலமைந்த பொன்மலர் மணம் கமழுகின்றது யாது காரணமென்று வினவுவார்கள்.*

**(வி - ரை.)** *சிப்பியில் வெள்ளி தோன்றுதற்கு மாலைக்காலம் காரணமாதல்போல் கோங்க மலர்மாலையை வேங்கை மலர்மாலையென்று ஐயுறுதற்கு மார்பிற் சார்த்துதல் காரணமாதல் அறிக. ஆடவர் கோங்க மலர்மாலையைப் பொன்மாலையென்று மயங்கி இதற்கு மணம் எவ்வாறு வந்ததென மகளிரை வினவுதலால் இது,* **மயக்கவணி.** (௩0)

வீழ்பொருள் எடுக்க லாற்ரு
உறுசனம் மிடைந்த வீதித்
தாழ்குழல் மடவார் மைந்தர்
தங்களுள் முட்டுங் காலைக்
காழ்மணி முலையும் தோளும்
கலந்துற உவகை பொங்கி
வாழ்நருஞ் சிலரே பல்லோர்
வாடிநைந் தழுங்கு வார்கள்.

**(பொ - ரை.)** *கீழே விழுந்த பொருளையெடுக்க இயலாத மிக்க மக்கள் நிறைந்த தெருவில், சோர்ந்த கூந்தலையுடைய பெண்களும் ஆட்வர்களும் தங்கட்குள் ஒருவரோடொருவர் முட்டும்படி நெருங்கிய காலத்தில் மணி வடமணிந்த கொங்கையும் தோளும் தம்முட் சேர, அதனை*

மகிழ்ச்சிகூர்ந்து வாழ்வாருஞ் சிலர், அந்நெருக்கத்தினால் உடல்வாடி மெலிந்து வாடுவார்களும் பலபேர் ஆவர்.

(வி- ரை.) சிலர் என்றது காமுகராகிய தூர்த்தரை. பல்லோர் என்பது நல்லொழுக்கமுடையோரை. 'வீழ்பொருள் எடுக்கலாற்ற உறுசனம் மிடைந்த வீதி' என்பது மக்கட் கூட்டத்தை உணர்த்தியவாறும். (சுக)

நெருங்கு பல்சன முழக்கருக் கூலநீல் விடத்தைக்
கரந்த கம்பர்மேல் தெழித்துறுங் கடல்பெருந் தெருவாற்
சுரந்து வந்துநாற் புறத்தினும் சனமிகத் தொகுவ
பரந்த வீரையுட் புகுந்திடும் பற்பல நதியே.

(பொ - ரை.) நெருங்கிய பல மக்களின் முழக்கமுறுத கடைவீதி கருநிற நஞ்சைத் தமது கழுத்தில் ஒளித்த இறைவர்மேல் அதட்டியெழுந்த கடலையொக்கும்; பெரிய தெருக்களில் மிகுந்துவந்து நான்குபுறங்களிலும் மக்கள் அக்கடை வீதியில் மிகவும் நெருங்குதல், பரவிய கடலில் கலக்கும் பற்பல ஆறுகளை ஒக்கும்.

(வி - ரை.) கூலம்-தானியவகைகள். அவை: நெல், புல், வரகு, தினை, சாமை, சோளம், மலைநெல், மூங்கிலரிசி என்பன. இவைகள் நிறைந்த வீதிக்குத் தானி ஆகுபெயர். தன்னிடத்துத் தோன்றிய நஞ்சினைக் கவர்ந்த சிவபெருமான்மீது சினங் கொண்டு கடல் இரைச்சலிடுவதாகத் தற்குறிப்பேற்ற அணி பெறக் கூறினர். (சுஉ)

மற்றையவீதி

ின் நீள்நகர் புவனைசக் கரமென ஆன்ற
திறத்த பொன்மதில் ஏழுடைச் சின்மயக் கோயிற்
புறத்த வான்மிசைப் புலவர்கண் ணூறுபட் டிடாமை
மறைத்தெ னக்குயின் உரிஞ்சுபூம் பந்தர்சால் மறுகு.

(பொ - ரை.) வானுலகத்துள்ள தேவர்கள் கண்ணேறு படாமல் மறைத்தாற்போல, மேகங்கள் தவழும் பூம்பந்தல்மிக்க தெருக்கள், முப்பத்திரண்டு அறங்களான்மிக்க

காஞ்சித் திருநகரில் நிலமகள் வடிவமென்று கண்டோர் கூற அமைந்த பகுதியையுடைய பொன்னாற்சமைத்த சிவ பெருமானது ஏழு மதில்களையுடைய திருக்கோயிலின் புறத்திலுள்ளன.

(வி - ரை.) புவனி - நிலமகள். கண்ணாறு - கண்ணேறு. குயின் - மேகம். உரிஞ்சு-தவழும். பந்தர்-பந்தல்: இறுதிப் போலி. (சுக)

மகரப் பொற்குழைப் பிரான்தளி சூழ்மதில் குறடு
நகரச் சீரெயில் சுற்றுமா ளிகைநிரை யாரும்
திகழச் சூழ்தெரு ஆரிடை வெளியுமாய்ச் சிவன்தேர்ச்
சகடத் தேருடைச் சகடமற் றென்றெனத் தயங்கும்

(பொ - ரை.) பொன்னாலான மகரகுண்டலத்தை யணிந்த சிவபெருமானது திருக்கோயிலைச் சூழ்ந்த திரு மதிலானது தேருருளையின் குறடாகவும், அந்நகரில் சிறந்த மதில்களாற் சூழப்பட்ட மாளிகையின் வரிசைகள் உருளையின் உள்வாயாகவும் (அம்மாளிகையின் வரிசைகள்) விளங்கச் சூழ்ந்த தெருக்கள் அவ் வுருளையின் அகவாயி லுள்ள வெளியும் ஆகி, சிவபெருமானது நிலவுலகமாகிய தேரிலுள்ள இரண்டு உருளைகளோடு அழகினையுடைய மற் றோர் உருளை இதுவென்றுகூற விளங்காநிற்கும்.

(வி - ரை.) மதிலைக்குறடாகவும், மாளிகையின் வரிசைகளை உள்வாயாகவும், தெருக்கள் அகவாயிலுள்ள வெளிகளாவும் தற்குறிப்பேற்ற அணி பெறக் கூறினர். (சுஉ)

சரிக்குங் குஞ்சர மதப்பெருங் கலுழியுந் தளவைச்
சிரிக்கு முரலாற் களைந்ததார் நறவமுஞ் சேறாய்
விரிக்கும் வீதியில் அடிவழுக் காவகை வெயிலைப்
புரிக்கும் செம்மணி பதித்துமேல் நடப்பராற் புரியோர்

(பொ - ரை.) வழங்குகின்ற யானையினது மதமாகிய பெரிய காட்டாறும் முல்லையரும்பை நகைக்கின்ற பற்களை யுடைய பெண்கள் களைந்த மாலைகள் சிந்துகின்ற தேனும் (ஒன்றுகலந்து இவைகள்) சேறாகிப் பரந்த தெருக்களில்

தம் கால்கள் வழுக்காதவண்ணம், அந்நகரில் வாழ்வோர் வெயில் எறிக்கின்ற சிவந்த மாணிக்கங்களை அச் சேற்றின் மேல் பதித்து நடந்து செல்வார்கள்.

(வி - ரை.) சேறுபட்ட தெருக்களில் கால்கள் வழுக்காமல் அச்சேற்றில் மாணிக்கக் கற்களைப்பதித்து அவற்றின்மேல் நடப்பரெனக் கூறுதல், அந்நகரில் உள்ளோர் செல்வமிகுதியைக் குறித்தற்கென்க. (௬௫)

தெள்ளற் பாங்கரின் நறியநீர் வண்டலாட் டயரும்
அள்ளற் சேறுகள் புலர்த்துவான் இடையிடை அகழ்ந்து
பள்ளத் தாற்சிறு கால்பல வகுத்தெனப் பிறங்கும்
வள்ளற் காவலர் செலுத்துதேர்ச் சகடுபோம் வழியே.

(பொ - ரை.) தெருவின் பக்கத்தில் நறுமணங் கமழும் நீர்விளையாட்டைச் செய்யும் குழம்பிய சேறுகளைப் புலர்த்தும்பொருட்டு அச்சேறுகளின் இடையிடையே அகழ்ந்து பள்ளமாகப் பல சிறு கால்களை வகுத்தாற்போல மிக்க கொடையையுடைய அரசர்கள் செலுத்துகின்ற தேர்க்கால்கள் செல்லும் வழிகள் விளங்காநிற்கும்.

(வி - ரை.) அரசர்கள் செலுத்தும் தேரின் அடிச்சுவடு, பள்ளமாகச் சிறுகால் வகுத்ததுபோல் தோன்றும் என்று தேர் மிகுதியைக் கூறியவாறும். - (௬௬)

செய்ய திண்புயத் தெழிலினைக் கவர்ந்தமை தெரிந்து
வெய்ய மாந்தர்கள் வெதும்புறப் பன்முறை தாக்க
ஐய வோவென அலறுவ போலணி முழவம்
மைய வேலையுஞ் சமழ்ப்புற வயின்தொறுங் கறங்கும்.

(பொ - ரை.) யாவரும் விரும்பும் ஆடவர்கள், குங்குமக் குழம்பால் சிவந்த தம் திண்ணிய தோளினது அழகைக் கொள்ளை கொண்டமையை யறிந்து வருந்தும்படி பலமுறையும் மோத, அழகிய மத்தளங்கள் ஐயோவென்று கதறுதல் போலக் கரிய நிறமுடைய கடலும் நாணங்கொள்ள இடங்கள்தோறும் முழங்காநிற்கும்.

(வி - ரை.) ஆடவர்கள் மத்தளத்தை அடித்து முழக்குதலைத் தம் தோளின் அழகைக் கவர்ந்ததற்கு அடிப்பதாகக் குறித்து, அது முழங்குதலைக் கதறுவதாக இறும்பூதுறக் குறித்தார். (சுஎ)

மாண் சந்தன விரைச்செழுஞ் சேறும்
குலாய வீதிகால் வழுக்குமென் றஞ்சுபு கோணல்
நிலாமு டித்தவர் திருவிழாத் தொழவந்து நெருங்கும்
வலாரி ஆதியோர் அடிபடி யுருவகை நடப்பார்.

(பொ-ரை.) குதிரையின் வாய்நுரை நீரும் ஒள்ளிய சந்தனமாகிய மணத்தையுடைய செழுங்குழம்பும் விளங்கிய தெருவில் தம் கால்வழுக்குமென்றே வளையுள்ள இளம் பிறையை முடித்த சிவபெருமானார் திருவிழாவைத் தொழ வந்து நெருங்கிய இந்திரன் முதலிய தேவர்கள் அஞ்சி, தம் கால்கள் பூமியில் படாதவாறு நடப்பார்கள்.

(வி - ரை.) சிவபெருமானுக்கு நடக்கும் திருவிழாக் காட்சியைக் கண்டு தொழவந்த இந்திரன் முதலிய தேவர்கள், குதிரை வாய் நீராலும், கலவைச் சந்தனக் குழம்பாலும் சேறான தெருக்களில் தம் கால்களில் அது படியுமெனத் தம் கால்கள் கீழே படாதவாறு நடப்பரெனத் தேவர்களின் கால்கள் நிலத்தில் படியாத இயல்பைத் தற்குறிப் பேற்றம் தந்துரைத்தார். (சுஅ)

புரசைத் திண்களி றுலாத்தரும் பொலஞ்சுடர் மறுகிற்
பரசப் போதரு மன்னவர் பணிமுடி நெருக்கின்
அரசப் பன்மணி தெறித்துவீழ்ந் திமைப்பன அவியா
முரசப் பேரொலி அதிர்ப்பினில் உக்கமு துடுப்போல்.

(பொ-ரை.) கழுத்திடு கயிற்றையுடைய திண்ணிய யானைகள் திரிகின்ற பொன்னின் விளக்கமமைந்த காஞ்சித் திருநகரின் தெருவில் இறைவரை வணங்க வந்த அரசர்கள் பணியும் மணிமுடிகளின் நெருக்கத்தினால் நடுநாயகமாக வுள்ள பலவகைப்பட்ட மணிகள் அவற்றினின்று தெறித்து விழுந்து ஓயாத முரசங்களின் பேரொலியினால் சிந்திய பெரிய வான்மீன்களைப்போல விளங்காநின்றன.

(வி - ரை.) சிவபெருமானின் திருவடிகளை வணங்கும் அரசர்களின் மணிமுடிகளிலிருந்து தெறித்து வீழ்ந்த மணிகள்

விளங்குங் காட்சியானது, வானத்திலின்றும் உதிர்ந்த பெரிய நாள்மீனைப்போல விளங்காநின்றன என, செல்வமிகுதி புலப் படக் கூறினர். (சுசு)

**அங்கண் வீதியின் அணிநலங் காணுமா தரத்தின்**
**எங்கள் நாதனுந் திருவிழா என்பதோர் பெயரான்**
**மங்கை யாளொடு மகாரொடும் வானவர் பழிச்சத்**
**திங்கள் தோறெழுந் தருளுமேல் அதன்வளஞ் சிறிதோ.**

**(பொ - ரை.)** அவ்விடத்தில் உள்ள தெருவினது அழகின் நலத்தை விரும்பும் விருப்பத்தினால் எங்கள் இறைவனாகிய சிவபெருமானும் திருவிழாவென்னும் ஒரு பெயர் வைத்து உமையம்மையோடும் மூத்த பிள்ளையார் இளைய பிள்ளையாரோடும் தேவர்கள் வணங்கத் திங்கள்தோறும் எழுந்தருளுவாரானால் அத்தெருவின் வளமை சொல்லுதற்கு எளிதோ?

**(வி – ரை.)** திங்கள்தோறும் என்றது, பிரதோட விழா முதலியவற்றை. இறைவன் திருவிழாக் குறித்து உமையம்மையார், பிள்ளையார், முருகப்பெருமான் இவர்களோடு எழுந்தருளும் பேறு பெற்றமையால் 'அதன் வளஞ் சிறிதோ' என வியந்து கூறினர். (எ0)

மாளிகை

**பாலி யேமுதல் பலநதித் திவலைபாய்ந் தழகின்**
**பால வாயமா ளிகையடித் தலத்தினைப் பாராப்**
**பால வெண்சுதை மாடமேற் சிகரமும் பனிவிண்**
**பாலி யாற்றுநீர்த் திவலைகள் போர்ப்பவான் படரும்.**

**(பொ - ரை.)** பாலாறு முதலிய பல ஆறுகளின் துளிகள் பாய்தலால் அழகின் பகுதியன ஆகிய மாளிகைகளின் அடித்தலங்களைப் பால்போலும் வெள்ளிய சுதை தீற்றிய மாடங்களின் மேலுள்ள சிகரங்களும் பார்த்துக் குளிர்ந்த ஆகாயத்துள்ள கங்கையின் நீர்த்துளிகள் தம்மைப்போர்க்க வானுலக மட்டும் உயர்ந்தோங்கும்.

**(வி - ரை.)** மாளிகைகளின் அடித்தலங்கள் பாலி முதலியவற்றின் நீர்த்துளிகளை அடைதலால், அவற்றின் சிகரங்களும்

வானக்கங்கையின் நீர்த்துளிகளை அடைதற்கு உயர்ந்திருக்கும் என்பது, மாளிகைகளின் அடிப்பகுதியின் சிறப்பும் மேற்பகுதியின் சிறப்பும் கூறி மாடங்களின் மேன்மையை விளக்கியவாறும். (எக)

**பன்னி றப்பரி கருங்கரி தொழிலமை பல்தேர்**
**இன்ன கீழ்நிலை வாயிலின் இயங்குதல் நோக்கி**
**மன்னு மேனிலை வாயில்வெண் கரிபசு மான்தேர்**
**அன்ன ஏனவும் தன்னிடத் தியங்கவா னணவும்.**

**(பொ - ரை.)** பல நிறங்களையுடைய குதிரைகளும், கரிய யானைகளும், தொழில் முற்றிய பல தேர்களும், இவை போல்வனவும் கீழ்மாடங்களின் வாயிலில் இயங்குதலைப் பார்த்து நிலைபெற்ற மேன்மாடங்களின் வாயிலும் இந்திரனது ஐராவதமென்னும் யானையும் பசிய உச்சைச் சிரவமென்னும் குதிரையும் தேரும் அவைபோன்ற மற்றப் பொருள்களும் தன்னிடத்து இயங்க வானத்தை அளாவும்.

(வி - ரை.) மாடங்களின் கீழ்நிலை வாயிலில் குதிரை முதலியன இயங்குதல் நோக்கி, மேனிலைவாயிலும் இந்திரன் குதிரை முதலியன இயங்க வானத்தில் தோயும் என்றமையால் மாடத்தின் மேல் கீழ்ப்பகுதி விளங்குதலறிக. (எஉ)

**அலங்கு கீழ்நிலை மாடமங் கடுப்பினின் மாட்டும்**
**இலங்க கிற்புகை யான்விரை யேற்றுவர் மடவார்**
**புலங்கொள் மேனிலை மாடமும் புரிகுழற் கூட்டும்**
**துலங்க கிற்புகை யான்மணங் கஞுலுறத் தொகுப்பார்.**

**(பொ - ரை.)** பெண்கள் விளங்குகின்ற கீழ்நிலையாகிய மாடங்களை அக்கீழ்நிலையின் அடுப்பில் மாட்டி விளங்கும் அகிற்புகையினால் மணம் ஊட்டுவார்; பெண்கள் கண்ணேணக்கமமைந்த மேல்நிலையாகிய மாடங்களையும முறுக்கமைந்த தமது கூந்தலுக்கு ஊட்டும் விளங்குகின்ற அகிற்புகையால் நறுமணம் நெருங்கச் செறிப்பார்கள்.

(வி - ரை.) பெண்களானவர், மாடங்களின் கீழ்நிலைக்கு மணமூட்ட அடுப்பில் அகிற்கட்டையை மாட்டுவர் எனவும், அதைப்போல மேல்நிலைக்கு மணமூட்ட அகிற்புகையால் கூந்த

லைப் புலர்த்துவார் எனவும் அவர்கள் செல்வச்சிறப்புத் தோன்றக் கூறினர். (எரு)

இருசு டர்ப்பெருஞ் சிலைகளின் இயன்றமா ளிகைகள்
உருகு வெங்கதிர் தடவரச் சுடுகனல் உமிழும்
அருகு தண்கதிர் தடவரக் குளிர்புனல் அளிக்கும்
மருவி னோர்குணம் பிடிபடல் வையகத் தியல்பே.

(பொ - ரை.) பெருமைவாய்ந்த சூரிய சந்திரகாந்தக் கற்களாற் செய்த மேன்மாடங்கள் எப்பொருளும் உருகு தற்குக் காரணமாகிய ஞாயிறு தடவுதலால் சுடாநின்ற நெருப்பை ஒருபால் உமிழாநிற்கும்; பொருந்திய திங்கள் தடவுதலால் குளிர்ந்த நீரை ஒருபால் தாராநிற்கும்; நண்ப ரது குணம் அவரோடு நட்புக்கொண்டோர்க்குப்பிடிபடுதல் உலகத்தியல்பாகும்.

(வி - ரை.) நட்புக்கொண்டவர் இருவர் அவரவர் குணம் அவரவர்க்குப் பிடித்தமாதலைப்போலச் சூரிய சந்திரக்கற்கள் முறையே நெருப்பையும் நீரையும் அவைகள் தடவுதலால் உமிழா நிற்குமெனை இயற்கையைக்கூறி அவற்றால் உலகியலில் நட்பின் சிறப்பை விளக்கினர். (எசு)

நெறித்த கூந்தலார் மேனிலைச் சாளரக் கதவு
திறத்த லுந்தடை படுமகிற் புகையெலாந் திரண்டு
புறத்தின் ஏகுவ வழுதிதன் சிறைப்படும் புயல்கள்
மறித்து விட்டநாள் விரைந்துவிண் சேறலை மானும்.

(பொ - ரை.) அறல்பட்ட கூந்தலையுடைய பெண்கள் மேல்நிலையிலுள்ள பலகணியின் கதவைத்திறக்கத் தடைப் பட்டிருந்த அகிலின் புகையெல்லாம் திரண்டு புறத்திற் செல்லுதல், உக்கிரகுமார பாண்டியர் தமது சிறைச்சாலை யில் தளையிட்ட மேகங்களைச் சிறையினின்றும் மீளவிட்ட காலத்தில் அவை விரைந்து வானுலகத்தை அடைதலை ஒக்கும்.

(வி - ரை.) வழுதி - பாண்டியன். ஈண்டு உக்கிரகுமார பாண்டியர். இவர் மேகங்களைச் சிறையிட்டமையை,

"பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப
மழைபிணித் தாண்ட மன்னவன்"

எனவரும் சிலப்பதிகார அடிகளால் அறிக. (எ௫)

தெரித்த பன்மணி மாடமேல் திகழ்ந்தபொற் குடத்து
விரித்த தண்கதிர்க் கடவுள்நின் றசைதல்வேட் கோவர்
திரித்து விட்டசக் கரமெனல் ஆகுமத் திகிரி
பரித்த பச்சைமண் என்னலாம் அதற்பயில் களங்கம்,

**(பொ-ரை.)** ஆராய்ந்தெடுக்கப்பட்ட பல மணிக்கற்கள் பதித்த மேன்மாடத்தின்மேல் விளங்கிய பொன்னாலியற்றிய குடத்திற் பரப்பிய குளிர்ந்த கதிர்களையுடைய திங்களானது நின்றசைதல், குயவர்கள் குடத்தினின்று சுழற்றிவிட்ட சக்கரமென்று கூற அமையும்; அத் திங்களிடத்துப் பொருந்திய களங்கம் அச் சக்கரஞ் சுமந்த பச்சைமண்ணென்று சொல்லப் பொருந்தும்.

(வி-ரை.) குடத்தின்மேல் தோன்றிய திங்களின் கதிர் குயவர்களின் சக்கரத்தையும் அதன் களங்கம் பச்சைமண்ணையும் ஒப்பத்தோன்றும். (எ௬)

நிரவு நித்திலத் தோரணச் செழுங்கதிர் நிரைகள்
விரவி விண்ணெலாம் வெள்ளொளி விரித்தலான் அன்றே
பரவை மேலெழும் போதும்வீழ் பருவத்தும் அல்லால்
இரவி மண்டிலச் சேயொளி விளங்கிடா இயல்பே.

**(பொ-ரை.)** ஞாயிறு கடலில் தோன்றுங்காலத்தும் மறையுங்காலத்தும் அல்லாமல் அஞ்ஞாயிற்று மண்டிலத்தின் சிவந்த ஒளி விளங்காத தன்மை, வரிசைபெற்ற முத்தாலமைந்த தோரணத்தின் மிக்க கதிரின் வரிசைகள் வானமுற்றுங் கலந்து வெண்ணிறக் கதிர்களை விரித்தலால் அன்றோ?

(வி-ரை) ஞாயிறு, தோன்றுங்காலத்தும் மறையுங்காலத்தும் செம்பொற்குடம் போன்று செந்நிற ஒளியுடன் தோற்றும்.

1. சிலப். ௧௧:௨௮௧.

அவையன்றி மேலெழுந்து வருங்காலத்து வெண்ணிற ஒளிகொடு தோன்றுதலைக் காஞ்சிநகரத்துள்ள முத்துத் தோரணத்தின் ஒளியாலெனத் தற்குறிப் பேற்றம் தந்துரைத்தார். (எஎ)

திங்கள் செங்கதி ராளனென் றுரைப்பதே தேற்றம்
அங்கண் நித்திலத் தோரணத் தொளியினில் அரிபோல்
தங்கி வெண்கதி ராயினன் அதற்குறுஞ் சான்று
துங்க மாலையுங் காலையுஞ் சிவந்துதோன் றுவதே.

(பொ - ரை.) திங்கள் அவ்விடத்துள்ள முத்துத் தோரணத்தின் ஒளியில் தங்கி ஞாயிற்றைப்போல வெண்ணிறக் கதிர்களையுடையதாயிற்று; அத் திங்களைச் சிவந்த ஒளியுடையதென்று கூறுதலே உறுதி; அதற்குத் தக்க சான்று மேம்பட்ட மாலைப்பொழுதிலும் காலைப்பொழுதிலும் செந்நிறமாகத் தோன்றுதலேயாகும்.

(வி - ரை.) திங்களும் வெண்ணிறமாகத் தோன்றுதலால் அதுவும் முத்துத்தோரணத்தின் ஒளியில் தங்கினமையினாலேயாம்: அது, காலை, மாலை இருபொழுதும் செந்நிறமாகத்தோன்றுதலேயாம் எனத் தோன்றும் தன்மையைக் குறித்தார். (எஅ)

அணங்க னூர்நகைத் திடுந்தொறும் ஆங்கவர் வளர்த்த
கணங்கொள் முல்லைகள் முகைப்பன அவர்நகைக் கவினை
இணங்கி நாங்கவர்ந் தொளித்தமை அறிந்தனர் என்றே
வணங்கி நாணினுல் உடன்சிரித் திடுவது மானும்.

(பொ - ரை.) தெய்வப்பெண்களை யொத்த அந்நகர்ப் பெண்கள் நகைக்குந்தோறும் அவ்விடங்களில் அப்பெண்கள் வளர்த்த கூட்டங்கொண்ட முல்லைச்செடிகள் அரும்புதல், அப்பெண்கள் முறுவலழகினை நாம் இணங்கிக் கவர்ந்து ஒளித்த தன்மையை அவர் அறிந்தாரென்று நாணால் வணங்கி அவருடன் சிரித்தலை ஒக்கும்.

(வி - ரை.) பெண்களால் மலர்கின்ற மரம், கொடிகளில் முல்லையும் ஒன்றாதலால், 'அணங்கனூர் நகைத்திடுந்தொறும்... முல்லைகள் முகைப்பன' என்றார். மகளிரால் மலரும் மரங்களாவன: மகிழமரம் சுவைக்கவும், ஏழிலைம்பாலை மரம் நட்புக்கொள்ளவும், பாதிரிமரம் வையவும், முல்லைக்கொடி நகைக்கவும்,

புன்னைமரம் ஆடவும், குராமரம் அணைக்கவும், அசோகமரம் உதைக்கவும், குருக்கத்தி பாடவும், மராமரம் பார்க்கவும், சண்பக மரம் நிழல்படவும் தளிர்த்துப் பூப்பன என்பர். (எக)

**ஆட கத்தியல் மேனிலை மிசையணங் கனையார்**
**மாட கத்தனி யாழிசைக் குவந்துறும் வான**
**நாட கத்துவெண் களிற்றினை நளினமென் மலர்ப்பூம்**
**பாட கத்தடி நடையினுற் பருவர லுறுப்பார்.**

**(பொ - ரை.)** ஆடகப் பொன்னாலமைத்த மேன் மாடத்தின்மேல் தெய்வப்பெண்களை யொத்த பெண்கள் தடவும் முறுக்காணியமைந்த ஒப்பற்ற வீணையின் இசைக்கு மகிழ்ச்சி மிகுந்தமைந்த வானுலகத்துள்ள வெள்ளை யானையை மெல்லிய தாமரை மலரையொத்த பொலிவமைந்த பாடகத்தினையணிந்த தம் கால் நடையால் துன்பஞ் செய் வார்கள்.

**(வி - ரை.)** ஆடகம், கிளிச்சிறை, சாம்புநதம், சாதரூபம் எனப் பொன்னில் நான்குவகை உண்டு. அவற்றுள் ஒன்றான ஆடகத்தாற் செய்த மேன்மாடத்தை 'ஆடகத்தியல் மேல் நிலை' என்றார். மாடகம் – முறுக்காணி. வானநாடு – தேவருலகம், பருவரல் - துன்பம். (அ0)

**பளிக்கு மேனிலத் தந்நலார் பணைமுலை ஞெமுங்கக்**
**களிக்கும் ஆடவர் தமைத்தழீஇக் காமப்போர்க் கலவி**
**விளைக்கும் ஆற்றலைக் குரவனில் விழைந்தவன் ஒருசார்**
**ஒளித்தி ருந்துகாண் போனெனச் சுருங்கையுள் நுழையும்.**

**(பொ - ரை.)** பளிங்காலியற்றிய மேல்மாடங்களி லுள்ள பெண்கள், தம் நெருங்கிய கொங்கைகள் அழுந்தக் களிகூரும் ஆடவரைத் தழுவிக் காமக்கலவிப்போரைச் செய்யும் வன்மையைத் தன் ஆசிரியன் மனைவியை விரும் பிய திங்கள் ஒரு பக்கத்தில் ஒளித்திருந்து காண்பவனைப் போலக் கள்ளவழி வாசலின் வழியாய் நுழைவான்.

**(வி - ரை.)** ஆசிரியன் மனைவியை விரும்பித் திங்கள் புணர்ந் தமையால் எல்லாப் பாதகங்கட்கும் உடம்படுவான் என்பார் 'சுருங்கையுள் நுழையும்' என்றார். (அக)

மேனி லத்தர மியத்திடைத் துயிலுமெல் லியலார்
ஆன னத்தெழில் கவர்ந்துசெல் மதியினை யவர்தம்
கான லர்க்குழற் காரளி பின்தொடர்ந் துதைப்ப
ஈன முற்றவத் தழும்புவான் கறையென இலங்கும்.

(பொ - ரை.) மேல்மாடத்துள்ள நிலாமுற்றத்தில் துயில்கூரும் பெண்களது முகத்தின் அழகைக் கொள்ளை கொண்டு செல்கின்ற திங்களை அப் பெண்களின் மணமிக்க மலரையணிந்த கூந்தலிலுள்ள கரிய வண்டுகள் பின்னை தொடர்ந்து உதைக்க, அதனால் வடுப்பட்ட அத்தழும்பே பெரிய கறையென்று சொல்ல விளங்காநிற்கும்.

(வி - ரை.) திங்களிடத்துள்ள களங்கத்தினை நிலாமுற்றத்தில் துயிலும் பெண்கள் முகத்தின் அழகைத் திங்கள் கவர்ந்து சென்றபோது அவர்கள் கூந்தலிலுள்ள வண்டுகள் பார்த்து அத் திங்களின் பின்னே தொடர்ந்து உதைத்தலால் வடுப்பட்ட தழும்பு எனத் தற்குறிப்பேற்ற அணி தந்து கூறினர். (அ௨)

உங்கண் மாதரார் முகத்தெழில் நோக்கியோர் வடிவங்
கங்க ணன்குளான் படைத்ததில் அவயவங் காண்பான்
அங்கண் முன்னுற வகுப்புழி அஞ்சனங் குலையப்
பங்க முற்றதென் றொழித்ததை மதியெனப் பகர்வார்.

(பொ - ரை.) அந்நகரிலுள்ள பெண்களது முகத்தினது அழகைக்கண்டு அதுபோலும் ஓர் உருவினை நான்கு தலையையுடைய பிரமன் உண்டாக்கி, அவ்வுருவத்தில் உறுப்புக்களைக்காண அழகிய கண்ணை முன்னே படைக்குமிடத்து எழுதிய அஞ்சனங்குலைய மறுவடைந்ததெனை அப்பிரமனால் ஒழித்ததைத் திங்களென்று உலகிலுள்ளோர் உரைப்பார்கள்.

(வி - ரை.) உங்கண் - அவ்விடத்து: உகரச்சுட்டு சேய்மைச் சுட்டுப்பொருளில் வந்தது. பிரமன் பெண்களின் முகத்தழகைப் படைக்குமிடத்து முதற்கண், கண்ணைப்படைத்து அதில் எழுதிய அஞ்சனங்குலைய ஒழித்ததைத் திங்களென்று உலகிலுள்ளோர் கூறுவரெனக் காரணப் புனைவிலிப் புகழ்ச்சியணி தோன்றக் கூறினர். (அ௩)

இவ்வ ரைப்பினி லிரவியு மதியமும் வழியே
செவ்வ னேகுறு தொதுங்குவ திவர்முகச் சீர்க்கும்
பவ்வ நேரக லல்குற்கும் வடிவொடு பணைத்தேர்
ஒவ்வு றாமைகண் டுட்கொளும் உட்கினா லன்றே.

(பொ - ரை.) இத் திருநகரில் ஞாயிறும் திங்களும் இவ்வழியே நேராகச் செல்லாது ஒதுங்குதல், இப்பெண்களின் முகத்தின் பொலிவிற்கும் கடலையொத்த அகன்ற அல்குலுக்கும் வடிவோடு பெருத்த தேரானது ஒப்பாகாமையைக் கண்டு மனத்திற் கொண்டுள்ள நாணத்தால் அன்றோ?

(வி - ரை.) திங்கள், முகவடிவிற்கும் ஞாயிறு, தனது தேர்த்தட்டு அவர்தம் அல்குற் பரப்பிற்கும் ஒவ்வாதிருத்தலைக் கண்டு தாம் கொண்ட நாணத்தினால் என, இயற்கையாக நிகழும் நிகழ்ச்சியைத் தற்குறிப்பேற்ற அணி அழகுபெறக் கூறினார் (அ௪)

தங்கள் வான்முக மதியெனச் சார்தரும் பணிக்குத்
துங்க மாடமேன் மின்னனார் வேற்றுமை தோற்றத்
திங்கள் மாட்டறி குறியொன்று செய்துவைத் தனரால்
அங்கண் மாநிலங் களங்கமென் றிடப்படு மதுவே.

(பொ - ரை.) தங்களது ஒளி பொருந்திய முகத்தைத் திங்களென்று வந்தடைகின்ற இராகுவாகிய பாம்புக்கு, உயர்ந்த மேன்மாடத்திலுள்ள மின்னலையொத்த பெண்கள் இது முகமென்றும் திங்களென்றும் வேற்றுமையறிதற்குத் அத்திங்களிடத்து ஓர் அடையாளத்தைச் செய்துவைத்தார்கள்; அதனை அழகிய இடமகன்ற பெரிய உலகம் களங்கமென்று கூறுகிற்கும்.

(வி - ரை.) பெண்கள், இராகுவென்னும் பாம்பு தம் முகத்திற்கும் திங்கட்கும் வேறுபாடுகாணக் குறிக்க அமைத்ததையே உலகோர் களங்கமென்று கூறுவார்கள்.

மறைந்தி டாமறுப் பயின்மதி முகத்தெழில் பெறாது
குறைந்து பார்க்குமங் கரிவைமார் கோணுதல் கடுப்ப

நிறைந்து பார்க்குமீண் டவர்முக நிகர்ப்பமற் றிவ்வாறு
அறைந்த திங்கள்தோ றலமரும் அக்கரைப் பசுப்போல்.

(பொ - ரை.) மாறாமல் மறுவமைந்த திங்கள், அந்நகரிலுள்ள பெண்களின் முகப்பொலிவினைப் பெறுமையி னால் வளர்ந்த நெற்றியையாவது ஒத்துத் தோன்றத் தனது கலைநிறைந்த உருவமானது குறைந்து பார்க்கும்; இவ்வாறு அக்கரையிலுள்ள பசுவைப்போல் வருகின்ற சொல்லிய சுழலாநிற்கும்.

(வி - ரை.) ஆற்றினது அக்கரையில் புல்மேயவந்த பசுவா னது இக்கரையிலும் புல்லுள்ளதென அக்கரைக்கும் இக்கரைக் கும் அலைதல்போல, மாதர் முகத்தின் அழகையும் நெற்றியின் அழகையும் ஒவ்வாத திங்கள், வளர்ந்து பார்க்கும், குறைந்து பார்க்கும் என, திங்கள் வளர்தல் தேய்தலாகிய செயலை அழகுற எடுத்தியம்பினர். (அசு)

கதிர்செய் மாடமேற் புலவிதீர் கலவியின் முடிவின்
வெதிர்செய் தோளியர் கொண்கர்தம் மருமமேல் வதனம்
பதிய வைத்தனர் துயிலுவர் அற்றம்பார்த் திருந்து
புதுமு கத்தெழில் உடுபதி வௌவுறாப் பொருட்டே.

(பொ - ரை.) சமயம் பார்த்திருந்து தமது புதிய முகத்தினது அழகைத் திங்களானது கொள்ளைகொள்ளா மற் பொருட்டாகவே, மூங்கிலையொத்த தோள்களையுடைய பெண்கள், விளக்கஞ் செய்கின்ற மேன்மாடத்தின் மேல் ஊடல் நீங்கிப் புணரும் தழுவுதலின் முடிவில், தம் கொழு நரது மார்பின்மேல் முகம் பதியவைத்துத் துயில்கொள் ளுவர்.

(வி - ரை.) பெண்கள், தம் கொழுநருடன் தழுவிய கலவிச் சோர்வினால் தம் கொழுநர் மார்பின்மேல் முகப்பதியத் துயில் கொள்ளுதலை, அவர் முகத்தழகைக் கவராமற் பொருட்டெனத் தற்குறிப்பேற்ற மூறக் கூறினர். (அஎ)

தேங்கு மூடலின் மாதரார் பறித்தெறி செங்கேழ்
ஒங்கு பன்மணி யவரடி வருந்திநைந் துளைய

ஆங்கு நாடொறும் பைதுறுத் தவிர்வன கொடிதாத்
தாங்கள் செய்வினை தங்களுக் கேபகை யாமே.

(பொ - ரை.) நிறைந்த ஊடலால் பெண்கள் பறித்தெறிந்த செந்நிறமிக்க பல மாணிக்கங்கள், அவர் கால்கள் வருத்தங்கூர்ந்து நைந்துபெலிய அவ்விடத்து நாள்தோறும் வருத்தஞ்செய்து விளங்காநின்றன; ஒருவருக்குத் தாம் செய்யும் கருமம் தங்களுக்கே பகையாமன்றோ?

(வி - ரை.) ஒருவர் செய்தவினை அவரை வந்து வருத்துதல் போல, பெண்கள் ஊடற்காலத்து பறித்தெறிந்த மாணிக்க வடத்திலுள்ள மணிகள் சிதறிக்கிடப்பன, அவர்கள் மிதிக்குங் கால் அவர்கள் கால்களை வருத்துவனவாம். (அஅ)

விருந்து நாடொறு மிடையறு தெதிருமே தகவால்
அருந்தி றற்சிறு புதல்வர்சூழ்ந் தணுகிடுந் திறத்தால்
முருந்து மூரலார்க் காயிடைக் கொழுநர்பால் மூண்ட
மருந்தி லூடலுஞ் சிறுவரை யன்றிமே வாதால்

(பொ - ரை.) விருந்தினை நாள்தோறும் இடைவிடாமற் கொள்ளுகின்ற மேன்மையினாலும், அடைதற்கரிய வன்மையையுடைய இளம்புதல்வர்கள் தம்மைச் சூழ்ந்து நெருங்கிய திறத்தினாலும், மயிலின் இறகினடியையொத்த பற்களையுடைய பெண்களுக்குத் தம் கொழுநரிடத்து உண்டாகிய வாயிலால் அன்றி மருந்தால் தீராத ஊடலும் சிறுபொழுதளவின்றி நெடிது நில்லாது.

(வி - ரை.) ஊடலைத் தீர்த்தற்கு வாயில், விருந்தும் புதல்வருமேயாவர். இந்நகரத்தில் விருந்துக்கும் புதல்வர்ப் பேற்றுக்கும்குறைவில்லையாதலால் 'மருந்தில் ஊடலும் சிறுவரையன்றி மேவாதால்' என்றார். (அக)

மேணி லத்துவந் துலாவிடுங் கடவுள்மேல் லியலார்
தாழ்நி லத்துறுங் கூவல்கள் நோக்கிநந் தமைப்போற்
கீழ்நி லத்தவர் தாமுமிங் கெய்தினர் கெழீஇப்போம்
ஊழ்நி லைத்தபல் பிலங்கொலாம் உவையென வியப்பார்.

(பொ - ரை.) அந் நகரிலுள்ள மேல்மாடத்தில் வந்து உலாவும் தெய்வப் பெண்கள் கீழ்நிலத்தில் அமைந்த கிணறுகளைப் பார்த்தலினால் அதனிற் புலப்படும் தமது எதிர்த் தோற்ற உருவத்தை 'நம்மைப்போல நாகவுலகத்து நாக கன்னியரும் இங்கு வந்தனரோ? இங்கு வந்து போகின்ற முறையாக நிலத்த பல வெடிப்பு வழிகளோ?' இவையென வியப்புக்கொள்வார்கள்.

(வி-ரை.) மேன்மாடத்து உலாவுகின்ற தெய்வப் பெண்கள் கீழ்நிலையிலுள்ள கிணற்றைப் பார்த்து, அதில் தோன்றும் தம் நிழலுருவை 'நம்மைப்போல நாகருலக மங்கையரும் இங்கு வந்தனரோ? இங்குத் தோன்றும் கிணறு அவர்கள் போக்குவரவு செய்தற்கு அமைந்த பிலத்துவழியோ?' வென்று மயங்குதலைக் கூறுதலினால், அந்நகர மேன்மாடத்து உயர்ச்சியை விளக்கிய வாறும். (௰)

கலிவிருத்தம்

கால மன்றிக் கனிவுற மாதனைக்கு
ஏல வான்புகை யேற்றுதல் போன்மினார்
சால வெம்முலைச் சாந்தம்பு லர்த்திடு
நீல தூம நிமிர்ந்தெழு மெங்கணும்.

(பொ - ரை.) பருவகாலத்தில் அன்றி மற்றைக் காலத்தில் பழுக்க மாதுளைக்குப் பொருந்த மிக்க புகையை ஊட்டுதல்போல, மின்னற்கொடிபோன்ற பெண்கள் மிகவும் விருப்பத்தைத் தருகின்ற கொங்கையில் திமிர்ந்த சந்தனக் குழம்பைப் புலர்த்துதற்கு மூட்டிய கரிய அகிற்கட்டையின் புகையானது எவ்விடத்தும் நிமிர்ந்து மேலெழா நிற்கும்.

(வி - ரை.) மாதுளை பருவமல்லாத காலத்தில் கனியப் புகையேற்றுதல்போலக் கொங்கைகளிற் பூசிய சாந்தம் காலமல்லாத காலத்தில் புலரப் புகைமூட்டினர் என்க. (௧௧)

கொன்னும் வார்குழற் கூட்டுங்கு ரூஉப்புகை
அந்ந லாரைப் பொதிவ தவர்தமைத்
தன்னி னீங்கிய மின்னெனத் தண்முகில்
உன்னி வந்து வளைந்திட லொக்குமே.

(பொ - ரை.) மிகவும் நீண்ட கூந்தலுக்கு ஊட்டு கின்ற கருநிறம் வாய்ந்த அகிற்புகை பெண்களைச் சூழ்ந்து மூடுதல், அப் பெண்களைக் குளிர்ச்சிவாய்ந்த மேகம் தன்னி னின்று நீங்கிய மின்னலெனக் கருதிவந்து வளைதலை ஒத்துத் தோன்றும்.

(வி - ரை.) பெண்கள், கூந்தலுக்கு ஊட்டிய அகிற்புகை அவர்களைச் சூழ்தலை மேகம் தன்னினின்றும் நீங்கிய மின்னலைத் தான் வந்து வளைதல்போல் இருந்ததெனத் தற்குறிப்பேற்ற அணி பெற அமைத்துரைத்தார். (கூ௨)

வார்கொள் கொங்கை மலர்க்கணை யேறிடும்
ஏர்கொள் தொய்யிற் கருப்புவி லேந்துவார்
தார்ம லர்க்குழல் நாரியர் தாங்கள்தாம்
வீர வேள்படை யென்றறி விப்பபோல்.

(பொ - ரை.) கச்சணிந்த கொங்கையின்மேல் மலரம் பினையேற்றிட்ட கரும்புவில்லை அழகமைந்த தொய்யிலாக மலரால் தொடுத்த மாலையையணிந்த கூந்தலையுடைய பெண் கள், தாம் வீரத்தையுடைய மன்மதனது படையென்று பிறர்க்கு அறிவித்தல்போல ஏந்துவார்கள்.

(வி—ரை.) பெண்கள் தம் கொங்கைகளின்மேல் மலர்களை யேற்றிய கரும்புவில் வடிவத்தை எழுதியிருத்தல், தாம் மன்மதன் படையென்பதைக் காட்டுதலை ஒக்குமென்று வியப்புற மொழிந் தார். (கூ௩)

நாறு தோட்டு நளினமி ரண்டினின்
மாறி மாறிவீழ் வண்டின மாமெனக்
கூறு மாதர் குழீஇயிருந் தாடுசீர்
ஏறும் அம்மனைப் பாட்டிசை யெங்கணும்.

(பொ - ரை.) மணங்கமழுகின்ற இதழினையுடைய இரண்டு தாமரைகளின்மேல் மாறிமாறி விழுகின்ற வண்டின் கூட்டங்கள் ஆமென்று கண்டவர் சொல்ல, யாவரும் புகழ்ந்து கூறுகின்ற அந்நகர்ப் பெண்கள் சேர்ந்திருந்து விளையாடும் சிறப்பமைந்த அம்மனையின் பாட்டிசைகள் எவ்விடத்தும் உள்ளன.

(வி - ரை.) இரண்டு தாமரைமலர்களில் மாறிமாறி வீழ்கின்ற வண்டுக்கூட்டங்கள் என்னுமாறு பெண்கள் கூடியிருந்து அம்மனைக் காய்கள் எறிந்து விளையாடுவார்கள். அம்மனைக் காய்களின் தோற்றம் வண்டைப்போலாகவும், அதைக்கொண்டு விளையாடுகின்ற உள்ளங்கையின் தோற்றம் தாமரை மலராகவும் குறித்தார். (கச)

தங்கள் பண்மொழிக் கொக்குந்த கைமையை
அங்க ணுய்பவ ரேய்ப்ப அணிமலர்ச்
செங்கை மெல்விரல் சேர்த்தித் திவவியாழ்
எங்கு மங்கையர் பாடுவ ரெண்ணிலார்.

(பொ.- ரை.) பெண்கள் தங்களது இசையையொத்த சொல்லுக்கு யாழிசை ஒக்கும் தன்மையை அவ்விடத்து ஆராய்ந்து பார்ப்பவரைப்போல, வார்க்கட்டமைந்த யாழினது நரம்பை அழகிய தாமரைமலரையொத்த சிவந்த கைகளிலுள்ள மெல்லிய விரலால் தடவி எங்கும் பாடுவோர் அளவற்றவர் ஆவர்.

(வி - ரை.) மங்கையர் பொழுதுபோக்கிற்காக யாழ்வாசித்தலைத் தமது இசையையொத்த சொல்லுக்கு யாழிசை ஒத்திருக்கிறதா? என, ஆராய்வார்போல் இருப்பதாகக் குறித்து அவர் செல்வநிலை புலப்படுத்தினர். (கரு)

வேறு

கொங்கையி னெதிருறக் கூசி னுலெனப்
பொங்கொளித் தாளம்பின் னொலிப்பப் பூவைமார்
மங்கலச் சதிநெறி வழாம லாடரங்
கெங்கணு நூபுரத் திசையி னீட்டமே.

(பொ - ரை.) தம் கொங்கைக்கு எதிரேவரக் கூசியதுபோல ஒளிமிக்க தாளமானது பின்னின்றொலிக்க, பெண்களானவர் மங்கலம் வாய்ந்த தாளவொத்தின் முறை கெடாமல் நடனஞ்செய்கின்ற நாடகசாலையெங்கும் சிலம்பின் ஓசையின் கூட்டமுள்ளன.

(வி - ரை.) தாளம் கொங்கையின் வடிவிற்ருயிருத்தலின் அது பின்னின்ருெலித்தலைக் 'கொங்கையின் எதிருறக் கூசிறு லென......தாளம் பின்ருெலிப்ப' என்றார். சதி—தாளவொத்து. நூபுரம்-சிலம்பு. (கசு)

மைந்தர்பந் தெறிதலு மாடப் பித்திகை
சிந்துவ பன்மணி செழியன் செண்டெடுத்து
உந்தியன் ருேச்சலும் உலப்பி லாநிதி
தந்திடும் வடதிசைச் சாரற் குன்றுபோல்.

(பொ - ரை.) உக்கிரகுமார பாண்டியர் செண்டாயு தத்தையெடுத்து அக்காலத்தில் மோதித் தாக்க அளவற்ற பொற்குவியலைத் தந்த வடதிசைக்கணுள்ள சாரலமைந்த மேருமலையைப்போல, ஆடவர்கள் எறிந்த பந்து தாக்குத லால் மாடங்களிலுள்ள சுவர்த்தலங்கள் பலஇரத்தின மணி

(வி - ரை.) மைந்தர்-ஆடவர். பித்திகை - சுவர்த்தலம். செழியன்-உக்கிரகுமார பாண்டியர். ஓச்சுதல்-மோதித்தாக்கு தல் சாரல்-மலைச்சரிவு. (கஎ)

மணிப்பொலம் பூட்சிருர் விடுக்கும் வான்படந்
தணித்தொறும் விடுந்தொறுந் தணிந்து நீள்வன
கணிப்பரு நந்திநெட் டுயிர்ப்பின் காற்றிடைப்
பணிப்பகை முன்னுழல் பரிசு காட்டுமே.

(பொ - ரை.) இரத்தினக் கற்கள் அழுத்திய பொன் ஞலமைந்த பூணணிந்த மைந்தர்கள் விடுக்கின்ற பெரிய காற்ருடியை இழுக்குந்தோறும் விடுந்தோறும் உள்வாங்கிப் பின்பு நீளுதல், அளத்தற்கரிய இடபதேவரது பெருமூச் சாகிய காற்றில் கருடன் முன்பு சுழன்று திரியும் தன்மை யைக் காட்டாநிற்கும்.

(வி - ரை.) பெரிய காற்ருடியை ஆடவர்கள் இழுக்குந் தோறும் விடுந்தோறும் உள்வாங்கிப் பின் நீளுதல், காளைவடி வினரான நந்திதேவர் பெருமூச்சின்முன் கருடன் சுழன்று திரிந்த தன்மையை ஒத்திருக்கும். (கஅ)

மாடமேற் சிறுமகார் விடுக்கும் வண்படம்
பாடல்சா லிருசுடர் தம்மைப் பற்றுவான்
நாடின திரிதரு நாக மென்னவும்
ஆடுவ விசும்பிடை அமரர் நோக்கவே.

(பொ - ரை.) மேன்மாடத்தின்மேல் சிறுவர்கள் நின்று விடுக்கின்ற வளப்பமுள்ள காற்றாடிகள் பாடலிலமைந்த திங்கள் ஞாயிற்றினைக் கவர நாடித்திரிகின்ற இராகு கேதுக் களைப்போல வானத்தினிடத்துத் தேவர்கள் பார்த்து வியக்க ஆடாநின்றன.

(வி - ரை.) மேன்மாடத்தினின்று சிறுவர்கள் விடுக்கின்ற சிறந்த காற்றாடிகள், சந்திர சூரியர்களைப்பிடிக்கத் தேடித் திரி கின்ற இராகு கேதுவென்னும் பாம்புகளை ஒத்திருக்கும். படம்-காற்றாடி. இக்காலத்து இதனைப் பட்டம் என்று வழங்குப. நாடின: முற்றெச்சம். உம்மை: அசைநிலை. (௧௧)

அட்டிலிற் குய்ப்புகை அணங்க னூர்குழற்கு
இட்டிடும் அகிற்புகை மகத்தெ ழும்புகை
முட்டிமேற் பரந்தெங்கு மொய்த்த தோர்கிலார்
வட்டவான் செழும்புகை வண்ண மென்பரே.

(பொ - ரை.) அடுக்களையில் தாளிக்கும் புகையும், தெய்வப்பெண்களையொத்த பெண்கள் கூந்தலுக்கு ஊட்டும் அகிற்புகையும், வேள்வியில் எழுகின்ற புகையும் அளாவி மேலே பரந்து எவ்விடத்தும் நெருங்கியதை யுணராமல் வட்டமாயுள்ள வானம் செழித்த புகையின் நிறமென்று கூறுவார்கள்.

(வி - ரை.) உலகில் செல்வச் செழிப்புள்ளவர் அறமும் இன்பமும் வீடுபேறும் பெறுதலே செல்வத்தைப் பெற்றதன் பயனாகும். அப் பயன் முழுதும் தரும் நாடென்பதை இப்புகைப் பெருக்கத்தின் மேல் வைத்துக் கூறினர்.

இவ்வாறே இளங்கோவடிகளார் மதுரைநகர் அறம்பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பெரும்பயனும்மிக்க நகரென்பாராய்,

1" அட்டிற் புகையும் அகலங் காடி
முட்டாக் கூவியர் மோதகப் புகையும்
மைந்தரும் மகளிரும் மாடத் தெடுத்த
அந்தீம் புகையும் ஆகுதிப் புகையும்
பல்வேறு பூம்புகை அளைஇ"

எனப், இப்புகைகளின்மேல் வைத்துக் கூறுதலான் அறியப் பெறும். (௧௦௦)

வேள்விச்சாலை

இந்திர னூர்தியிங் கெய்தித் தன்முடிச்
சுந்தரஞ் சிதைதரத் துதையச் சீறித்தன்
மந்திரப் புகையினால் வலாரி யூரெழில்
சிந்திடச் செய்வசீர் வேள்விச் சாலையே.

(பொ - ரை.) தேவேந்திரன் ஊர்தியாகிய மேகங்கள் இவ்விடத்துவந்து தனது முடியின் அழகுகெட நெருங்குதலால், வேள்விச் சாலையானது சினந்து தன்னிடத்து மந்திர விதியால் அமைந்த வேள்விப்புகையால் அவ்விந்திரனது நகரத்தின் அழகுசிந்தச் செய்யாநின்றன.

(வி - ரை.) வேள்விச் சாலையிலுள்ள புகை வானிற்படர்தலை, இந்திரனது ஊர்தியாகிய மேகம்வந்து படிந்து தனது சிகரத்தின் அழகைக் கெடுத்தலையறிந்து சினந்து, வேள்விச்சாலையின் புகையால் வானுலகத்தின் அழகைக் கெடுக்காநின்றன என வியப்புச் சுவை அமைய உருவகஞ்செய்து உரைத்தார். (௧௦௧)

எழுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

ஆகுதித் தழலி னறுதொழி லாளர்
அருமறை மனுவெடுத் தோதி
ஓகையிற் சொரிநெய் தெறித்தெழும் பிதிர்வும்
ஒலிபடு புலிங்கமுங் கொண்டு
மேகமாய்ப் படர்ந்த தூமமே யிடித்து
மின்னிநீர் பொழிவன போலும்
ஈகைசால் வேள்வி மறுத்துழி மாரி
இன்மையே இதற்குறு சான்றால்.

1. சிலப். ௯ : ௧௨௨ - ௬.

(பொ - ரை.) ஓதுதல் முதலிய அறுதொழிலையுடைய அந்தணர்கள், ஆகுதியாக வேள்வித்தீயில் சொல்லுதற்கரிய வேத மந்திரங்களை யெடுத்துக்கூறி விருப்பத்தோடு சொரிகின்ற நெய்யைத் தெறித்தலால், அதிலெழும் திவலையையும் சடசட என்னும் ஒலிமிக்க தீப்பொறியையுங் கொண்டு மேகமாகிப் பரந்த புகையே மின்னி நீரைச்சொரிதல் போலும்; தேவர்கட்குக் கொடுத்தல் அமைந்த இவ்வேள்வி செய்யாத காலத்தில் மழையில்லாமையே இதற்கு மிகுந்த சான்றாகும்.

(வி - ரை.) வேள்விப்புகையே மேகமாகவும் ஆகவனீயம், காருகபத்தியம், தென்றிசை அங்கி என்னும் மூவகை வேள்வித் தீயின் ஒலியும் பொறியும் இடியும் மின்னலுமாகவும் ஆகுதியாகிய நெய்யினது பிதிர்வே மழையாகவுங் கூறினர். வேள்வியால் மழை பொழிந்து நாடு கலி நீங்கி வாழுமென்பதை,

[1] "கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம் பலம்மேய
முற்றா வெண்திங்கள் முதல்வன் பாதமே
பற்றாநின் றாரைப் பற்றா பாவமே."

எனவரும் ஆளுடையபிள்ளையார் தேவாரத்தானும் அறிக.

(கo உ)

அந்தணர் இருக்கை

பூசுரப் பெயரின் இருமொழிப் பொருட்கும்
உரிமைபூண் டுறுநிலைக் கேற்பக்
காசினி வரைப்பில் நாடொறும் வழாது
கமழ்சுவை அடிசிலா னதிதி
பூசையும் வேள்வி அவியினுற் கடவுட்
பூசையும் ஒருங்குசெய் கடப்பாடு
ஆசற ஆற்றும் பார்ப்பன வாகை
அறிஞர்வா ழிடம்பல அவண.

(பொ - ரை.) தமக்கு வாய்ந்த பூசுரர் என்னும் பெயரின் இருமொழிக்கும் உரிய பொருளினுக்கும் தாம் உரிமை-

1. திருஞானசம்பந்தர் தேவாரம், பதிகம், ௨0௩.

பூண்டு நிற்கும் நிலையினுக்குப் பொருந்த நிலவுலகில் நாள் தோறும் வழுவாமல் நன்மணங்கமழும் சுவைமிக்க உணவால் விருந்தினர்க்குச் செய்யும் பூசையும், வேள்வியிற் பெய்கின்ற அவியினால் தேவர்க்குச் செய்கின்ற வழிபாட்டினையும், ஒரு சேரச் செய்கின்ற முறைமையைக் குற்றமறச் செய்யும் பார்ப்பன வாகையையுடைய அந்தணர்கள் வாழும் இடங்கள் பல அவ்விடத்தில் உள்ளன.

(வி - ரை.) பூசுரர், பூ+சுரர் எனப் பிரித்து மண்ணுலகத் தேவர்கள் எனப் பொருள்கொள்ளக் கிடத்தலால் 'இருமொழிப் பொருட்கும் உரிமைபூண்டு' என்றார். உலகில் மக்கள் செய்கின்ற வேள்வி ஐந்தனுள் மக்கள் வேள்வியையும், சுரர் என்றமையால் தேவ வேள்வியையும் உணர்த்தி நின்றன. இவ்விரண்டும் அந்தணர்கட்கு இன்றியமையாதது. இவையிற்றை வழாது செய்வோர் பார்ப்பன வாகை பெற்றோராவர். ஆகவே, "பார்ப்பன வாகை அறிஞர்' எனக் கூறினர். பார்ப்பன வாகையை,

[1]" ஓதங் கரைதவழ்நீர் வேலி உலகினில்
வேதங் கரைகண்டான் வீற்றிருக்கும்—ஏதம்
சுடுசுடர்தான் ஆகிச் சொல்லவே வீழ்ந்த
விடுசுடர் வேள்வி அகத்து."

எனவரும் புறப்பொருள் வெண்பாமாலைச் செய்யுளான் அறிக. (௧0௩)

அரசர் இருக்கை

தகைபெறு வலியால் தெம்முனை முருக்கிக்
காவற்சா காடுகைத் தெங்கும்
திகிரியோன் றுருட்டி முறையுவி செங்கோல்
செலுத்துநர் கள்வர்மற் றுயிர்கள்
பகைவர்தாந் தமரென் றிவ்வயி னெய்தும்
பயந்தடுத் துலகெலாம் புரக்கும்
மிகுபுகழ் படைத்த அரசியல் வாழ்க்கை
வீரர்வாழ் இடம்பல அவண.

(பொ - ரை.) பொலிவுபெற்ற தம் வலிமையினால் பகைவரைப் போர்முனையிற் சாய்த்துக் காவலாகிய பண்டி

1. புறப்பொருள் வெண்பா மாலை, வாகை : ௬.

யைச் செலுத்தி ஒரு சக்கரத்தை உருட்டி மனுமுறைப் படியே செங்கோல் செலுத்துகின்ற அரசர், கள்வரும் உயிர்களும் பகைவர்களும் தாமும் உறவினரும் என்று சொல்லப்பட்ட இவ்விடங்களினால் குடிகளுக்கு வருகின்ற அச்சத்தைத் தடுத்து மிக்க புகழுடைய அரசியல்வாழ்க்கையை யுடைய வீரர்கள் வாழும் பல இடங்கள் அவ்விடத்துள்ளன.

(வி-ரை.) இதில் அரச வாகைத்துறையமைந்த வீரர் சிறப்புக் கூறப்படுகின்றது. அரசவாகையாவது: தம்மாற காக்கப்படும் உயிர்கட்குத் தம் சுற்றத்தார், விலங்கு, பகைவர், கள்வர், தாம் என்னும் ஐவகையால் வரும் துன்பத்தைத் தீர்த்தல். இதனை,

[1] "மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக் கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த் தறங்காப்பான் அல்லனோ."

எனவரும் திருத்தொண்டர் புராணத்தால் உணர்க. (கOச)

வணிகர் இருக்கை

மேதகு விரிஞ்சன் அரும்பெறற் குறங்கை
விழைதகை யாயெனப் படைத்தோர்
ஏதிலர் பொருளுந் தம்மபோற் பேணி
வாணிப மீட்டுநர் வடாது
மாதிரத் தலைவன் புறங்கொடுத் திரியும்
வளத்தினர் மறைநெறி யொழுக்கம்
ஆதரித் துயர்ந்த விழுக்குடி வணிகர்
அமர்ந்துவாழ் இடம்பல அவண.

(பொ - ரை.) மேன்மைமிக்க பிரமனது பெறுதற்கரிய தொடையை விரும்பத்தக்க தாயாகப் பெற்றவரும், அயலாருடைய பொருளையும் தம் பொருள்போல விரும்பி வாணிபத்தால் பொருள் ஈட்டுவோரும், வடதிசைக்கு இறைவனாகிய குபேரன் புறமுதுகிட்டுப் பின்னிடும் பெருஞ்

1. பெரிய, மநுநீதி: ௩௬.

செல்வத்தையுடையவருமாகி வேதநெறி ஒழுக்கங்களை விரும்பி உயர்ந்த மேம்பாடுள்ள குடிகளாகிய வணிகர்கள் மனமகிழ்ந்து வாழ்கின்ற இடங்கள் பல அவ்விடத்தி லுள்ளன.

(வி - ரை.) வணிகர்கள், பிரமன் தொடையில் தோன்றிய தாக வடமொழி வேதம் கூறுகின்ற மரபுகொண்டு 'வேதன் குறங்கை..............ஆயெனப்படைத்தோர்' என்றார். வணிகர் இயல்பை, [1]'தமவும் பிறவும் ஒப்ப நாடி,' கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது, என்றார் பிறரும். வள்ளுவர் தகையும்,

> [2]"வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
> பிறவும் தமபோற் செயின்."

என்றது காண்க. (௧0௫)

வேளாளர் இருக்கை

முருகுயிர்த் தலர்ந்த மலரவன் தனது
முகமுத லுறுப்பெலாந் தாங்கிச்
சரணமென் றுரைக்கும் உறுப்பினில் தோன்றிச்
சாற்றுமம் முகமுத லுறுப்பின்
வருமொரு மூவர் தங்களை உழவின்
வண்மையால் நிலைபெறத் தாங்கும்
உரியவே ளாண்மை பூண்ட பேர் தமக்கே
உடையவர் இடம்பல அவண.

(பொ - ரை.) மணம்வீசி மலர்ந்த தாமரைமலரை இருக்கையாகக்கொண்ட பிரமனுடைய முகமுதலிய உறுப் புக்களையெல்லாம் தாங்குதலால் அவைகட்குச்சரணமென்று கூறப்படும் காலில் பிறந்து, சொல்லப்படும் அம்முகம் முதலிய உறுப்புக்களில் தோன்றிப் பிறக்கும் அந்தணர் அரசர் வணிகர் ஆகிய மூவர்களையும் உழவுத்தொழிலின் பெருமையால் அம் மூவரும் நிலைபெற்று விளங்க அவர்களை

1. பட்டினப்பாலை: உ0௯-௧0 . 2. திருக்குறள்: ௧௨0.

ஓம்புதலால் உதவியென்னும் தொழிலைத் தமக்கேயுரிமையாகக்கொண்ட வேளாளர் என்னும் பெயருக்கு உரியவர்கள் வாழ்கின்ற இடங்கள் பல அவ்விடத்தில் உள்ளன.

(வி - ரை.) உழவின் வன்மையால் யாவரையும் தாங்குகின்ற சிறப்பால் வேளாளர் என்னும் பெயர்பெற்று விளங்குவோர் வாழுமிடங்கள் பல உள்ளன. உழவின் சிறப்பை, வள்ளுவர், [1]'சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம் அதனால், உழந்தும் உழவே தலை' என்றமை உணர்க. (௧0௬)

### அனுலோமர் முதலியோர் இருக்கை

நால்வகை வருணத் துயர்குடிப் பிறந்த
நல்லவர் இருக்கையைச் சூழ்வ
சால்புறும் அவரில் உயர்ந்தவர் இழிந்தோர்
தங்களுட் குழீஇமணந் தளித்த
பால்படும் ஏனைச் சாதிபே தத்தோர்
பலர்களுந் தத்தம நெறியின்
சீலராய்த் துவன்றி மரபுளி ஒழுகும்
திருமலி பல்வகைக் குடியே.

(பொ - ரை.) அந்தணர் முதலிய நால்வகை வருணமாகிய உயர்குடியில் தோன்றிய நல்லோரது இருக்கையை, மேன்மைமிக்க அந்நான்கு வருணங்களுள் உயர்ந்தோரும் தாழ்ந்தோரும் தங்களுள் நெருங்கிக் கலந்துபெற்ற வகுப்பமைந்த மற்றைச்சாதி வேறுபாடுடையோர்கள் பலரும் தங்கள் தங்களுக்குரிய நடையின் ஒழுக்கத்தையுடையவராகி நெருங்கித் தத்தமக்குக் கூறிய மரபின்நெறியில் நின்று நடக்கின்ற செல்வமிக்க பலவகைக் குடிகளும் சூழா நிற்கும்.

(வி - ரை.) உயர்குலத்து ஆணும் இழிகுலத்துப் பெண்ணுங் கூடிப் பிறந்த அனுலோமர் முதலியோர் வாழ்கின்ற இடங்கள் பலவாகி உள்ளன என்றமையால் இந்நகர் பல்வகைச் சிறப்பும் பாங்கின் ஓங்கியதெனச் சிறப்பித்தவாறும். (௧0௭)

1. திருக்குறள் ௧0௩௧.

கழகம்

வளரிளைத் தருப்பை நுனியெனக் கூர்த்த
மதியினர் தொன்றுதொட் டுடைய
பளகறு கேள்விப் பயிற்சியர் மேற்கோள்
முதற்பகர் மூன்றினுந் தெருட்டி
இளையருக் குணர்த்தும் இலக்கண நெறியோர்
ஈரிரு புலமையர் தம்முட்
களவிகல் இகந்து குழாங்குழாம் ஆகிக்
கலைதெரி கழகமும் பலவால்.

(பொ - ரை.) வளர்கின்ற தருப்பையின் நுனியைப் போலும் கூரிய அறிவினையுடையவரும் தொன்றுதொட்டுள்ள குற்றமற்ற நூற்கேள்வியின் பயிற்சியினையுடையவரும் மேற்கோள் முதலாகக்கூறும் மூன்றினும் நூலினுள்ள ஐயத்தை நீக்கி மாணாக்கர்கட்குப் பொருளை விளக்கிக்காட்டும் இலக்கணநெறியுடையோருமாகிய ஆசுகவி முதலிய நான்கு கவிஞர்களும் தங்களுக்குள் வஞ்சமும் பகையுமாகிய இவற்றினின்றும் நீங்கிக் கூட்டங் கூட்டமாய் நூல்களை ஆராய்கின்ற கல்விச் சாலைகளும் அவ்விடத்திற் பலவுள்ளன.

(வி - ரை.) தருப்பைப் புல்லின் நுனி மிகக் கூரிதாதலால் கல்வியிற் சிறந்த நுண்மதிபடைத்த பேரறிஞர்களின் கூரிய மதிக்கு உவமங்கூறினர். கல்வியிலும் கேள்வி சிறந்ததாதலால் 'பளகறு கேள்விப் பயிற்சியர்' எனச் சிறப்பித்தார் இதனால் கல்வி கேள்விகளான் மிக்க ஆன்றமைந்தடங்கிய கொள்கைச் சான்றோர் பலரும் வாழ்தற்கிடனாகி விளங்கும் சிறப்புடையது என, நகரின் ஏற்றங் கூறினர். இதனால் 'கற்றலிற் கேட்டலே நன்று' என்றார். எனவே, இந்நகர். கல்விகேள்விகளாற் சிறந்த இன்பமிக்க மூதூராதலை அறிக. (௧0அ)

சைவமடம்

காமனை முனிந்து நெடுஞ்சடை தரித்துக்
கவின்றகல் லாடைமேற் புனைந்து
யாமெலாம் வழுத்துந் துறவியென் றிருந்தும்
ஒருத்திதன் இளமுலைச் சுவடு

தோமுறக் கொண்டார் எனச்சிறை யிடல்போற்
சுடர்மனக் குகையுளே கம்பத்து
ஓமொழிப் பொருளை அடக்கியா னந்த
முறுநர்வாழ் இடம்பல உளவால்.

(பொ - ரை.) மன்மதனைச் சினந்தெரித்துத் திக்கினை அளாவ நீண்ட சடைமுடியினைத் தரித்து இயற்கை அழகமைந்த காவியாடையைத் திருஇடைமேல் தரித்திருத்தலால், திருவேகம்பர் நம் எல்லோராலும் வணங்கப்படும் பெருந்துறவினரென்று சரண் அடைந்திருந்தும் ஒருத்தியாகிய உமையம்மையின் இளமை பொருந்திய கொங்கைச் சுவட்டைத் தமது துறவற அங்கத்திற்குக் குற்றம் அமையக்கொண்டார் என்று சிறைச்சாலையில் அடைத்தல்போலத் தமது விளங்குகின்ற மனமாகிய சிறைச்சாலையில் திருவேகம்பத்தில் எழுந்தருளிய ஓங்காரப்பொருளாகிய இறைவரைச் சிறையில் இட்டுப் பேரின்பமடையும் துறவிகள் வாழும் இடங்கள் பலவுள்ளன.

(வி - ரை.) சிவபெருமானாரைத் தம் மனத்தின்கண் நினையாமல் நினைந்து வாழ்கின்ற துறவினர் வாழ்கின்ற இடங்கள் பலவுள்ளன என்றமையால் அந்நகர், ஈசன் நேசத் தொண்டர்கள் விளங்கும்பதி என்பதைக் குறித்தாரெனக் கொள்க. (௧௦௬)

திருக்கோயில்

இருள்மலந் துமிக்குஞ் சிவாகம முறையின்
ஈரிரு பாதமும் அனுட்டித்து
அருள்பெறும் ஆதி சைவர்க ளாதி
அவாந்தர சைவரீ ருனோர்
மருவிவாழ் மாட மாளிகைப் பத்தி
மருங்குடுத் துயர்வனப் பினதால்
தெருள்தரும் அனாதி சைவர்வீற் றிருக்கும்
திவவொளிப் புரிசையே கம்பம்.

**(பொ-ரை.)** உயிர்களுக்குச் சிவஞானம் தந்தருளும் அனாதிசைவராகிய சிவபெருமானார் நிகரின்றி வாழ்கின்ற விளங்கும் ஒளியையுடைய மதில்சூழ்ந்த திருவேகம்பமானது ஓதுவோருடைய ஆணவமலத்தைக் கெடுக்கும் சிவாகம நூலிற்கூறிய முறையால் ஞானம் முதலிய நான்குபாதங் களையும் கைக்கொண்டு திருவருள்பெற்ற ஆதிசைவர் முதலாக அவாந்தர சைவர் இறுதியாக உள்ளோர் தம்முட் கலந்து வாழ்கின்ற மாடம் அமைந்த மாளிகையின் வரிசை களால் பக்கங்களிற் சூழப்பட்டு உயர்ந்துதோன்றும் பொலி வினையுடையது.

**(வி-ரை.)** ஆதி சைவர் முதல் அவாந்தர சைவர் ஈறுனோர் என்றது, ஆதிசைவர், மகாசைவர், அனுசைவர், அவாந்தர சைவர், பிரவரசைவர், அந்தியசைவர் என்னும் ஆறுவகைச் சைவர்களை. இச் சைவர்கள் வாழ்ந்து சைவசமயத்தை மேம்பா டுறச் செய்கின்ற திருநகரம் என, நகரின் சிறப்பை விளக்கினார். (கக0)

திருமதில்

கலிவிருத்தம்

**விண்ணழி வுறநிமிர் வீற டக்குவான்**
**அண்ணலா ணையினிமி லூர்தி யாண்டுறீஇ**
**எண்ணில உருவுகொண் டிருத்து நீரதே**
**பண்ணமை மதில்மிசை இடபப் பந்தியே.**

**(பொ-ரை.)** செயல் முற்றிய மதிலின்மேலுள்ள காளையுருவின் வரிசையானது, வானுலகழிய நிமிர்ந் தோங்கிய அம்மதிலின் செருக்கை அடக்குதற்குச் சிவ பெருமானது ஆணையினால் அவ்விறைவரின் திமிலையுடைய ஊர்தியாகிய நந்திதேவர் அவ்விடத்துப் பொருந்தி அள வற்ற வடிவங்களைக்கொண்டு அவ்வடிவங்களை ஆங்கு இருத்தியிருக்கின்ற தன்மையை ஒக்கும்.

**(வி-ரை.)** மதிலின்மேல் காளை உருவங்கள் வரிசையாக இருத்தலை, சிவபெருமான் ஆணையினால் மதிலின் செருக்கை அடக்குதற்குப் போந்திருக்கின்ற நந்திதேவர் உருவமாக ஆசிரியர் தற்குறிப்பேற்றம் தந்துரைத்தார். (ககக)

திருக்கோபுரம்

ஒன்பது கோள்களும் உலாவி வைகுவான்
ஒன்பது மாடமங் கூறிற் செய்தென
ஒன்பது மணிகளின் இயன்ற ஒண்மைசால்
ஒன்பது நிலைதழீஇ ஓங்குங் கோபுரம்.

(பொ - ரை.) ஒன்பது கோள்களும் உலாவித் தங்குதற்கு ஒன்பது மாடங்களை அங்கு அடுக்காகச் செய்து வைத்தாற்போல, கோபுரங்கள் ஒன்பது மணிகளாற் செய்த ஒளிமிக்க ஒன்பது நிலைகளைத் தழுவி உயர்ந்து தோன்றும்.

(வி - ரை.) ஒன்பது நிலைகளையுடைய கோபுரங்கள் ஒன்பது வகை மணிகளாற் செய்யப்பட்டிருத்தலான் 'ஒன்பது கோள்களும் உலாவி வைகுவான்' என்றார். இதனால் கோபுரங்களின் சிறப்புக் கூறினார். (கசஉ)

கார்முகில் உடுக்கையாக் கதிரின் வானவன்
மார்பணி மணியதா வட்ட மாமதி
சீர்நுதற் பூதியாச் செல்வக் கோபுரம்
பார்புகழ் புருடனில் ஓங்கும் பான்மைத்தே.

(பொ - ரை.) செல்வமிக்க கோபுரமானது கரியமேகம் ஆடையாகவும், கதிர்களையுடைய ஞாயிறு மார்பிலணிந்த மாணிக்கமாகவும், வட்டவடிவாகிய பெரிய திங்கள் அழகிய நெற்றியிலணிந்த திருநீறாகவும் கொண்டு புகழும் உலக வடிவாகிய உலக ஆடவனை (விராட்புருடனை)ப்போல உயர்ந்தோங்கும் தன்மையையுடையது.

(வி - ரை.) கோபுரங்கள் உலக ஆடவனைப் போல உயர்ந்து தோன்றும்; அத்தகைய ஆடவனுக்கு மேகம் ஆடையாகவும், ஞாயிறு மார்பிலணிந்த மாணிக்கமாகவும், திங்கள் நெற்றியிலணிந்த திருநீறாகவும் உருவகஞ்செய்து கூறினார். (கசங)

நச்சியே கம்பரைத் தொழுது நாடொறும்
கச்சியில் வாழ்பவர் இறுதிக் காலையில்!
அச்சிவ லோகத்தை அணுக வைத்ததோர்
பொச்சமில் ஏணியும் போலுங் கோபுரம்.

**(பொ-ரை.)** *கோபுரமானது திருவேகம்பரை விரும்பி நாள்தோறும் தொழுது காஞ்சித்திருப்பதியில் வாழ்கின்றவர், இறக்குங்காலத்தில் உயர்ந்த சிவலோகத்தை அடையும்படி ஏறவைத்த ஒப்பற்ற குற்றம் நீங்கிய ஏணியையும் ஒக்கும்.*

(வி - ரை.) *திருக்கச்சியேகம்பரைத் தொழுவோரான காஞ்சியில் வாழ்வோர், இறுதிக்காலத்தில் சிவபுரம் சேர்தற்கு வைத்துள்ள ஏணிபோன்று கோபுரம் உயர்ந்துள்ளது என்றமையால் திருக்கோயிற் கோபுரத்தின் உயர்ச்சி கூறியவாறும் என்க.* (கக௪)

பரிதியி னிழல்செயக் கதிர்க்கும் பன்மணித்
திருவியல் கோபுரச் செல்வ வாய்தலின்
முரசுகா லந்தொறு முழங்குஞ் செவ்வியென்று
அருகுற அமரரை அழைத்தல் மானவே.

**(பொ - ரை.)** *ஞாயிற்றைப்போல ஒளிவீச விளங்குகின்ற பல மணிகளினால் அமைந்த பொலிவுபெற்ற கோபுரத்தினது செல்வம் அமைந்த வாசலில் உள்ள முரசுகள், இதுதான் சிவபெருமானைத் தொழவருகின்ற அமையமெனத் தேவர்களை அருகில்வர அழைத்தலையொப்பக் காலந்தோறும் முழங்காநிற்கும்.*

(வி - ரை.) *இறைவன் திருக்கோயிலில் முரசு முழங்குதலைச் சிவபெருமானைத் தொழ வருகின்ற சமயம் இதுதான் என்று தேவர்களை அம்முரசு அழைத்தலை ஒக்குமென்று தற்குறிப்பேற்ற அணிபெறக் கூறினர்.* (கக௫)

## *விடைக்கொடி*

மடுத்தவைம் பாசமா அரணம் ஐந்தனுல்
தடுத்தருள் கோயிலில் தம்பி ரானெதிர்
எடுத்தபூங் கொடிமிசை யிடபம் வான்மிசை
அடுத்ததோர் இடபத்தோ டளவ ளாவுமே.

**(பொ - ரை.)** *விட்டுவிடாமல் சூழ்ந்த ஐவகைப்பாசங்களையும் ஐந்துவகைப்பட்ட பிரகாரங்களினால் தடுத்தருளு*

கின்ற திருக்கோயிலில் சிவபெருமானுக்கு எதிரே மேல் எடுத்த பொலிவமைந்த கொடியின்மேல் எழுதிய இடபம், வானில் அடுத்து வாழுகின்ற ஒப்பற்ற இடபராசியோடு கலந்து விளங்கும்.

(வி - ரை.) உயிர்களைக்கட்டி நிற்றலால் 'மடுத்த ஐம்பாசம்' என்றார். ஐந்து பாசங்கள் என்பன, போகமாகிய இன்பத் துன்பங்களைத் தோற்றுவிக்கும் கன்மமலமும், கட்டாகிய தனு கரண புவன போகங்களையும் உயிரையும் கூட்டுவிக்கும் மாயா மலமும், அப் போக பந்தங்களை நுகருமாறு செய்யும் ஆணவ மலமும் அச்சுக துன்ப விளைவுக்கு இடனாய் உயிர்களின் அறிவிச்சை செயல்களை ஏகதேசப்படுத்துகின்ற மாயேயமலமும் அவ்வம்மலங்களை அவ்வத் தொழிற்படுத்திப் பாகம் வருவிக்கின்ற திரோதாயிமலமுமாம். இவற்றின் இயல்புகளை.

[1]'மும்மலம் நெல்லினுக்கு முளையொடு தவிடுமிப்போல்
மம்மர்செய் தனுவின் உண்மை வடிவினை மறைத்துநின்று
பொய்ம்மைசெய் போகபந்த போத்திருத் துவங்கள்பண்ணும்
இம்மலம் மூன்றினோடும் இருமலம் இசைப்பன் இன்னும்.'

[2]"மாயையின் காரியத்தை மாயேய மலம தென்றும்
ஏயும்மும் மலங்கள் தத்தம் தொழிலினை இயற்ற ஏவும்
தூயவன் தனதோர் சத்தி திரோதான கரிய தென்றும்
ஆய்வர்இம் மலங்கள்ஐந்தும் அணுக்களை அணைந்து நிற்கும்.'

எனவரும் சிவஞானசித்தியார்ச் செய்யுளானும் அறிக. (கககூ)

விமானம்

தங்குலத் திறைவிசெய் பூசைச் சால்பினை
அங்கணன் மகிழ்வொடுங் காணும் ஆசையின்
எங்குள வரைகளும் ஈண்டி னுலெனப்
பொங்கெழிற் சிகரங்கள் பொலிந்து தோன்றுமால்.

(பொ - ரை.) தம் குலத்தில் தோன்றிய உமையம்மையின் பூசையின் மேன்மையை, அவ்விடத்து நல்ல மகிழ்ச்சியுடன் காணுகின்ற ஆசையினால் எவ்விடத்துமுள்ள மலைகளும் வந்து நெருங்கினாற்போலத் திருக்கோபுரம் முதலிய

1, 2, சிவஞானசித்தியார், இரண்டாம் சூத்: அகூ-எ.

வற்றிலுள்ள மிகுந்த அழகினையுடைய சிகரங்கள் ( ருங கித் தோன்றாநிற்கும்.

(வி - ரை.) திருக்கோபுர முதலியவற்றிலுள்ள சிகரங்கள் தோற்றமளிக்கின்ற காட்சி, இமயமலையில் உமையம்மை பிறந் தருளிய சார்பினால் நம் மரபில் தோன்றியோர் செய்கின்ற சிவ வழிபாட்டைக் காண்போமென்று ஏனைய மலைகள் வந்து நெருங் கின போன்றிருந்தன என, அக் கோபுர முதலியவற்றின் சிகரத் தின் தோற்றச் சிறப்பை வியப்புற எடுத்துக்கூறினார். (கக௭)

மண்டபம்

**கன்மநோய் குடைபவர் கடப்பச் செய்திடும்**
**பன்மலர் துவன்றிய தீர்த்தப் பாங்கரிற்**
**பொன்மலர் மண்டபம் பொலிந்து தோன்றுவ**
**தென்மணிப் பேழையைத் திறந்த மூடிபோல்.**

(பொ - ரை.) தம்மையடைந்து மூழ்குவோர் கன்ம மலமாகிய நோயினின்றும் விடுபடச் செய்கின்ற பலவகைத் தான பூக்கள் நெருங்கிய தீர்த்தக்கரையின் பக்கத்தில் பொன்னாற் செய்த மண்டபமானது விளங்கி ஞாயிற்றை யொத்த மாணிக்கங்கள் அழுத்திய பெட்டியைத் திறந்த மேல் மூடியைப்போலத் தோன்றாநின்றது.

(வி - ரை.) கன்மமலமாவது உயிரினிடத்து இன்பத் துன்பங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவிப்பது. இது, சிவ தீர்த்தங்களில் விதிப்படி மூழ்குகின்றவர்க்கு இருவினை யொப்பு மலபரிபாகத்தில் வந்த திருவருள் ஞானத்தினால் கழித லால் 'கன்மநோய் குடைபவர் கடப்பச் செய்திடும், பன்மலர் துவன்றிய தீர்த்தம்' என்றார். கன்மமலம் நீங்குமென்பதை,

[1] 'ஏன்றவினை உடலோ டேகுமிடை யேறும்வினை
தோன்றி லருளே சுடும்'

எனவரும் திருவருட் பயனாலும்,

[2] 'வினைப்போக மே ஒரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தால்
தினைப்போ தளவும்நில் லாதுகண்டாய்'

எனவரும் பட்டினத்தார் திருமொழியானும் புலனும் என்பதை உணர்க. (கக௮)

1. திருவருட் பயன், அணைந்தோர்: அ. 2. பட்டினத்தார் பாடல்

வேள்விச் சாலை

அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

சேந்தபொற் குண்டத் தோங்குஞ்
சிகைத்தழல் மிசையே கம்ப
வேந்தையா வாகித் தேத்தும்
புகைபொதி வேள்விச் சாலை
ஏய்ந்தசீர்த் தகர வித்தை
முறைப்படி யிதய கஞ்சப்
பூந்தழற் சிகைமே லீசற்
போற்றுமா யவனை யொக்கும்.

(பொ - ரை.) சிவந்த பொன்னாலமைந்த வேள்விக் குண்டத்தில் உயர்ந்தோங்குகின்ற கொழுந்தினையுடைய வேள்வித்தீயின்மேல் திருவேகம்பத்திறைவரை உள் நுழைவித்து வணங்கும் புகையால் மூடிய வேள்விச்சாலையானது, சிறப்புவாய்ந்த தகரவித்தையின் முறையே மனமென்னும் தாமரைமலராகிய பொலிவுபெற்ற நெருப்புக் கொழுந்தின் மேல் இறைவனை வணங்குகின்ற திருமாலை ஒக்கும்.

(வி - ரை.) வேள்வி, திருமாலும் வேள்விக்கு இறைவர் சிவபெருமானும் ஆவர். அதனால் ஏகம்ப வேந்தை ஆவாகித் தேத்தும் என்றார். தகரவித்தை என்பது பிரமபுரமாகிய இவ்வுடலிலிருக்கும் தகரமாகிய நெஞ்சத்தாமரை மலர்வீட்டுளிருக்கும் தகர வெளியாகிய பரமசிவனை. (கககூ)

மாமூலத்தொருவர்

கோமுறை காம்பாச் சாகை
வட்டமேற் குடையாப் பொற்பின்
வாழிய ஒருமா மீது
வளநிழல் கவிப்ப ஆங்கண்
ஊழ்முறை உயிர்கட் கெல்லாம்
ஐந்தொழில் ஓம்பி யெம்மான்
ஆழ்புனல் உலக மேத்த
அரசுவீற் றிருக்கு மன்னோ.

**(பொ - ரை.)** பொலிவமைந்த ஒரு மாமரமானது கொழுவிய தூரே காம்பாகவும், கிளைகளின் வட்டமே மேற் குடையாகவுங்கொண்டு வளமை வாய்ந்த நிழல் செய்ய, எம்பெருமான் அவ்விடத்துத் தாம் செய்த ஊழின் முறையே அவ்வுயிர்கட்கெல்லாம் படைப்பு முதலிய ஐந் தொழிலையுஞ் செய்து கடல் சூழ்ந்த உலகங்கள் வணங்க அரசியல் செய்து நிகரின்றியிருந்தருள்வார்.

(வி - ரை.) படைப்பு முதலிய ஐந்தொழில்களையும் உயிர் கட்குப் பரிபக்குவம்பெற இறைவன் செய்தருளுவன் ஆத லான்' 'ஊழ்முறை உயிர்கட்கெல்லாம் ஐந்தொழில் ஓம்பி' என் றூர். வாழிய என்பது அசைச்சொல். (கஉ0)

பற்பல தேய மெல்லாம்
பாங்குடைத் தொண்டை நாடு
பற்பல சங்க நாப்பண்
படர்வலம் புரியாம் அங்கட்
பற்பல நகர மெல்லாம்
வட்டமாப் படைத்த காஞ்சி
பற்பல வலம்பு ரிக்குட்
சலஞ்சலப் பணிலம் ஆமால்.

**(பொ - ரை.)** பலபல நாட்டினையெல்லாம் தன்னருகி லுடைய தொண்டை நாடானது. பல இடம்புரிச் சங்கு களின் நடுவே செல்லும் வலம்புரிச்சங்காம்; அந்நாடுகளுள் பல்வகைப்பட்ட எல்லா நகரங்களும் தன்னைச் சூழ்வரப் பட்ட காஞ்சிநகரமானது பலவகைப்பட்ட வலம்புரிச்சங்கு களுள் சலஞ்சலமென்னும் சங்கமாம். ஆல்: அசைநிலை.

(வி - ரை.) ஆயிரஞ் சிப்பிகள் சூழ நடுவிலிருக்குந்தன்மை யது இடம்புரிச்சங்கு; இடம்புரி ஆயிரம் தன்னைச்சூழ நடுவி லிருக்குந் தன்மையது வலம்புரி; வலம்புரி ஆயிரஞ்சூழ நடுவி லிருக்குந் தன்மையது சலஞ்சலம்; சலஞ்சலம் ஆயிரஞ்சூழ நடுவி லிருக்குந் தன்மையது பாஞ்சசன்னியம் என்னுஞ் சங்காம். இத்தன்மை யொப்ப, பல நாடுகளுள் சிறந்தது தொண்டைநாடு; அந்நாட்டிற் சிறந்த நகரம், காஞ்சிநகரம். இதுவும் இதற்கடுத்து வரும் பாட்டும் ஒரு தொடராதலால் குளகமாம். (கஉக)

அத்திருக் காஞ்சி வைப்பின்
அலகிலாத் தலங்கள் தம்முள்
பத்திசேர் மாடக் கம்பம்
பாஞ்சசன் னியமாம் அந்த
உத்தமச் சுரிமு கத்துள்
விலைவரம் புணராச் சாதி
முத்தமே ஒருமா மூலத்
திருந்தருள் முக்கண் மூர்த்தி.

(பொ - ரை.) அந்த அழகிய காஞ்சித்திருநகரில் அளவற்ற தலங்களுள் வரிசையாகவுள்ள மாடங்கள் நெருங்கிய திருவேகம்பமென்னுந் தலம்,பாஞ்ச சன்னியமென்னுஞ் சங்காம், ஒப்பில்லாத மாமரத்தின்கீழ் எழுந்தருளிய இறைவன் அந்த முதன்மைவாய்ந்த பாஞ்சசன்னியத்தில் தோன்றிய விலையினளவறிதற்கரிய ஆணி முத்தாம்.

(வி - ரை.) தொண்டைநாடு, வலம்புரியாகவும், அதனுட் காஞ்சி சலஞ்சலமாகவும், அதனுள் திருவேகம்பம், பாஞ்சசன்னியமாகவும், அங்கெழுந்தருளிய இறைவர் அதில் தோன்றிய முத்தமாகவும் உருவகஞ் செய்தார். (கஉஉ)

பன்மணி வெயில்கள் கான்று
படரிருள் சீப்ப வட்டப்
பொன்மதில் சூழ்ந்து நாப்பண்
சதாசிவப் புத்தேள் வைகும்
தன்மையாற் கச்சி மூதூர்
தரைமிசை உயிர்கள் செய்த
கன்மமோர்ந் தளிப்பான் வந்த
கதிர்செய்மண் டிலமே ஆமால்.

(பொ - ரை.) காஞ்சியென்னும் பழமையான திருநகர், பல மாணிக்கங்கள் ஒளிகளை வீசிப்பரவிய இருளை ஓட்ட வட்டமாகிய பொன்னாலமைந்த மதிலால் சூழப்பட்டு

அதன் நடுவில் சதாசிவமூர்த்தி எழுந்தருளும் தன்மையை யுடைமையால், நிலவுலகின்மேல் உயிர்கள் செய்த கன்மங் களையுணர்ந்து அதற்குத்தக்க இன்பத் துன்பங்களைத் தந்து பாகம் வருவிக்க வந்தருளிய ஞாயிற்று மண்டிலமேயாகும்.

(வி - ரை.) ஞாயிற்று மண்டிலத்தில் சதாசிவப் பெருமான் எழுந்தருளியிருத்தலால் 'சதாசிவப்புத்தேள் வைகும் தன்மை யால் கதிர் செய்மண் டிலமே மானும்' என்றார். இதனால் காஞ்சி நகரத்தின் மேம்பாட்டைக் கூறினார். (கஉரு)

விலக்கிலா அறநூல் சொன்ன
முனிவரும் விதிவி லக்காம்
இலக்கியம் இதன்பாற் கண்டே
இலக்கணம் விதித்தார் போலும்
அலக்கணீத் தறமெண் நான்கும்
அம்பையே வளர்க்கும் நீராற்
கலக்கமில் அறங்கட் கெல்லாம்
ஆகரங் காஞ்சி அன்றே.

(பொ - ரை.) துன்பத்தினின்றும் நீங்கிய முப்பத் திரண்டு அறங்களையும் உமையம்மையே வளர்க்கின்ற தன் மையினால் நிலைகலங்குதலில்லாத அறங்கட்கெல்லாம் பிறப் பிடம் காஞ்சித்திருநகரம் ஆதலால், யாவரும் கைக்கொள்ள அறநூலை வகுத்த முனிவர்களும் தாம் கூறுகின்ற விதி விலக்காகிய இலக்கியங்கட்கு இத்திருநகரிடத்தில் கண்டே இலக்கணங்களை அமைத்தனர்போலும்.

(வி-ரை.) விதித்தன செய்தலும் விலக்கியனவொழிதலுமே அறம் ஆதலால் விதிவிலக்காம் இலக்கியம் எனவும், இலக்கியத் தின் அமைதியே இலக்கணம் ஆதலினால் அறத்தின் அமைதி முற்றும் காஞ்சித்திருப்பதியில் நிரம்பியிருத்தலால் இதன்பாற் கண்டே இலக்கணம் அமைத்தார்போலும் என்றார் (கஉசு)

உவரிசூழ் உலக வைப்பின்
உரையமை கேள்வி சான்ற
கவிகளென் றுரைப்போர் தம்முட்
காஞ்சியைப் புகழா ரில்லை

அவரெலாம் புகழ்ந்தும் இன்னும்
உலப்புறு அதன்சீர் முற்றும்
சிவநிறை கல்வி சாலாச்
சிறியனே கிளக்க வல்லேன்.

**(பொ - ரை.)** கடல்சூழ்ந்த நிலவுலகிலுள்ள புகழ் அமைந்த நூற்கேள்விகள் நிறைந்த கவிகளென்று சொல்லப்படுவோருள் காஞ்சிநகரைப் புகழ்ந்து கூறுதார் உலகில் இல்லை; அக்கவிகள் எல்லோராலும் புகழப்பட்டும் இன்னும் வரையறைப்படாத அத் திருநகரின் சிறப்பு முழுமையும் நன்மை நிறைந்த கல்வியிற் போதாத அறிவிற் சிறிய நானே அளவிட்டுச் சொல்லவல்லேன். (அல்லேன் என்ற படியாம்.)

(வி - ரை.) கவிகள் என்றது, ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்னும் கவிகள் பாடவல்ல புலவர் பெருமக்களை. இதனைக் 'கவிகமகள் வாதியே வாக்கியெனக் காசில், புவியின்மேல் நால்வர் புலவர்' என்றும், 'கவிகள்தாம் ஆசு மதுரமே சித்திரம் வித்தாரம் எனப், பேசுவர் நால்வர்க்கும் பேர்' என்றும் வரும் வச்சணந்தி மாலைச் செய்யுளான் அறிக. (கஉ௯)

இத்திருக் காஞ்சி வைப்பிற்
பலதளி யிடத்து மேவி
அத்தகு கம்ப வாணர்
அவரவர்க் கருளிச் செய்த
உத்தமக் காதை யெல்லாஞ்
சூதனன் றுரைத்த வாறே
முத்தமிழ் அறிஞர்தேற
மொழிபெயர்த் துரைப்பேன் உய்ந்தேன்.

**(பொ - ரை.)** அந்த மேன்மைபொருந்திய ஏகம்ப வாணர் இந்தச் சிறந்த காஞ்சிநகரில் உள்ள பல திருக்கோயில்களில் இடங்கொண்டருளி, ஒன்றனை வேண்டி வழிபாடு செய்கின்ற அவரவர்க்கு அருள்கூர்ந்த வரலாறு முழுமையும் சூதமுனிவர் அக்காலத்தில் கூறியபடியே ...ல் ...சை நாடகம் என்னும் முத்தமிழில் தேர்ச்சி...

யுடைய சான்றோர் தெளிவுபெற வடமொழியினின்றும் தென்மொழியில் பெயர்த்துக்கூறத் தொடங்குகின்ற யான் பிறவிக்கடலினின்றும் தப்பி உய்ந்தேனாவேன்.

(வி - ரை) தளி - திருக்கோவில். கம்பவாணர் - திருவேகம்பநாதர். இறைவன் திருவிளையாடல்களை நன்கெடுத்து இதன் கண் மொழிதலால் 'உத்தமக் காதையெல்லாம்' என்றார். உய்வேன் என்னாது உய்ந்தேன் என்று இறந்த காலத்தாற் கூறியது துணிவுபற்றி வந்த கால வழுவமைதி. ஆண்டவன் பொருள்சேர் புகழைக் கூறுதலால் பிறப்பிறப்பற்ற வீடுபேறுற்று இன்பமடைந்தேனென்பாராய் இவ்வாறு கூறினாரென்க. (கஉ௬)

ஆகத் திருவிருத்தம்—உகஅ.

திருநகரப்படலம் முற்றிற்று.

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை